றாயர் தம்மொடு தாழ்ந்துபல் வேத்திக்
கைக்கொண் டெடுத்த கடவுட் கடிஞையொடு
பிக்குணிக் கோலத்துப் பெருந்தெரு வடைதலு
மொலித்தொருங் கீண்டிய வூர்க்குறு மாக்களு
சுo மெலித்துகு நெஞ்சின் விடருந் தூர்த்தரும்
கொடிக்கோ சம்பிக் கோமக னாகிய
வடித்தேர்த் தானை வத்தவன் றன்னை
வஞ்சஞ் செய்துழி வான்றளை விடீஇய
வுஞ்சையிற் றோன்றிய யூகி யந்தண
சுரு னுருவுக் கொவ்வா வுறுநோய் கண்டு
பரிவுறு மாக்களிற் றாம்பரி வெய்தி

தாயர் - மாதவி, சுதமதி.

ருஎ. கடிஞை - பிச்சைப்பாத்திரம்.

ருஅ. பிக்குணிக்கோலத்து - பிக்குணிக்கோலத்துடன்; துறந்தோர்களில் ஆண்பாலாரைப் பிக்ஷுக்களென்றும், பெண்பாலாரைப் பிக்ஷுணிகளென்றுங்கூறுதல் பௌத்தசம்பிரதாயம்; கோலம் - வேடம்.

ருரு - ருஅ. மணிமேகலை எத்திக் கடிஞையொடு கோலத்தொடு பெருந்தெரு வடைதலுமென்க.

இனிப் பெருந்தெருவிற் பிச்சைக்குப் போந்த மணிமேகலையின் பிக்குணிக் கோலத்தைக் கண்டோருடைய மனவருத்தத்தைக்கூறுவார்.

ருகூ. குறுமாக்கள் - அறிவில்லாத சிறியர்; "அடர்க்குறு மாக்கள்" என்றார் முன்னும்; கரு - ம் காதை, சo; "மடக்குறு மாக்கள்" என்பது கலித்தொகை, அஉ. 'ஒளித்தொருங் கீண்டிய' என்றும் பாடம்.

சுo. மெலிந்து - மெலித்தென்றுயது விகாரம். விடருந் தூர்த்தரும்:—கச-ம் காதை, சுக. 'விடமருந் தூர்த்தரும்' என்றும் பாடம்.

சுக. கோசம்பி - கௌசாம்பிநகரம்; இது, முதலிற் குசாம்பனென்பவனாற் செய்யப்பட்டதாதலின், இப்பெயர் பெற்றதென்பர்; பாகதம்; "கொடியணி நெடுமதிற் கொடிக்கோசம்பி" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், வயந்தகனகன்றது. கோமகனாகிய - அரசனாகிய.

சுஉ. வடி - திருத்தம்; "வானுட்கும் வடிநீண்மதில்" என்பது புறநானூறு, கஅ. வத்தவன் - வத்ஸதேசத்தரசனாகிய உதயணன்; "வயந்தககுமரன் வத்சவற்குரைப்ப" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், ஊர்தீயிட்டது.

சுஉ - சுங. வத்தவன்றன்னை வஞ்சஞ் செய்துழி - (தனக்குத் திறைகொடா [illegible] னுந் தன்மந்திரியால் யந்திரயானையைக் காட்டி வஞ்சமாகப்பிடிப்பித்துப் பிரச்சோதனனென்னு மரசன்) உதயணனைச் சிறைப்படுத்தியபொழுது.

சுச. உஞ்சையில் - உச்சயினிநகரத்தில்; இஃது அவந்திநாட்டிலுள்ளது; பிரச்சோதனனுடைய இராசதானி; இதையே அவந்தியென்றும் வழங்குவர். தோன்றிய - வேற்றுருவங்கொண்டு தோன்றிய; யூகியந்தணன் - இவன் பிரமசுந்தரயோகியென்பவருடைய குமாரன். உதயணனுடைய மந்திரிகள் நால்வருளொருவன்.

சுசு. பரிவுறுமாக்களில் - துன்பமுற்ற சனங்களைப்போல.

சுக - சுசு. பிரச்சோதனன் உதயணனை வஞ்சித்துச் சிறைப்படுத்தியபொழுது அவனைச் சிறைமீட்டற்கு யூகியென்பவன் மாறுவடிவங்கொண்டு உச்சயினிநகரப் பெருந்தெருவையடைந்ததும், அவனைக்கண்டோர் பலரும் பரிவுற்றுச் சூழ்ந்ததுமாகியவிவற்றை உதயணகுமாரகாவ்யத்துள்ள உஞ்சைக்காண்டத்தாலுணர்க. பெருங்கதையென்று வழங்

யுதைய குமா ருளங்கொண் டொளித்த
மதுமலர்க் குழலாள் வந்து தோன்றிப்
பிச்சைப் பாத்திரங் கையினேந் தியது
௭௦ திப்பிய மென்றே சிந்தைநோய் கூர
மணமனை மறுகின் மாதவி யீன்ற
வணிமலர்ப் பூங்கொம் பகமலி யுவகையிற்
பத்தினிப் பெண்டிர் பண்புட னிடூஉம்
பிச்சை யேற்றல் பெருந்தக வுடைத்தெனக்
௭௫ குளனணி தாமரைக் கொழுமலர் நாப்ப
ணொருதனி யோங்கிய திருமலர் போன்று
வான்றரு கற்பின் மனையுறை மகளிரிற்
றான்றனி யோங்கிய தகைமைய ளன்றே
வாதிரை நல்லா ளவண்மனை யிம்மனை
௮௦ நீபுகல் வேண்டு நேரிழை யென்றனள்
வடதிசை விஞ்சை மாநகர்த் தோன்றித்
தென்றிசைப் பொதியிலோர் சிற்றியாற் றடைகரை
மாதவன் றன்னால் வல்வினை யுருப்பச்
சாபம் பட்டுத் தனித்துய ருழாஉம்
௮௫ வீவில் வெம்பசி வேட்கையொடு திரிதருங்

குகின்ற உதயணன் கதையென்னும்ப ழையதமிழ்நூலில் இவ்வரலாற்றைக்கூ றும்பாகங் கிடைக்கவில்லை.

௭௦. திப்பியம் - ஈண்டு ஆச்சரியமெ ன்னும்பொருளைத்தந்து நின்றது. சிந்தை நோய்கூர - மனவருத்தமிக; சிந்தை - சிந்தாகுலம்; "என்றுண்டாங் கொல்லி னிக் கட்படு நாளெனுஞ் சிந்தையே" என்பது சீவகசிந்தாமணி, குணமாலை யாரிலம்பகம், ௩௦௧.

௬௧ - ௭௦. குறுமாக்களும் விடரும் தூர்த்தரும், மாக்களிற் பரிவெய்தி, குழ லாள் தோன்றி ஏந்தியது திப்பியமெ ன்று நோய்கூரவெனக.

௭௨. பூங்கொம்பு-மணிமேகலை. 'அணி மலர்ப் பூங்கொடி' என்றும் பாடம்.

௭௨ - ௭௪. பூங்கொம்பு பத்தினிப்பெ ண்டிர் இடூஉம் பிச்சையேற்றல் பெருந்தக வுடைத்தெனக்கூற.

௭௫ - ௭௬. ௬ - ம் காதை, ௮ - ௯.

௭௭. வான்றருகற்பு - மழையைப்பெ ய்விக்குங்கற்பு; "ஆங்கவை யொழிகு வை யாயி னுயிழை, யோங்கிரு வான த்து மழையுநின் மொழியது" என்று பின்வருதல்காண்க; ௨௨ - ம் காதை, ௯௮ - ௯௯; "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெ னப் பெய்யு மழை" என்பது திருக்குறள், ௫௫. "வறனோடின் வையகத்து வான் றருங் கற்பினாள்" என்பது கலித்தொ கை, ௧௬.

௭௬ - ௭௮. திருமலர்போன்று ஆதி ரைநல்லாள் தான் தனியோங்கிய தகை மையளன்றேவெனக.

௮௧. வடதிசை விஞ்சைமாநகர் - வட திசையிலுள்ள வித்தியாதரநகரமாகிய கா ஞ்சனபுரத்தில்.

௮௨. பொதியில் - பொதியின்மலை.

௮௩. வல்வினை யுருப்ப - வலியதீவினை யழல; உருப்ப - தோன்றவென்றுமாம்.

௮௩ - ௮௪. மாதவன்றன்னாற் சாபம் பட்டு.

றாயர் தம்மொடு தாழ்ந்துபல வேத்திக்
கைக்கொண் டெடுத்த கடவுட் கடிஞையொடு
பிக்குணிக் கோலத்துப் பெருந்தெரு வடைதலு
மொலித்தொரூஉங் கிண்டிய வூர்க்குறு மாக்களு
சுo மெலித்துகு நெஞ்சின் விடரும் தூர்த்தரும்
கொடிக்கோ சம்பிக் கோமக னாகிய
வடித்தேர்த் தானை வத்தவன் றன்னை
வஞ்சஞ் செய்துழி வான்றளை விடீஇய
வுஞ்சையிற் றோன்றிய யூகி யந்தண
சுரு னுருவுக் கொவ்வா வுறுநோய் கண்டு
பரிவுறு மாக்களிற் றம்பரி வெய்தி

௩௬. தாயர் - மாதவி, சுதமதி.
௩௭. கடிஞை - பிச்சைப்பாத்திரம்.
௩௮. பிக்குணிக்கோலத்து - பிக்குணிக்கோலத்துடன்; துறந்தோர்களில் ஆண்பாலாரைப் பிக்ஷுக்களென்றும், பெண்பாலாரைப் பிக்ஷுணிகளென்றுங் கூறுதல் பௌத்தசம்பிரதாயம்; கோலம் - வேடம்.

௩௬ - ௩௮. மணிமேகலை எத்திக் கடிஞையொடு கோலத்தொடு பெருந்தெரு வடைதலுமென்க.

இனிப் பெருந்தெருவிற் பிச்சைக்குப் போந்த மணிமேகலையின் பிக்குணிக் கோலத்தைக் கண்டோருடைய மனவருத்தத்தைக்கூறுவார்.

௩௯. குறுமாக்கள் - அறிவில்லாதசிறியர்; "அடர்க்குறு மாக்கள்" என்றார் முன்னும்; கூ - ம் காதை, ௬௦; "மடக்குறு மாக்கள்" என்பது கலித்தொகை, ௮௨. 'ஒளித்தொரூஉங் கிண்டிய' என்றும் பாடம்.

௪௦. மெலிந்து - மெலித்தென்றாயது விகாரம். விடரும் தூர்த்தரும்:—௧௮-ம் காதை, ௬௧. 'விடமரும் தூர்த்தரும்' என்றும் பாடம்.

௪௧. கோசம்பி - கௌசாம்பிநகரம்; இது, முதலிற் குசாம்பனென்பவனாற் செய்யப்பட்டதாதலின், இப்பெயர் பெற்றதென்பர்; பாகதம்; "கொடியணி நெடுமதிற் கொடிக்கோசம்பி" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், வயந்தகனகன்றது. கோமகனாகிய - அரசனாகிய.

௪௨. வடி - திருத்தம்; "வானுட்கும் வடி நீண்மதில்" என்பது புறநானூறு, ௧௮. வத்தவன் - வத்ஸதேசத்தரசனாகிய உதயணன்; "வயந்தககுமரன் வதத்வற் குணாப்ப" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், ஊர்தீயிட்டது.

௪௨ - ௪௩. வத்தவன்றன்னை வஞ்சஞ் செய்துழி - (தனக்குத் திறைகொடாததுபற்றிச் சினந்து சாலங்காயனனென்னும் தன்மந்திரியால் யந்திரயானையைக் காட்டி வஞ்சமாகப்பிடிப்பித்துப் பிரச்சோதனனென்னு மரசன்) உதயணனைச் சிறைப்படுத்தியபொழுது.

௪௪. உஞ்சையில் - உச்சயினிநகரத்தில்; இஃது அவந்திநாட்டிலுள்ளது; பிரச்சோதனனுடைய இராசதானி; இதையே அவந்தியென்றும் வழங்குவர். தோன்றிய-வேற்றுருவங்கொண்டு தோன்றிய; யூகியந்தணன் - இவன் பிரமசுந்தர யோகியென்பவருடைய குமாரன், உதயணனுடைய மந்திரிகள் நால்வருளொருவன்.

௪௬. பரிவுறுமாக்களில் - துன்பமுற்ற சனங்களைப்போல.

௪௧ - ௪௬. பிரச்சோதனன் உதயணனை வஞ்சித்துச் சிறைப்படுத்தியபொழுது அவனைச் சிறைமீட்டற்கு யூகியென்பவன் மாறுவடிவங்கொண்டு உச்சயினிநகரப் பெருந்தெருவையடைந்ததும், அவனைக்கண்டோர் பலரும் பரிவுற்றச் சூழ்ந்ததுமாகியவிவற்றை உதயணகுமாரகாவ்யத்துள்ள உஞ்சைக்காண்டத்தாலுணர்க. பெருங்கதையென்று வழங்

யுதைய குமர னுளங்கொண் டொளித்த
மதுமலர்க் குழலாள் வந்து தோன்றிப்
பிச்சைப் பாத்திரங் கையினேந் தியது
௭0 திப்பிய மென்றே சிந்தைநோய் கூர
மணமனை மறுகின் மாதவி யீன்ற
வணிமலர்ப் பூங்கொம் பகமலி யுவகையிற்
பத்தினிப் பெண்டிர் பண்புடை னிடூஉம்
பிச்சை யேற்றல் பெருந்தக வுடைத்தெனக்
௭௫ குளனணி தாமரைக் கொழுமலர் நாப்ப
ணொருதனி யோங்கிய திருமலர் போன்று
வான்தரு கற்பின் மனையுறை மகளிரிற்
றான்றனி யோங்கிய தகைமைய ளன்றே
வாதிரை நல்லா ளவண்மனை யிம்மனை
௮0 நீபுகல் வேண்டு நேரிழை யென்றனள்
வடதிசை விஞ்சை மாநகர்த் தோன்றித்
தென்றிசைப் பொதியிலோர் சிற்றியாற் றடைகரை
மாதவன் றன்னால் வல்வினை யுருப்பச்
சாபம் பட்டுத் தனித்துய ருறாஉம்
௮௫ வீவில் வெம்பசி வேட்கையொடு திரிதரும்

குகின்ற **உதயணன் கதையென்னும்** பழையதமிழ்நூலில் இவ்வரலாற்றைக்கூறும்பாகங் கிடைக்கவில்லை.

௭0. திப்பியம் - ஈண்டு ஆச்சரியமென்னும்பொருளைத்தந்து நின்றது. சிந்தைநோய்கூர - மனவருத்தமிக; சிந்தை - சிந்தாகுலம்; "என்றுண்டாங் கொல்வினிக் கட்படு நாளெனுஞ் சிந்தையே" என்பது **சீவகசிந்தாமணி**, குணமாலையாரிலம்பகம், ௩0௧.

௬௯ - ௭0. குறுமாக்களும் விடரும் தூர்த்தரும், மாக்களிற் பரிவெய்தி, குழலாள் தோன்றி ஏந்தியது திப்பியமென்று நோய்கூரவென்க.

௭௨. பூங்கொம்பு-மணிமேகலை. 'அணிமலர்ப் பூங்கொடி' என்றும் பாடம்.

௭௨ - ௭௪. பூங்கொம்பு பத்தினிப்பெண்டிர் இடும் பிச்சையேற்றல் பெருந்தக வுடைத்தெனக்கூற.

௭௫ - ௭௬. ௬ - ம் காதை, ௮ - ௧.

௭௭. வான்தருகற்பு - மழையைப்பெய்விக்குங்கற்பு; "ஆங்கவை யொழிகுவை யாயி னாயிழை, யோங்கிரு வானத்து மழையுநின் மொழியது" என்று பின்வருதல்காண்க; ௨௨ - ம் காதை, ௬௮ - ௬௯; "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை" என்பது **திருக்குறள்**, ௫௫. "வறனோடின் வையகத்து வான்றருங் கற்பினாள்" என்பது **கலித்தொகை**, ௧௬.

௭௬ - ௭௮. திருமலர்போன்று ஆதிரைநல்லாள் தான் தனியோங்கிய தகைமையளன்றேவென்க.

௮௧. வடதிசை விஞ்சைமாநகர் - வடதிசையிலுள்ள வித்தியாதரநகரமாகிய காஞ்சனபுரத்தில்.

௮௨. பொதியில் - பொதியின்மலை.

௮௩. வல்வினை யுருப்ப - வலியதீவினை யழல; உருப்ப - தோன்றவென்றுமாம்.

௮௩ - ௮௪. மாதவன்றன்னாற் சாபம் பட்டு.

காயசண் டிகையெனுங் காரிகை தானென

பாத்திரங்கொண்டு பிச்சைபுக்ககாதை முற்றிற்று.

அசு. காரிகை - பெண்.

அக - அசு. தோன்றி அடைகாயில் மாதவனாற்சாபம்பட்டுத்திரிதருங் காயசண்டிகையெனுங்காரிகையென்க; கஎ-ம் காதை, உக - எரு; உ0 - ம் காதை, உஉ - உசு.

அ0 - அசு. என்றனள் காயசண்டிகை

க - அசு. "மாதே, கேளாய்; நல்லாசென்றெய்தி ஊட்டலும், முனிவன் 'ஒருவன்றேன்றும்; அவன் பூண்பானல்லன்; அகவையிற்றான்' என, நீத்தோன் ஒழியானாதலின், ஒருதானாகிப் போழ்தத்துத்தோன்றினன்; அப்போழ்தத்து நன்னீர் போதொடு சொரிந்தது; மாதவர் வியந்து அறிகுவமென்று பாவைபாற்சேறலும், அஃது 'அறவணனறியும்' என்று என்னாவை வருத்திற்று; இது கேள்; மண்ணாள்வேந்தன் வணங்கிப் பெற்றேனென்றுவளர்ப்ப, உண்மையின், அவன் வேந்தனாயினன்; அலத்தற்காலை ஆகியது; ஒழித்தல் தகாது" என மாதவனுரைத்தலும், மணிமேகலை தாயரொடு தாழ்ந்தேத்திக் கடிஞையொடு கோலத்தொடு பெருந்தெருவடைதலும், மாக்களும் விடரும் தூர்த்தரும் பரிவெய்தித் திப்பியமென்று நோய்கூரப் பூங்கொம்பு 'பெருந்தகவுடைத்து' என, அதுகேட்டுக் காரிகை, 'நீ புகல்வேண்டும்' என்றனளென வினைமுடிவுசெய்க.

பதினாறாவது

# ஆதிரைபிச்சையிட்டகாதை.

[பதினாறாவது மணிமேகலைக்கு ஆதிரையென்னும் பத்தினிப்பெண்டிர் பாத்தூணீத்தபாட்டு.]

ஈங்கிவள் செய்தி கேளென விஞ்சையர்
பூங்கொடி மாதர்க்குப் புகுந்ததை யுரைப்போ
ளாதிரை கணவ னாயிழை கேளாய்
சாதுவ னென்போன் றகவில னாகி
௫ அணியிழை தன்னை யகன்றனன் போகிக்
கணிகை யொருத்தி கைத்தூ ணல்க
வட்டினுஞ் சூதினும் வான்பொருள் வழங்கிக்
கெட்ட பொருளின் கிளைகே டுறுதலிற்
பேணிய கணிகையும் பிறர்நலங் காட்டிக்
௧௦ காண மிலியெனக் கையுதிர்க் கோடலும்
வங்கம் போகும் வாணிகர் தம்முடன்
றங்கா வேட்கையிற் றானுஞ் செலவுழி

௧. ஈங்கிவள் - ஒருசொல்; இவள் - ஆதிரை.

௧-௨. விஞ்சையர்பூங்கொடி - காயசண்டிகை. மாதர்க்கு - மணிமேகலைக்கு; ஆதிரைக்கென்றுமாம். மாதர்க்கு உரைப்போளென்க. புகுந்ததை - (ஆதிரைக்குச்) சம்பவித்ததை.

௩-௪. கணவன் சாதுவனென்போன்.

௫. ஆதிரையைப் பிரிந்துசென்று.

௬. கணிகை - வேசை. கைத்தூண் - (தீய) ஒழுக்கத்தால் வந்த உணவு; கை - ஒழுக்கம்; "கடவ தன்றுநின் கைத்தூண் வாழ்க்கை" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, ௨௭. நல்கவென்பதன்பின் 'உண்டு' என்று ஒருசொல் வருவிக்க.

௭. வட்டினும் — - வட்டாடலினும் சூதாடலினும். வழங்கி - கொடுத்து. வட்டு சூது :— ௧௪ - ம் காதை, ௧௩.

௮. கணிகைக்கும் வட்டிற்கும் சூதிற்கும் கொடுக்கப்படுதல்பற்றி, 'கெட்ட பொருள்' என்றார். பொருளின்கிளை - பொருளின்பகுதிகள்.

௧௦. காணமிலி - பொன்னில்லாதவன். கையுதிர்க்கோடலும், உம் - உடனிகழ்ச்சி; "நீயெனப் பேச லோடும்...... மயங்கி வீழ்ந்தான்" என்புழிப்போல. இது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௩௫௦. 'கையுதிர்க்கோடல்' என்பதன் பொருளை, ௩ - ம் காதை, ௧௦௧ - ம் அடிக்குறிப்பிற் பார்க்க; ௫ - ம் காதை, ௫௫.

௮ - ௧௦. கேடுறுதலிற் கையுதிர்க்கோடலுமென்க.

௧௧. வாணிகர் - வியாபாரிகள்.

௧௨. தங்கா வேட்கை - பலவிட[illegible] செல்லவேண்டுமென்ற விருப்பம் தானென்றது - சாதுவனை.

நளியிரு முந்நீர் வளிகலன் வெளவ
வொடிமரம் பற்றி யூர்திரை யுதைப்ப
கரு நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்
பக்கஞ் சார்ந்தவர் பான்மைய னாயின
னாவாய் கேடுற நன்மரம் பற்றிப்
போயினன் றன்னோ டுயிருய்ப் போந்தோ
ரிடையிருள் யாமத் தெறிதிரைப் பெருங்கட
உo லுடைகலப் பட்டாங் கொழிந்தோர் தம்முடன்
சாதுவன் றானுஞ் சாவுற் றனென
வாதிரை நல்லா ளாங்கது தான்கேட்
டேரி ரேயோ வெள்ளழ லீமந்
தாரீ ரோவெனச் சாற்றினள் கழறிச்
உரு சுடலைக் கானிற் றொடுகுழிப் படுத்து
முடலை விறகின் முளியெரி பொத்தி
மிக்கவென் கணவன் வினைப்பய னுய்ப்பப்

கரு. வளி - காற்று. கலன் - கப்பல். காற்றாற் கப்பல் கவிழ.

கச. ஒடிமரம் - பாய்மரத்தின் ஒடிந்த துண்டம்; "கூம்பிற்ற துண்டந் தழுவிக் கிடந்தான்" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், உக. உதைப்ப - செலுத்த; "ஓடுந் திரைக ளுதைப்ப வுருண்டுருண்டு" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், உச.

கரு. நாகரென்பதன்பொருளை, அ - ம் காதை, கூச - ம் அடிக்குறிப்பிற்பார்க்க. உடையில்லாமற் சஞ்சரிப்பவராதலின், நாகா, 'நக்கசாரணர்' எனப்பட்டார். நக்கம்=நக்நம் - நிருவாணம். சாரணரா கிய நாகர். நக்கசாரணர் நாகர் :—கசு - ம் காதை, கூக.

கசு. பான்மை - பகுதித்தன்மை, கூ - ம் காதை, கூகூ.

கூ-கசு. கணவன் சாதுவனென்போன், அவன் ஆகிப் போகி உண்டு வழங்கிச் செல்வழி வௌவுதலாற் பற்றிச் சார்ந்து அவர்பான்மையனாயினனென்க.

சாதுவன் கடலில் இறந்தானென்று கேட்ட ஆதிரையின்செய்தியை இனிக் கூறுவார்.

கஅ. போயினன் - சாதுவன். உய்ய - பிழைக்க.

கக. இடையிருள்யாமத்து - இருளை யுடைய இடையாமத்தில்; யாமம் - இரவு; "யாரு மும்பக லும்மறி யாமையால்" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், கoசு.

உo. கஅ - ம் காதை, கூச. உடைகலப்பட்டு - உடைந்தகப்பலில் அகப்பட்டு. ஒழிந்தோர் - இறந்தோர்.

உக. என - என்றுசொல்ல.

கஅ - உக. போந்தோர் சாவுற்றனென.

உக. ஈமம் - பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு; மயானமுமாம்.

உச. தாரீர் - தருவீர்.

உரு. சுடலைக்கான் - மயானம். படுத்து - செய்து. தொடுகுழிப்படுத்தல்:— சு - ம் காதை, சுசு.

உசு. முடலைவிறகு - முறுக்குண்ட விறகு; "முடலை யாக்கை முழுவலி மாக்கள்" என்பது பெரும்பாணாற்றுப் படை, சுக. பொத்தி - மூட்டி; "தீய ழற் பொத்தி" என்றார் முன்னும்; உ-ம் காதை, ௬௯.

உஎ. உய்ப்ப - செலுத்த.

புக்குழிப் புகுவே னென்றவள் புகுதலும்
படுத்துடன் வைத்த பாயற் பள்ளியு
கூ0 முடுத்த கூறையு மொள்ளெரி யுறாஅ
தாடிய சாந்தமு மசைந்த கூந்தலிற்
சூடிய மாலையுந் தொன்னிறம் வழாது
விரைமலர்த் தாமரை யொருதனி யிருந்த
திருவின் செய்யோள் போன்றினி திருப்பத்
கூரு தீயுங் கொல்லாத் தீவினை யாட்டியேன்
யாது செய்கே னென்றவ ளேங்கலு
மாதிரை கேளுன் னரும்பெறற் கணவனை
யூர்திரை கொண்டாங் குய்ப்பப் போகி
நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்
ச0 பக்கஞ் சேர்ந்தனன் பல்லியாண் டிரான்
சந்திர தத்த னெனுமோர் வாணிகன்
வங்கந் தன்னொடும் வந்தனன் றோன்று
நின்பெருந் துன்ப மொழிவாய் நீயென
வந்தரந் தோன்றி யசரீரி யறைதலு
சரு மையரி யுண்க ணழுதுயர் நீங்கிப்
பொய்கைபுக் காடிப் போதுவாள் போன்று
மனங்கவல் வின்றி மனையகம் புகுந்தென்
கண்மணி யனையான் கடிதீங் குறுகெனப்
புண்ணிய முட்டாள் பொழிமழை தரூஉ
ரு0 மரும்பெறன் மரபிற் பத்தினிப் பெண்டிரும்

உஅ. புக்குழி - புக்கவிடத்து. அவள் - ஆதிரை.

கஅ - உஅ. போந்தோர் ஒழிந்தோர் தம்முடன் சாதுவனும் சாவுற்றானென, நல்லாள் அதுகேட்டுக் கழறிப் படுத்துப் பொத்தி அதிற்புகுதலுமென்க.

உகூ. பாயற்பள்ளி - படுக்கையிடம். 'படுத்துட னமைத்த பாவனைப் பள்ளியும்' என்றும் பாடம்.

கூ0. உறாது - உறாமல்.

கூக. ஆடிய - பூசிய.

கூஉ. வழாது - வழுவாமல்.

கூகூ. தாமரை - தாமரைமலரில்.

கூச. திருவின்செய்யோள் - திருமகள். இ - ம் காதை, ச.

கூசு. யாதுசெய்கேன் - என்னசெய்வேன். அவள் - ஆதிரை.

கூஎ. அரும்பெறற்கணவன் - பெறுதற்கரியகணவன்.

சச. அந்தரம் - ஆகாயம். அசரீரி - அருவமாய் எங்கும் நிறைந்துள்ள முதற்றெய்வம்.

சரு. 'அழியாது நீங்கி' என்றும்பாடம்.

சசு. போதுவாள் - வருவாள்.

சஎ. கவல்வு - கவலையடைதல். மனையகம் - மனையிடம்.

சஅ. கண்மணியனையான் - கணவன். உறுகவென்று.

சகூ. முட்டாள் - வழுவாளாய்.

ரு0. பெண்டிரும், உம்மை - உயர்வு சிறப்பு.

விரும்பினர் தொழூஉம் வியப்பின ளாயின
ளாங்கவள் கணவனு மலைநீ ரடைகரை
யோங்குயர் பிறங்க லொருமர நீழன்
மஞ்சுடை மால்கட லுழந்தநோய் கூர்ந்து
௫ துஞ்சுதுயில் கொள்ளவச் [illegible] வாழு
நக்க சாரணர் நயமிலர் தோன்றிப்
பக்கஞ் சேர்ந்து பரிபுலம் பினனிவ
ன்றனே தமியன் வந்தன னளிய
னூனுடை யிவ்வுடம் புணவென் றெழுப்பலு
௬0 மற்றவர் பாடை மயக்கறு மரபிற்
கற்றன னாதலிற் கடுந்தொழின் மாக்கள்
சுற்று நீங்கித் தொழுதுரை யாடி
யாங்கவ ருரைப்போ ரருந்திறல் கேளா
யீங்கெங் குருமக னிருந்தோ னவன்பாற்
௬௫ போந்தரு ளீயென வவருடன் போகிக்
கள்ளடு குழிசியுங் கழிமுடை நாற்றமும்
வெள்ளென் புணங்கலும் விரவிய விருக்கையி
லெண்குதன் பிணவோ டிருந்தது போலப்
பெண்டுட னிருந்த பெற்றி நோக்கிப்
எ0 பாடையிற் பிணித்தவன் பான்மைய னாகிக்

௫௧. வியப்பு - ஆச்சரியம். (ஆதிரை) வியப்பினளாயினள்.
மேலே சாதுவன் செய்திகூறுவார்.
௫௨. கணவனும் - சாதுவனும்.
௫௩. பிறங்கல் - மலை. 'ஓங்கிய பிறங்கல்' என்றும் பாடம். நீழல் - நிழலில்.
௫௪. நோய் கூர்ந்து - வருத்தமிகுந்து.
௫௫. துஞ்சுதுயில்கொள்ள — (சாதுவன்) மிக்க நித்திரைகொள்ள. சூர் - அச்சம்.
௫௬. நயமிலர் - இனிமையில்லாதவர்.
௫௭. பரிபுலம்பினன் - இவன் மிகவும் வருந்தினன்; "பக்க நீங்குமின் பரிபுலம் பினரென" என்பது சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, ௨௨௬; "பரிபுலம் பலைத்தலும் வருத்தம் வீட" என்பது முல்லைபடுகடாம், ௭௧௭.
௫௯. எழுப்பலும் - சாதுவனை எழுப்பலும்.
௬0. அவர்பாடை - நாகர்களுக்குரிய பாஷையை. 'மயக்குறு மரபின்' என்றும் பாடம்.
௬௧. கடுந்தொழின்மாக்கள் - நாகர்.
௬௩. அருந்திறல் - பெறுதற்கரிய திறலையுடையாய்.
௬௪. இருந்தோன் - முற்று.
௬௫. என - என்று நாகர்சொல்ல.
௬௬. குழிசி - பானை. கழிமுடை நாற்றமும் - மிகக புலால்நாற்றமும்.
௬௭. உணங்கல் - வற்றல்.
௬௮. எண்கு - கரடி. பிணவு - பெண் கரடி; "பன்றி புல்வாய்" என்னும் சூத்திரத்தில் 'ஒன்றிய' என்றதனால், பிணவென்பது கரடிக்குங்கொள்ளப்பட்டது. இது, தொல்காப்பியம், மரபியல், ௫௮.
௬௯. பெண்டு - மனைவி.
எ0. பாடையிற்பிணித்து - பாஷையினாலே வயமாக்கி.

கோடுயர் மாநிழற் குளிர்ந்த பின்னவ
னீங்குநீ வந்த காரண மென்னென
வாங்கவற் கலைகட னுற்றதை யுரைத்தலு
மருந்துத லின்றி யலைகட லுழந்தோன்
எரு வருந்தின னளியன் வம்மின் மாக்கா
ணம்பிக் கிளையளோர் நங்கையைக் கொடுத்து
வெங்களு மூனும் வேண்டுவ கொடுமென
வவ்வுரை கேட்ட சாதுவ னயர்ந்து
வெவ்வுரை கேட்டேன் வேண்டே னென்றலும்
அ0 பெண்டிரு முண்டியு மின்றெனின் மாக்கட்
குண்டோ ஞாலத் துறுபய னுண்டெனிற்
காண்குவம் யாங்களுங் காட்டுவா யாகெனத்
தூண்டிய சினத்தினன் சொல்லெனச் சொல்லு
மயக்குங் கள்ளு மன்னுயிர் கோறலுங்
அரு கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்
பிறந்தவர் சாதலு மிறந்தவர் பிறத்தலு
முறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையி
னல்லறஞ் செய்வோர் நல்லுல கடைதலு
மல்லறஞ் செய்வோ ரருநர கடைதலு
கூ0 முண்டென வுணர்தலி னுரவோர் களைந்தனர்
கண்டனை யாகெனக் கடுநகை யெய்தி

எக. கோடு - கிளை. நிழல் - நிழலில். 'குளிர்ந்தவன்பினன்' என்றும் பாடம். அவன் - நாகர்களுடைய குருமகன்.

எஉ. வந்தகாரணமென்னென - வந்தது யாதுகருதியென்று கேட்ப. வந்த காரணம் :—சிலப்பதிகாரம், நாடுகாண் காதை, ககசு.

எ௩. அவற்கு - குருமகற்கு.

எரு. அளியன் - அளிக்கத்தக்கான்; "அளியன் றானே முதுவா யிரவலன்" என்பது திருமுருகாற்றுப்படை, உஅச.

எஎ. என - என்று குருமகன் சொல்ல.

எரு - எஎ. மாக்காள், நம்பிக்கு வேண்டுவ கொடுமென.

எஅ. அயர்ந்து - கவலையுற்று.

அ0. உண்டி - உணவு. இன்றெனின் - இல்லையாயின்.

அக. உறுபயனுண்டோ.

அஉ. காண்குவம் - அறிவோம்.

அ௩. சினத்தினன் சொல்லென - கோபமுடையனாய், சொல்லாயென்று நாகருடைய குருமகன் கேட்ப. சொல்லும - (சாதுவன்) சொல்லுவான்.

அரு. கயக்கு - கயங்குதல்; "கயக்கறு நல்லறம்" என்றார் முன்னும்; கக-ம் காதை, கூஅ.

அச - அரு. கள்ளையும் கொலையையும் அறிவுடையோர் நீக்கினர்

அசு - அஎ. இவ்வடிகள், "உறங்கு வதுபோலுஞ் சாக்கா டுறங்கி, விழிப் பது போலும் பிறப்பு" என்னும் ௩௩௯-ம் திருக்குறளின் பொருளைத் தழுவியிருத்தல் காண்க.

அகூ. அல்லறம் - பாவம்; அறமல்லாததென்றபடி.

கூ0. உரவோர் - அறிவுடையோர்.

அஎ - கூ0. உண்மையின், உணர்தலின் உரவோர் களைந்தனர்.

கூக. கண்டனையாக - அறிந்தாயாகுக.

யுடம்புவிட் டோடு முயிருருக் கொண்டோ
ரிடம்புகு மென்றே யெமக்கீங் குரைத்தா
யவ்வுயி ரெவ்வணம் போய்ப்புகு மவ்வகை
கூரு செவ்வன முரையெனச் சினவா திதுகே
ளுற்றதை யுணரு முடலுயிர் வாழ்வுழி
மற்றைய வுடம்பே மன்னுயிர் நீங்கிடிற்
றடிந்தெரி யூட்டினுந் தானுண ராதெனி
னுடம்பிடைப் போனதொன் றுண்டென வுணர்நீ
க00 போனார் தமக்கோர் புக்கிலுண் டென்ப
தியானோ வல்லே னியாவரு முணர்குவ
ருடம்பீண் டொழிய வுயிர்பல காவதங்
கடந்துசேட் சேறல் கனவினுங் காண்குவை
யாங்கனம் போகி யவ்வுயிர் செய்வினை
க பூண்ட யாக்கையிற் புகுவது தெளிநீ
யென்றவ னுரைத்தலு மெரிவிழி நாகனு
நன்றறி செட்டி நல்லடி வீழ்ந்து
கள்ளு மூனுங் கைவிடி னிவ்வுடம்
புள்ளுறை வாழுயி ரோம்புத லாற்றேன்
கக0 றமக்கொழி மரபிற் சாவுறு காறு
மெமக்கா நல்லற மெடுத்துரை யென்றலு
நன்று சொன்னாய் நன்னெறிப் படர்குவை
யுன்றனக் கொல்லு நெறியற முரைக்கே
னுடைகல மாக்க ளுயிருய்ந் தீங்குறி
ககரு னடுதொழி லொழிந்தவ ராருயி ரோம்பி

என - என்று சாதுவன் சொல்ல. கடு நகை - பெருஞ்சிரிப்பு.

கரு. செவ்வனம் - நேரே; "திருவிரி பூம்பொழிற் செவ்வனஞ் சேர்ந்து" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், உரு. என — என்று குருமகன்சொல்ல.

கசு. உயிர்வாழ்வுழி உடல் உற்றதை யுணரும்.

கஅ. தடிந்து - வெட்டி.

க00. புக்கில் - புகுமிடம்.

க0உ. காவதம் - காதம்.

க0ந. சேண் - நெடுந்தூரம்.

க0உ - க0ந. உயிர்சேறல் கனவினுங் காண்குவை.

க0௪ - க0ரு. உயிர் புகுவது.

க0சு. அவன் - சாதுவன்.

க0எ. நன்று - தருமம்.

கக0. தமக்கொழிமரபின் - தமக்கென்றே தீர்ந்த முறைமையினையுடைய.

கக0 - ககக. மரபினையுடைய நல்லறமென்க.

க0சு - ககக நாகனும் எடுத்துரையென்றலும்.

ககஉ. படர்குவை - செல்வாய்.

ககந. ஒல்லும்நெறி - இயலும்வழி; இவ்வடி, "ஒல்லும் வகையா னறவினை யோவாதே, செல்லும்வா யெல்லாஞ் செயல்" என்ற நரு - ம் திருக்குறளின் கருத்தைத்தழுவி வந்தவாறு காண்க.

ககரு. அடுதொழில் - கொல்லுந்தொழில்.

மூத்துவிளி மாவொழித் தெவ்வுயிர் மாட்டுந்
தீத்திற மொழிகெனச் சிறுமக னுரைப்போ
னீங்கெமக் காகு மிவ்வறஞ் செய்கே
மாங்குனக் காகு மரும்பொருள் கொள்கெனப்
கஉ0 பண்டும் பண்டுங் கலங்கவிழ் மாக்களை
யுண்டே மவர்தரு முறுபொரு ளீங்கிவை
விரைமர மென்றுகில் விழுநிதிக் குப்பையோ
டிவையிவை கொள்கென வெடுத்தனன் கொணர்ந்து
சந்திர தத்த னென்னும் வாணிகன்
கஉரு வங்கஞ் சேர்ந்ததில் வந்துட னேறி
யிந்நகர் புகுந்தீங் கிவளொடு வாழ்ந்து
தன்மனை நன்பல தானமுஞ் செய்தன
னங்கன மாகிய வாதிரை கையாற்
பூங்கொடி நல்லாய் பிச்சை பெறுகென
கங0 மனையகம் புகுந்து மணிமே கலைதான்
புனையா வோவியம் போல நிற்றலுந்
தொழுதுவலங் கொண்டு துயரறு கிளவியோ
டமுத சுரபியி னகன்சுரை நிறைதரப்
பாரக மடங்கலும் பசிப்பிணி யறுகென
கங வாதிரை யிட்டன ளாருயிர் மருந்தென.

ஆதிரை பிச்சையிட்டகாதை முற்றிற்று.

---

கககூ. மூத்துவிளிமா - முதுமையுற்று இறக்கும் விலங்குகள்.

ககஎ. தீத்திறம்-கொலை. என-என்று சாதுவன் சொல்ல.

கஉஉ. விரைமரம் - சந்தனம அகில் முதலியன.

கஉங. என-என்று நாகன் சொல்ல.

ககஎ - கஉங. உரைப்போன் இவையிவை கொள்கெனவென்க.

கஉரு. வங்கஞ்சேர்ந்ததில் - சேர்ந்தகப்பலில்.

கஉஅ. ஆங்கனமாகிய - அத்தன்மையை உடையளாகிய. 'ஆயிழைகையால்' என்றும் பாடம்.

உ-கஉகூ. உரைப்போன் பிச்சை பெறுகெனவென்க.

கஙக. பிச்சைவாங்கும்பொழுது அறவறத்தினர் மௌனமாக நிற்கவேண்டுமென்பது விதியாதலின், 'புனையா வோவியம் போல நிற்றலும்' என்றார். புனையா வோவியம் :—உஉ - ம் காதை, அஅ.

கங0 - கஙக. மணிமேகலைதான் நிற்றலும்.

கஙங. அகன்சுரை :—கக - ம் காதை, ககஎ.

கஙரு. ஆருயிர்மருந்து - அன்னம்.

கஙங-கஙரு. நிறைதர இட்டனளென்க.

க - கஙரு. உரைப்போள், 'ஆங்கனமாகிய ஆதிரைகையாற் பிச்சைபெறுக' என்று சொல்ல, மணிமேகலை மனையகம் புகுந்து நிற்றலும், ஆதிரை, தொழுது வலங்கொண்டு ஆருயிர் மருந்திட்டனளென முடிக்க.

தென்றிசைப் பொதியில் காணிய வந்தேன்
உரு கடுவா லருவிக் கடும்புனல் கொழித்த
இடுமணற் கானியாற் றியைந்தொருங் கிருந்தேன்
புரிநூன் மார்பிற் றிரிபுரி வார்சடை
மரவுரி யுடையன் விருச்சிக னென்போன்
பெருங்குலைப் பெண்ணைக் கருங்கனி யனையதோ
ருO ரிருங்கனி நாவற் பழமொன் றேந்தித்
தேக்கிலை வைத்துச் சேணாறு பரப்பிற்
பூக்கமழ் பொய்கை யாடச் சென்றோன்
றீவினை யுருத்தலிற் செருக்கொடு சென்றேன்
காலா லந்தக் கருங்கனி சிதைத்தே
ருரு னுண்டல் வேட்கையின் வரூஉம் விருச்சிகன்
கண்டன னென்னைக் கருங்கனிச் சிதைவுடன்
சீர்திகழ் நாவலிற் றிப்பிய மான
தீரா றாண்டி லொருகனி தருவ
தக்கனி யுண்டோ ராறீ ராண்டு
சO மக்க ளியாக்கையின் வரும்பசி நீங்குவர்
பன்னீ ராண்டி லொருநா ளல்ல
துண்ணா நோன்பினே னுண்கனி சிதைத்தா

உச. பொதியில் - பொதியின்மலை. காணிய - காணுதற்கு.

உரு - உச. விஞ்சையனொடு வந்தேன்.

உரு. கடுவரல் - விரைந்துவருதல். கொழித்த - தெள்ளிய.

உசு. கான்யாறு - காட்டாறு. ஒருங் கிருந்தேன் - கணவனுடனிருந்தேன.

உச - உசு. வந்தேன் கான்யாற்றிருந் தேனென்க.

உஎ. புரிநூல் - முறுக்கியபூணுநூல். திரிபுரிவார்சடை - திரித்துமுறுக்கிய நீண்டசடை.

உஅ. மரவுரியுடையன் - வற்கலையாகிய ஆடையையுடையன். உடையனாகிய விருச்சிகனென்போன்.

உகூ. பெண்ணை - பனை. கருங்கனி - கரியகனி; பெரியகனியென்றுமாம்.

ருO. இருமை - பெருமை. நாவல் - சம்புமரம்.

ருக - ருஉ. சேணாறுபூ; சேண் - நெடுந்தூரம். பரப்பினையுடைய பொய் கை.

உஅ - ருஉ. விருச்சிகனென்போன், நாவற்பழமொன்றையேந்தி வைத்துப் பொய்கையாடச் சென்றோனாகவென்க.

ருரு. உருத்தலின் - பயன்கொடுப்பத் தோற்றுதலினால். செருக்கு - களிப்பு.

ருரு-ருச. உருத்தலிற் சென்று காலால் அந்தக்கனியைச் சிதைத்தேன்.

ருரு. வேட்கை - விருப்பம்.

ருசு. கருங்கனிச்சிதைவுடன் என்னைக் கண்டனன்.

மேல்வருவன விருச்சிகன்கூற்று.

ருஎ. திப்பியம் - தெய்வலோகத்திலிருந்து உண்டாயது. திவ் - தெய்வலோகம். இதனை, எ - ம் காதை, ருஎ - ம் அடிக்குறிப்பிற் பார்க்க.

ருஅ. ஆண்டு - வருடம்.

ருக - சO. உண்டோர் பசியை நீங்குவர்.

சஉ. நோன்பு - விரதம். சிதைத்தாய் - அழித்தாய்.

ஆட - நீராட.

பந்தாஞ் செல்லு மந்திர மிழந்து
தந்தித் தீயாற் றனித்துய ருழந்து
சரு முந்நா லாண்டின் முதிர்கனி நானீங்
குண்ணு நாளுன் னுறுபசி களைகென
வந்தா ளாங்கவ னிட்ட சாப
மிந்நாள் போலு மிளங்கொடி கெடுத்தனை
வாடுபசி யுழந்து மாமுனி போயபின்
௩௦ பாடிமி ழருவிப் பயமலை யொழிந்தெ
னலவலைச் செய்திக் கஞ்சின னகன்ற
விலகொளி விஞ்சையன் விழுமமோ டெய்தி
யாரணங் காகிய வருந்தவன் றன்னாற்
காரண மின்றியுங் கடுநோ யுழந்தனை
௩௫ வானூ டெழுகென மந்திர மறந்தே
னூனுயிர் நீங்கு முருப்பொடு தோன்றி
வயிறுகாய் பெருமபசி வருத்துமென் றேற்குத்
தீங்கனி கிழங்கு செழுங்காய் நல்லன
வாங்கவன் கொணரவு மாற்றே னாகை

---

௨௩. மந்திரத்தை இழந்து.

௨௪. தந்திதீ - பஸ்மகவியாதியென்று வழங்குகிற யானைதீயென்னும் நோய். தனித்துயர் - ஒப்பற்றதுன்பம்.

௨௫. முந்நாலாண்டு - பன்னிரண்டு வருடம்.

௨௬. உறுபசி - மிக்கபசியை. 'உறுதுயர்' என்றும் பாடம். களைகென - நீககு

௨௭. அவன் - விருச்சிகன். சாபம் - சாபத்தை; சாபத்தின் முடிவெல்லையாகிய நாளென்றுமாம். ஆகுபெயர்.

௨௭ - ௨௮. இளங்கொடி, சாபத்தைக் கெடுத்தனை.

௨௯. உழந்து - வருந்தி. முனி - விருச்சிகன். 'உழந்த மாமுனி' என்றும பாடம்.

௩௦. பாடு இமிழ் அருவிப் பயம் மலை - ஒலிமுழங்குகின்ற அருவியாலுண்டாகிய பிரயோசனத்தையுடைய பொதியின்மலையை. பாடிமிழ் :—புறநானூறு, ௨௧.

௩௧. அலவலைச்செய்திக்கு - மனத்திற்றோற்றியதை ஆராயாதுசெய்த(என்) செய்கைக்கு ; "அலவலைவர் தப்பூச்சி காட்டுகின்றான்" (உ-ம் பத்து, முதற்பதிகம், உ.) எனவும், "பலபல நாழஞ் சொலலிப் பழிதத்சிசு பாலன் றன்னை, யலவலைமை தவிர்த்த வழகன்" (ச - ம பத்து, ௩ - ம் பதிகம், ௫.) எனவும், பெரியாழ்வார்திருமொழியில் வருதல் காண்க. இஃது அலவலைமையென்றும் வழங்கும்

௩௨. விழுமம் - துன்பம்.

௩௩. ஆரணங்கு - அரியதெய்வத்தன்மை.

௩௩ - ௩௪. அருந்தவன்றன்னாற் கடுநோயுழந்தனை.

௩௫. வானூடு எழுக என - வானிடத்து எழுவாயென்று வித்தியாதரன் சொல்ல.

௩௬. ஊன் உயிர் நீங்கும் உருப்பொடு - உடம்பினின்றும் உயிர்நீங்குதற்குக் காரணமாகிய வெப்பத்தோடு.

௩௭. வயிறுகாய் பெரும்பசி:—௧௭-ம் காதை, ௩ வருத்துமென்றேற்கு - வருத்துமென்ற எனபொருட்டு.

௩௮. தீங்கனி - இனியபழம். நல்லன வென்பதை ஒவ்வொன்றோடுங்கூட்டுக.

௩௯. ஆற்றேனாக - பசிதணியேனாக.

கூ0 நீங்க லாற்று னெடுத்துய செய்தி
யாங்கவ னுங்கெனக் கருளொடு முரைப்போன்
சம்புத் தீவினுட் டமிழக மருங்கிற்
கம்ப மில்லாக் கழிபெருஞ் செல்வ
ராற்று மாக்கட் காற்றுந் துணை யாகி
கூரு நோற்றோ ருறைவதோர் நோனக ருண்டாற்
பலநா ளாயினு நிலனொடு போகி
யப்பதிப் புகுகென் றவனருள் செய்ய
விப்பதிப் புகுந்தீங் கியானுறை கின்றே
னிந்திர கோடணை விழவணி வருநாள்
எ0 வந்து தோன்றியிம் மாநகர் மருங்கே
யென்னுறு பெரும்பசி கண்டன னிரங்கிப்
பின்வரும் யாண்டவ னெண்ணினன் கழியுந்
தணிவில் வெம்பசி தவிர்த்தனை வணங்கினேன்
மணிமே கலையென் வான்பதிப் படர்கேன்
எரு றுக்கந் துடைக்குந் துகளறு மாதவர்
சக்கர வாளக் கோட்டமுண் டாங்கது
பலர்புகத் திறந்த பகுவாய் வாயி
லுலக வறவி யொன்றுண் டதனிடை
யூரு ராங்க ணுறுபசி யுழந்தோ
அ0 ராரு மின்மையி னருமபிணி யுற்றோ

கூக. அவன் - வித்தியாதரன்.

கூஉ. தமிழகமருங்கில் - தமிழ்நாட்டில்; "இமிழ்கடல் வரைப்பிற் றமிழக மறிய" என்பது சிலப்பதிகாரம், அரங்கேற்றுகாதை, ௩௭.

கூ௩. கம்பம் - நடுக்கம். கழிபெருஞ் செல்வர் - மிகப்பெரிய செல்வத்தையுடையர்.

கூ௪. கக - ம் காதை, ௩௫. ஆற்றுமாக்கள் - வறிஞர். 'அருந்துணை யாகிய' என்றும் பாடம்.

கூரு. நோற்றோர் - முற்பிறப்பில் தவஞ்செய்தோர். நோன் நகர் - வலிமையையுடையநகர்; நோன் - வலி; "சாப நோன்ஞாண்" என்பது புறநானூறு, க௪. நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

கூ௩ - கூரு. செல்வர் நோற்றோர் ஆகி உறைவதோர் நகரென்க.

கூகூ. பலநாள் ஆயினும் - ஆகாயவழியேசெல்லக்கூடாமையாற் பலநாள் ஆகுமாயினும். நிலனொடுபோகி - பூமியில் நடந்துசென்று.

கூஎ. அவன் - வித்தியாதரன்.

எ0. இம்மாநகர் மருங்கே வந்துதோன்றி யென்க.

எஉ. கழியும் - நீங்குவான்.

எ௪. மணிமேகலை - விளி. வான்பதிப் படர்கேன் - சிறந்த ஊராகியகாஞ்சனபுரத்திற்குச் செல்வேன்.

எரு. துக்கம் - பிறப்புமுதலியன; நால்வகைச்சத்தியங்களுள் துக்கம் முதலாவது.

எஎ - எஅ. எ - ம் காதை, கஉ - க௩.

அதனிடை - அவ்வுலகவறவியில்.

எகூ - எஅ. ஆங்கதில் ஒன்றுண்டு.

அ0. ஆருமின்மையின் - பாதுகாப்போர் ஒருவரும் இல்லாமையினாலே.

ரிடுவோர்த் தேர்ந்தாங் கிருப்போர் பலரால்
வடுவாழ் கூந்த லதன்பாற் போகென்
றாங்கவள் போகிய பின்ன ராயிழை
யோங்கிய வீதியி னொருபுடை யொதுங்கி
அரு வலமுறை மும்முறை வந்தனை செய்தவ்
வுலக வறவியி னொருதனி யேறிப்
பதியோர் தம்மொடு பலர்தொழு தேத்து
முதியோள் கோட்ட மும்மையின் வணங்கிக்
கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய
௯௦ தந்துணைப் பாவையைத் தான்றொழு தேத்தி
வெயில்சுட வெம்பிய வேய்கரி கானத்துக்
கருவி மாமழை தோன்றிய தென்னப்
பசிதின வருந்திய பைதன் மாக்கட்
கமுத சுரபியோ டாயிழை தோன்றி
௯௫ யாபுத் திரன்கை யமுத சுரபியிஃ
தியாவரும் வருக வேற்போர் தாமென
வூணொலி யரவத் தொலியெழுந் தன்றே
யாணர்ப் பேரூ ரம்பல மருங்கென.

உலகவறவிபுக்ககாதை முற்றிற்று.

எஅ - அக. அதனிடை இருப்போர் பலர்.

அஉ. வடு - வகிர். 'வடுவாழ் கூந்தல்' என்றது மணிமேகலையை.

அங. ஆயிழை - மணிமேகலை.

அச. 'ஒருபுடைபோகி' என்றும்பாடம்.

அரு. வலமுறையாக மூன்றுமுறை வந்து பணிந்து; 'வந்து' என்று ஒருசொல் வருவிக்க.

அஅ. முதியோள்கோட்டம்-சம்பாபதி கோயில். மும்மையின்வணங்கி - மனம் வாக்குக் காயங்களால் வணங்கி; மூன்றுமுறை வணங்கி யென்றுமாம். 'முறைமையின் வணங்கி' என்றும் பாடம்.

௯௦. மணிமேகலையொடு மற்றையோரையும் உளப்படுத்தி 'தந்துணைப்பாவை' என்றார். 'தன்றுணைப்பாவை' என்றும் பாடம்.

௯௧. வேய்கரிகானம் - மூங்கில்கரிந்த காடு.

௯௩. பைதல் - துன்பம்.

௯௬. ஏற்போராகிய யாவரும் வருக வென்று மணிமேகலைசொல்ல. 'இரப்போர் தாமென' என்றும் பாடம்.

௯௭. எழுந்தன்று - எழுந்தது.

௯௮. யாணர்- புதுவருவாய்.

௯௭ - ௯௮. அம்பலமருங்கு ஒலியெழுந்தன்றெனக.

௧ - ௯௮. காயசண்டிகையெனுங்காரிகை, நோக்கி வணங்கி 'என்னேய்துடைப்பாய்' என்றலும், மணிமேகலை பெய்தலும், அவள் பசிநீங்கித் தொழுது உரைக்கும்; அங்ஙனம் உரைப்பவள் 'அதன்பாற்போக' என்றுகூறிப் போகியபின்னர், ஆயிழை ஒதுங்கி வந்து வந்தனைசெய்து ஏறி வணங்கித்தொழுதேத்தித் தோன்றி 'ஏற்போர்யாவரும்வருக' என, அம்பலமருங்கு ஒலியெழுந்தன்றென வினைமுடிவுசெய்க.

பதினெட்டாவது

# உதையகுமரன் அம்பலம்புக்க காதை.

[பதினெட்டாவது மணிமேகலை அம்பலமடைந்தமை சித்திராபதி உதயகுமரனுக்குச்சொல்ல அவன் அம்பலம்புக்கபாட்டு.]

*ஆங்கது கேட்டாங் கரும்புண் ணகவயிற்*
*றீத்துறு செங்கோல் சென்றுசுட் டாங்குக்*
*கொதித்த வுள்ளமொடு குரம்புகொண் டேறி*
*விதுப்புறு நெஞ்சினள் வெய்துயிர்த்துக் கலங்கித்*
௫ *தீர்ப்பலிவ் வறமெனச் சித்திரா பதிதான்*
*கூத்தியன் மடந்தையர்க் கெல்லாங் கூறுங்*
*கோவல னிறந்தபின் கொடுந்துய ரெய்தி*
*மாதவி மாதவர் பள்ளியு ளடைந்தது*

௧, ஆங்கதுகேட்டு - மணிமேகலை பிக்குணிக் கோலம்பூண்டு பிச்சையேற்று யாவருக்கும் உணவுகொடுத்தலைக்கேட்டு. ஆங்கு - அப்பொழுதே.

௨. தீத்துறுசெங்கோல் - தீயின்கண் பழுக்கக் காய்தலுற்ற செவ்வியகோல். சுட்டாங்கு - சுட்டாற்போல்.

௩. குரம்பு கொண்டு ஏறி - வரம்பை இடம்கொண்டெழுந்து; என்றது வரம்பு கடந்தென்றபடி; "குரம்பெழுந்து குற்றங்கொண் டேறுர்" என்பது நாலடியார், மேன்மக்கள், ௩ 'குரம்புகொண் டெழுந்து' என்றும் பாடம்

௪. விதுப்புறுநெஞ்சினள் - நடுக்கமுற்ற மனமுடையவளாய்.

௫. தீர்ப்பல் இவ்வறமென - மணிமேகலைகொண்ட இவ்வறத்தைத் தீர்த்து விடுவேனென்று எண்ணி. சித்திராபதி - மாதவிநற்றாய்.

௬. எல்லா நாடகக்கணிகைகளுக்கும் சொல்லுவாள்.

௧ - ௬. அதுகேட்டு ஏறி நெஞ்சினளாய் வெய்துயிர்த்துக் கலங்கி இவ்வறத்தைத் தீர்ப்பலென்று எண்ணிக் கூத்தியன்மடந்தையர் எல்லாருக்கும் சித்திராபதி கூறுவாள்.

மேல்வருவன சித்திராபதிவார்த்தை.

௮. மாதவர்பள்ளியுள் - சங்கததாரான அறவணவடிகளுடைய உறைவிடத்து. பள்ளி - முனிவருறைவிடம்; சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்த காதை, ௧௭௧.

௭ - ௮. கோவலனிறந்தமைகேட்டு மாதவி அறவணவடிகளிடம்புகுந்து துறவுபூண்டமையை, "ஈங்கிம் மாதவருறைவிடம் புகுந்தேன், மறவண நீத்த மாசறு கேள்வி, யறவண வடிக ளடிமிசை வீழ்ந்து............உரவோ னருளினன்" (உ - ம் காதை, ௫௧ - ௬௧) என வயந்தமாலைக்கு மாதவிகூறியதாக இந்நூலிலும், "மற்றது கேட்டு மாதவி மடந்தை,.........கோதைத் தாமங் குழலொடு களைந்து, போதித் தானம் புரிந்தறங் கொள்ளவும்", (நீர்ப்படைக்காதை, ௧௦௫ - ௧௦௮), "போதியின்கீழ் மாதவர்முன் புண்ணியத்தானம்புரிந்த, மாதவி தன்றுறவுங் கேட்டாயோ தோழீ" (வாழ்த்துக்காதை, "காதலன்றன்"—) எனச்

நகுதக் கன்றே நன்னெடும் பேரூ
க0 ரிதுதக் கென்போர்க் கெள்ளுரை யாயது
காதலன் வீயக் கடுந்துய ரெய்திப்
போதல் செய்யா வுயிரொடு புலந்து
நளியிரும் பொய்கை யாடுநர் போல
முளியெரிப் புகூஉ முதுகுடிப் பிறந்த
கரு பத்தினிப் பெண்டி ரல்லேம் பலர்தங்
கைத்தூண் வாழ்க்கை கடவிய மன்றே
பாண்மகன் பட்டுழிப் படூஉம் பான்மையில்
யாழினம் போலு மியல்பின மன்றியு
நறுந்தா துண்டு நயனில் காலை
உ0 வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்
வினையொழி காலைத் திருவின் செல்வி
யனையே மாகி யாடவர்த் துறப்போந்
தாபதக் கோலந் தாங்கின மென்ப
தியாவரு நகூஉ மியல்பின தன்றே
உரு மாதவி யீன்ற மணிமே கலைவல்லி
போதவிழ் செவ்வி பொருந்துதல் விரும்பி
வுதைய குமரனு முலநாள் வண்டின்

சிலப்பதிகாரத்தும் வருவனவற்றாலு ணர்க.

கூ நகுதக்கன்று - சிரிக்கத்தக்கது. பேரூர் - பேரூரில.

அ - கூ. அடைந்தது நகுதக்கன்று.

க0. இது தக்கு என்போர்க்கு - இச் செய்கை தகுதியுள்ளதென்று சொல்லும் அறிஞர்க்கு. தக்கது-விகாரம். எள்ளுரை- இகழ்ச்சியுரை.

கஉ. போதல்செய்யா - நீங்காத. புல ந்து - வெறுத்து. 'போதல் செல்லா வுயி ரொடு புலர்ந்து' என்றும் பாடம்.

கக - கஉ. உ - ம் காதை, ஙஅ - ஙக.

கங. நளி இரும்பொய்கை - குளிர்ந்த பெரியகுளம். ஆடுநர் - ஆடுவோர்.

கங - கச. உ - ம் காதை, சரு.

கக - கரு. காதலன்வீயத் துயரெய் திப் புலந்து எரிபுகும் பத்தினிப்பெண் டிரல்லேம் யாம்.

கரு - கசு. பலருடைய கையதாகிய உணவை உண்டுவாழ்தலில் உரிமையை யுடையேம்.

கஎ. பாண்மகன் - பாணன். பட் டுழி - இறந்தவிடத்து.

கஅ. இயல்பினம - இயல்பையுடை யேம்

கஎ - கஅ. பாண்மகனையும் யாழையும் உவமைகூறினள், நாடகக்கணிகை யாத லின்.

ககூ. நயன் - பசை; என்றது செல் வத்தை.

உ0. வறும்பூ - தேனில்லாதபூ. இங்கே பரத்தையர்க்கு வண்டை உவமை கூறி யதுபோல "வண்டிற் றுறக்குங் கொ ண்டி மகளிரை" என்று இக்காதையிலே யே பின்னர்க் கூறுதல்காண்க; க0கூ.

உக. வினை - நல்வினை. 'விலையொழி காலை' என்றும் பாடம்.

உங. தாபதக்கோலம் - பிக்ஷுணிக் கோலம்.

உச. நகூஉம் இயல்பினது - பழிக்கும் இயல்பையுடையது.

உசு. செவ்வி - சமயம்.

உஎ. உதையகுமரனை இங்கே வண்டா

சிதையா வுள்ளஞ் செவ்விதி னருந்தக்
கைக்கொண் டாங்கவ ளேந்திய கடிஞையைப்
௩௰ பிச்சை மாக்கள் பிறர்கைக் காட்டி
மற்றவன் றன்னுன் மணிமே கலைதனைப்
பொற்றேர்க் கொண்டு போதே னாகிற்
சுடும ணேற்றி யரங்குசூழ் போகி
வடுவொடு வாழு மடந்தையர் தம்மோ
௩௫ ரனையே னாகி யரங்கக் கூத்தியர்
மனையகம் புகாஅ மரபின னென்றே
வஞ்சினஞ் சாற்றி நெஞ்சுபுகை யுயிர்த்து
வஞ்சக் கிளவி மாண்பொடு தேர்ந்து
செறிவளை நல்லார் சிலர்புறஞ் சூழக்
௪௰ குறுவியர் பொடித்த கோலவாண் முகத்தள்
கடுந்தேர் வீதி காலிற் போகி
யிளங்கோ வேந்த னிருப்பிடங் குறுகி

கக்கூறியதுபோல "உதைய குமரனெனு மொருவண் டணீஇய, விரைவொடு வந்தேன்" என்று சம்பாபதிகூறியதாக இக்காதையிலேயே பின்னும் கூறுவர்; ௬௰-௬௧; "பெண்டிர் நலம்வௌவித் தண் சாரற் றாதுண்ணும், வண்டிற் றுறப்பான் மலை" என்று தலைமகனை வண்டாகக் கூறியிருத்தல்காண்க. இது கலித்தொகை, ௪௰.

உ௯. சிதையாவுள்ளம் - வேறொன்றால் அழியாதவுள்ளம்.

உ௯. கடிஞை - பிச்சைப்பாத்திரம்.

௩௧. அவன் - உதையகுமரன்.

௩௨. போதேனாகில் - வாரேனாயின்.

௩௩. சுடுமண் - செங்கல்.

௩௪. வடு - குற்றம். 'மடந்தையர் தம்மோடு' என்றும் பாடம்.

௩௫. 'ஆடற் கூத்தியர்' என்றும்பாடம்.

௩௪ - ௩௫. மடந்தையர் தம்மோரனையேனாகி-மடந்தையரை ஒப்பேனாகி; ஓர்-இடைச்சொல்.

௩௩ - ௩௫. பதியிலாரிற் குடிக்குற்றப்பட்டாரை எழு செங்கற்சுமத்தி அரங்கு சூழ்வித்துப் புறத்துவிடுதல் மரபாதலின் சித்திராபதி இங்ஙனம் சபதஞ்செய்வாளாயினள்; இதனை, சிலப்பதிகாரம், ஊர் காண்காதையிலுள்ள "சுடும ணேறா வடு நீங்கு சிறப்பின்" (௧௪௬ - ம் அடி) என்பதனாலும், இதற்கு அடியார்க்குநல்லாரெழுதிய விசேடவுரையாலும் உணர்க.

௩௭. வஞ்சினம் - சபதம். நெஞ்சு புகையுயிர்த்து - மனங்கொதித்து; "செங்கண் சிவந்து நெஞ்சுபுகை யுயிர்த்து" என்றார் முன்னும்; அ-ம் காதை, ௫௮.

௭ - ௩௭. கூறுகின்ற சித்திராபதி, 'மாதவி பள்ளியுளடைந்தது நகுதக்கன்று அஃது எள்ளுரையாயது; யாம் பத்தினிப் பெண்டிரல்லேம்; வாழ்க்கை கடவியமன்றே; இயல்பினம்; அன்றியும் வண்டுபோல்குவம்; துறப்பேம்; தாங்கினமென்பது நகுமியல்பினது; ஆதலால், மணிமேகலையைப் பொற்றேர்க் கொண்டு போதுவேன்; அங்ஙனம் போதேனாயின் மரபினன்' என்று வஞ்சினஞ் சாற்றியென்க.

௩௮. கிளவியைத்தேர்ந்து.

௪௰. வியர் - வேர். பொடித்த - தோன்றிய.

௪௨. இளங்கோவாகியவேந்தன் - உதையகுமரன்.

யாவ வண்டொடு தேனின மார்க்குந்
தருமணன் ஞெமிரிய திருநா றொருசிறைப்
௪௫ பவளத் தூணத்துப் பசும்பொற் செஞ்சுவர்த்
திகழொளி நித்திலச் சித்திர விதானத்து
விளங்கொளி பரந்த பளிங்குசெய் மண்டபத்துத்
துளங்குமா னூர்தித் தூமலர்ப் பள்ளி
வெண்டிரை விரிந்த வெண்ணிறச் சாமரை
௫0 கொண்டிரு மருங்குங் கோதையர் வீச
விருந்தோ னிருந்தடி பொருந்தியின் றேத்தித்
திருந்தெயி றிலங்கச் செவ்வியி னக்கவன்
மாதவி மணிமே கலையுட னெய்திய
தாபதக் கோலந் தவறின் றோவென
௫௫ வரிதுபெறு சிறப்பிற் குருகுகரு வுயிர்ப்ப

௪௩. வண்டும் தேனும் நல்லமணத்தே செல்வனவாதலின், இங்கே சேர்த்துக் கூறப்பட்டன; இதனை, "மங்கை நல்லவர்" என்னும் செய்யுளுரையாலுணர்க; இது சீவகசிந்தாமணி, குணமாலையாரிலம்பகம், ௪௨.

௪௪. தரு மணல் ஞெமிரிய - கொண்டுவந்திட்ட மணல் பரந்த; "தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து" என்பது நெடுநல்வாடை, ௯0. ஒருசிறை - ஒரு பக்கம்.

௪௫. பவளத்தூணம் - பவளத்தாலாகிய தூண்; "பவளத் திரள்காற் பைம்பொன் வேதிகை" என்பது சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்த காதை, ௧௪௮.

௪௬. நித்திலம் - முத்து; என்றது, முத்தாலாகிய சல்லியையும் தூக்கினையும். சித்திரவிதானம் - சித்திரங்களையுடைய மேற்கட்டி; "தவள நித்திலத் தாமந் தாழ்ந்த, கோணச் சந்தி மாண்வினை விதானத்து" என்பர் பின்னும்; ௧௧ - ம் காதை, ௧௧௨ - ௧௧௩. "ஓவிய விதானத் துரைபெறு நித்திலத்து, மாலைத் தாமம் வளையுட னாற்றி" என்பது சிலப்பதிகாரம், அரங்கேற்று காதை, ௧௧௧ - ௧௧௨.

௪௭. 'பளிக்குமண்டபத்து' என்றும் பாடம்.

௪௫ - ௪௭. தூணத்தினையும் சுவரினையும் விதானத்தினையுமுடைய மண்டபமென்க.

௪௮. துளங்கும் மான் ஊர்தி - ஒளி அசைதலையுடைய சிங்காதனம். ஊர்தி - ஏறுதற்கிடமாகவுள்ள ஆசன மென்னும் பொருட்டு. பள்ளி - இடம்.

௪௯. வெண்டிரைவிரிந்த - வெள்ளிய அலைகள்போலேவிரிந்த. சாமரை - சாமரையை.

௫0. கோதையர் - மகளிர்.

௪௯ - ௫0. சாமரையைக் கோதையர் வீச.

௫௧. இருந்தோன் - உதையகுமரன். - ஏதத.

௪௭ - ௫௧. மண்டபத்துப் பள்ளியில் இருந்தோனென்க.

௫௨. நக்கு-சிரித்து. அவன் - உதையகுமரன்.

௫௪. தாபதக்கோலம் - தவவேடம்; என்றது பிக்குணிக்கோலத்தை. தாபதர் - தவமுடையவர். என - என்று உதையகுமரன் கேட்ப.

௫௨ - ௫௪. அவன் நக்குத் தாபதக் கோலம் தவறின்றோவென.

மேல்வருவன சித்திராபதிகூற்று; உதையகுமரன் இருந்தவிடம் அணுக்கமாதலின் மணிமேகலைசெய்தியைச் சிலேடையாற் கூறுவான்.

௫௫. குருகு கருவுயிர்ப்ப - புறவைகள் ஈனும்வண்ணம்.

வொருதனி யோங்கிய திருமணிக் காஞ்சி
பாடல்சால் சிறப்பிற் பரதத் தோங்கிய
நாடகம் விரும்ப நன்னலங் கவினிக்
காமர் செவ்விக் கடிமல ரவிழ்ந்த
௬0 துதைய குமரனெனு மொருவன் டெ ய
விரைவொடு வந்தேன் வியன்பெரு மூதூர்ப்
பாழ்ம் பறந்தலை யம்பலத் தாயது
வாழ்கநின் கண்ணி வாய்வாள் வேந்தென
வோங்கிய பௌவத் துடைகலப் பட்டோன்
௬௫ வான்புணை பெற்றென மற்றவட் குரைப்போன்
மேவிய பளிங்கின் விருந்திற் பாவையிஃ
தோவியச் செய்தியென் றொழிவேன் முன்னர்க்

௫௬. திருமணிக்காஞ்சியென்பதற்கு அழகிய கரியகாஞ்சிமரமென்றும் அழகிய மணிமேகலையென்றும் பொருள்கொள்க. மேகலைக்குக் காஞ்சியென்று பெயருளதாதல், "எதிருன் றுதலு நிலையின் மையுமா, மணிமே கலையு மொருமரப் பெயருங், கருதுங் காஞ்சி யென்னும் கட்டுரை." என்னும் **திவாகரச்சூத்திரத்தா** லும், "ஒருமரப் பெயரு மோரிசைப் பெயருங், கச்சிப் பதியுமே கலையுங் காஞ்சி" என்னும் **பிங்கலச்சூத்திரத்தா** லும் துணியப்படும்.

௫௭. பரதமென்பதற்குப் பரதகண்டமென்றும் நாடகநூலென்றும் பொருள் கொள்க.

௫௮. நாடகம் - நாடுகளினிடமும், ஆடலும். நாடகம் இவளாற் சிறப்பெய்துமாகலின், 'நாடகம் விரும்ப' என்றார்; "நாடக மேத்து நாடகக் கணிகை" என்றவருதல் காண்க; இது **சிலப்பதிகாரம்,** பதிகம், ௩௫.

௫௯. செவ்வி - பருவம்.

௫௬ - ௫௯. காஞ்சி கவினிக் கடிமலர விழ்ந்தது.

௬0. 'உதைய குமரனெனு மொருவண்டு' என்றது முன்னிலைப்புறம்; அஃதாவது முன்னிலையாய் நிற்கின்றவரை நோக்கிப் பிறனைக் கூறுமாறுபோலக் கூறுதல். உணீஇய - உண்ணும்பொருட்டு; உண்ணுதல் - மிசைதலும், அனுப [illegible]ம்.

௬௨. பாழ்ம் பறந்தலை அம்பலத்து பாழிடமாகிய புறங்காட்டைச்சார்ந்த உலகவறவியினிடத்து; பறந்தலை-புறங்காடு; "கள்ளியம் பறந்தலை யொருசிறையல்கி" என்பது **புறநானூறு,** ௨௪0.

௫௬ - ௬௨. காஞ்சி, நலங்கவினிக் கடிமலரவிழ்ந்தது; அதனை உதையகுமரனாகிய வண்டு உண்ணும்பொருட்டு வந்தேன்; அக்காஞ்சி அம்பலத்தாயதென்க.

௬௩. கண்ணி - தலைமாலை; "கண்ணி கார்நறுங் கொன்றை" என்பது **புறநானூறு,** கடவுள்வாழ்த்து. நின்மாலைவாழ்கவென்றல் மரபு; "தாமரை யுறையுஞ் செய்யாள், வழுவினர் தம்மைப் புல்லாள் வாழ்கநுங் கண்ணி மாதோ" என்பது **சீவகசிந்தாமணி,** விமலையாரிலம்பகம், ௨. என - என்று சம்பாபதிசொல்ல.

௬௪. பௌவம் - கடல். உடைகலப் பட்டோன் - கப்பல் உடையப்பட்டோன்; "உடைகலப் பட்டாங் கொழிந்தோர் தம்முடன்" என்றார்முன்னும்; ௧௬ - ம் காதை, ௨0. "உடைகலப் பட்ட வெங்கோன்" என்பது **சிலப்பதிகாரம்,** அடைக்கலக்காதை, ௨௧.

௬௫. வான்புணை - சிறந்ததெப்பம். அவட்கு - சித்திராபதிக்கு.

மேல்வருவன உதையகுமரன் கூற்று.

௬௬. பளிங்கின் - பளிக்கறையின்கணுள்ள, விருந்திற் பாவை இஃது - புதுமையினையுடைய பாவையாகிய இது.

௬௭. ஓவியச்செய்தியென்று - சித்திரச் செய்கையென்று.

௬௬ - ௬௭. மணிமேகலை தன்னைக்

காந்தளஞ் செங்கை தளைபிணி விடாஅ
வேந்திள வனமுலை யிறைநெரித் ததூஉ
௭௰ மொத்தொளிர் பவளத் துள்ளொளி சிறந்த
முத்துக்கூர்த் தன்ன முள்ளெயிற் றமுத
மருந்தே மாந்த வாருயிர் தளிர்ப்ப
விருந்தின் மூர லரும்பிய தூஉ
மாயிதழ்க் குவளை மலர்புறத் தோட்டிக்
௭௫ காய்வேல் வென்ற கருங்கய னெடுங்க
ணறிவுபிறி தாகிய தாயிழை தனக்கெனச்
செவியகம் புகூஉச் சென்ற செவ்வியும்
பளிங்குபுறத் தெறிந்த பவளப் பாவையென்
னுளங்கொண் டொளித்தா ளுயிர்க்காப் பிட்டென்
௮௰ றிடையிருள் யாமத் திருந்தேன் முன்னர்ப்

கண்டு அஞ்சிப் பளிக்கறையிற்புகுந்த பொழுது அவளைச் சித்திரமென்று தான் எண்ணியிருந்ததாக உதயகுமரன் கூறினான்; "தாமொளி மண்டபந் தன்னையாற் றடைஇச், சூழ்வோன் சுதமதி தன்முக நோக்கிச், சித்திரக் கைவினை திசைதொறுஞ் செறிந்தன, வித்திறத் தாணின் னிளங்கொடி யுரையென" என்று முன்பு வந்திருத்தல்காண்க; ௫ - ம் காதை, ௯ - ௧௨.

௬௮. தளைபிணி - கட்டியகட்டு; தளைதல் - கட்டுதல். விடா - விடாவாய்.

௬௯. இறை - சிறிது.

௬௮ - ௬௯. செங்கைகள் பிணிவிடாவாய் முலையை இறையளவு நெரித்தசெய்கையும்.

௭௰. பவளமென்றது வாயை.

௭௧. முத்துக்கூர்த்தன்ன - முத்துக்கள் கூர்மையுற்றாலொத்த. எயிறு - பல்.

௭௨. அருந்த வேமாந்த - உண்ணுதற்கு ஆசைப்பட்ட; "அருந்தே மாந்த வாருயிர் முதல்வனை" என்றார்முன்னும்; ௧௪ - ம் காதை, ௬௮.

௭௧ - ௭௨. முள்வா லெயிறூ றமுதம் முனியாது மாந்திக், கொள்ளாத வின்பக் கடற்பட்டனன்" என்பது சீவகசிந்தாமணி, கோவிந்தையாரிலம்பகம், ௮௯.

௭௩. விருந்தின்மூரல் - புதிய இளநகை. அரும்புதல் - தோற்றுதல்.

௭௧ - ௭௩. எயிற்றமுதத்தையுண்ண ஆசையுற்ற எனதுயிர் செழிப்புறும்வண்ணம் புன்முறுவல் செய்ததும்.

௭௪. மாயிதழ் - கரிய இதழ்.

௭௬. பிறிதாகியது - வேறுபட்டது. ஆயிழைதனக்கு - மணிமேகலைக்கு.

௭௭. புகூஉ - புகுந்து. 'செவிகுறுகுறாஉச் சென்ற' என்றும் பாடம். செவ்வி - அழகு.

௭௪ - ௭௭. ஓட்டி வென்ற கண்கள் ஆயிழைக்கு அறிவுபிறிதாகியதென்று குறிப்பித்துச் செவிக்கணே சென்ற செவ்வியும்.

௭௮. பளிங்கு - உவவனத்திலுள்ள பளிக்கறை. பாவை - மணிமேகலை.

௭௯. கொண்டு - நெரித்ததூஉம் அரும்பியதூஉம் செவ்வியும் ஆகிய இவற்றைக் கொண்டு. உயிர்க்காப்பிட்டு - உயிரைக் காத்தல்செய்து.

௭௮ - ௭௯. பாவை கொண்டு உயிர்க் காப்பிட்டு என்னுளத்து ஒளிததாளென்க.

௮௰. இருந்தேன் முன்னர் - துயிலாதிருந்தேனுடைய முன்பு; "பொங்குமெல் லமளியிற் பொருந்தா திருந்தோன், முன்னர்த் தோன்றி" என்று முன்பு வந்திருத்தல்காண்க; ௭ - ம் காதை, ௬ - ௭.

பொன்றிகழ் மேனி யொருத்தி தோன்றிச்
செங்கோல் காட்டிச் செய்தவம் புரிந்த
வங்கவ டன், மயாபபா யென்றன
டெய்வங் கொல்லோ திப்பியங் கொல்லோ
அ௫ வெய்யா மையலேன் யானென் றவன்சொலச்
சித்திரா பதிதான் சிறுநகை யெய்தி
யத்திறம் விடுவா யாசிளங் குரிசில்
காமக் கள்ளாட் டிடைமயக் குற்றன
தேவர்க் காயினுஞ் சிலவோ செப்பின்
௬௦ மாதவன் மடந்தைக்கு வருந்துதுய ரெய்தி
யாயிரஞ் செங்க ணமரர்கோன் பெற்றது
மேருக் குன்றத் தூருநீர்ச் சரவணத்
தருந்திறன் முனிவர்க் காரணங் காகிய
பெரும்பெயர்ப் பெண்டிர் பின்புளம் போக்கிய
௬௫ வங்கி மனையா ளவரவர் வடிவாய்த்
தங்கா வேட்கை தனையவ டணித்ததூஉங்

௮௧. ஒருத்தியென்றது, மணிமேகலா தெய்வத்தை.

௮௩. அயர்ப்பாய் - மறப்பாய்.

௮௨ - ௮௩. எ - ம் காதை, ௮ - ௧௪.

௮௦ - ௮௩. இருந்தேன்முன்னர் ஒருத்தி தோன்றிக் காட்டி அவள்திறம் அயர்ப்பாயென்றனளென்க.

௮௪. என்றவள் தெய்வமோ! தெய்வலோகத்திற்றோன்றிய பொருளோ!

௮௫. எய்யா மையலேன் - இன்னதென்று அறியாத மயக்கமுடையேன்; எய்த்தல் - அறிதல்.

௮௭. அத்திறம்விடுவாய் - 'அங்கவடன்றிறமயர்ப்பாய்' என்று நின்கனவிற் றோன்றிய ஒருத்திகூறிய அதனை விடுவாயாக.

௮௮. மயக்குற்றன - மயங்கிச்செய்த செய்திகள்.

௮௯. செப்பிற் சிலவோ, பலவுள்ளன வென்றபடி. 'செப்புவன்'என்றும்பாடம்.

உதையகுமரனுக்குத் துணிவு பிறத்தற் பொருட்டு இந்திரன் அகலிகையை விரும்பியது முதலியவற்றைச் சம்பாபதி கூறுவாள் :—

௬௦. மாதவன் மடந்தை - கௌதமன் மனைவியாகிய அகலிகை.

௬௦ - ௬௧. இந்திரன் கௌதமமுனிவர் மனைவியாகிய அகலிகையை விரும்பிச் சேர்ந்து அம்முனிவர்சாபத்தால் ஆயிரங் கண் பெற்றானென்பது புராணகதை.

௬௨. மேருக்குன்றத்து - இமயமலையினிடத்து; இமயம் மலையாயினதலின், மற்ற மலைகளின்தொழில்களையும் பெயர்களையும் அதற்கேற்றிக்கூறுதல் நூன்மரபு; "இமயவில் வாங்கிய" (கலித்தொகை, ௩௮.) என்றும், "இமயநட் டரவு சுற்றி" (சீவகசிந்தாமணி, குணமாலையாரிலம்பகம், ௧௧௩) என்றும் வந்திருத்தல் காண்க. ஊரும் நீர்ச் சரவணத்து - பரந்த நீரையுடைய சரவணத்தில்; சரவணம் - தருப்பைக்காட்டினையுடையதொரு பொய்கை.

௬௩. முனிவர் - ஸப்தரிஷிகள்.

௬௪. பெரும்பெயர்ப்பெண்டிர் - பெரியபுகழையுடைய மனைவியர்.

௬௫. அங்கி மனையாள் - அக்கினிதேவன் மனைவியாகிய ஸ்வாகாதேவி. அவரவர்வடிவாய் - அவ்வம்முனிபத்தினிகள் வடிவமாய்.

௬௬. வேட்கை - விருப்பம். அவள் - ஸ்வாகாதேவி.

௬௨ - ௬௬. முன்னொருகாலத்தில் அக்

கேட்டு மறிதியோ வாட்டிறற் குரிசில்
கன்னிக் காவலுங் கடியிற் காவலுந்
தன்னுறு கணவன் சாவுறிற் காவலு
க00 நிறையிற் காத்துப் பிறர்பிறர்க் காணாது
கொண்டோ னல்லது தெய்வமும் பேணாப்
பெண்டிர்தங் குடியிற் பிறந்தா ளல்ல
ளாடவர் காண நல்லரங் கேறி
யாடலும் பாடலு மழகுங் காட்டிச்
க0ரு சுரும்புநாண் கருப்புவி லருப்புக்கணை தூவச்
செருக்கய னெடுங்கட் சுருக்குவலைப் படுத்துக்
கண்டோர் நெஞ்சங் கொண்டகம் புக்குப்
பண்டோர் மொழியிற் பயன்பல வாங்கி
வண்டிற் றுறக்குங் கொண்டி மகளிரைப்

இனிதேவன் ஸப்தரிஷிகளுடைய மனைவிகளைவிரும்பி அந்தச் சந்தாபம் பொறுக்கமாட்டாமற் காட்டுக்குப்போனபொழுது அவன் எண்ணத்தையறிந்த ஸ்வாகாதேவி அம்முனிவரெழுவர் மனைவிகளுள் அருந்ததியொழிந்தோருடைய வடிவத்தை முறையேயெடுத்து வேறுவேறு காலங்களிற் சேர்ந்து அவன் வேட்கையைத் தணித்தாளென்று ஸ்ரீவியாஸபாரதத்துள்ள ஆரணியபர்வத்தில் உஉ௪, உஉரு, உஉ௬ - ம் அத்தியாயங்களால்

கஅ. கன்னி - கன்னிப்பருவம். கடி - கல்யாணம்.

க00. நிறை - நெஞ்சைக் கற்புநெறியில் நிறுத்தல்; "சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர், நிறைகாக்குங் காப்பே தலை." என்று வருதல்காண்க; இது திருக்குறள், ருஎ. பிறர்க்காணாது - அயலாரைப் பாராமல்.

க0க. கொண்டோன் - கணவன்.

க0உ. பெண்டிர் - குலமகளிர்.

க0க - க0உ. "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்" என்பது திருக்குறள், ருரு.

க0ங. நல்லரங்கு - எழுகோலகலத்தினையும் எண்கோல் நீளத்தினையும் ஒருகோல் குறட்டுயரத்தினையும் வாய்தலிரண்டினையுமுடைய அரங்கு. இதனை, சிலப்பதிகாரம், அரங்கேற்றுகாதை, க0௬-ம் அடிமுதலியவற்றானுணர்க.

க0௪. கூத்தும் பாட்டும் அழகும் ஆகியவிவற்றைப் புலப்படுத்தி; "ஆடலும் பாடலு மழகு மென்றிக், கூறிய மூன்றி னொன்று குறைபடாமல்" என்பது சிலப்பதிகாரம், அரங்கேற்றுகாதை, அ - கூ; "அழகிகூத் தாடு கின்றாள்" என்றார் சீவகசிந்தாமணியிலும்; பதுமையாரிலம்பகம், அகூ

க0ரு. சுரும்பு - வண்டு; விகாரம். அருப்புக்கணை - மொட்டாருமலராகிய அம்பு; அரும்பு - விகாரம்; "கருப்பு வில்லியை யருப்புக்கணை மைந்தனை" (உ0 - ம் காதை, கூஉ) எனவும், "கருப்பு வில்லி யருப்புக்கணை தூவ" (உரு - ம் காதை, கூ0) எனவும் இந்நூலுள்ளே பின்புவருதல் காண்க.

க0௬. சுருக்குவலை - ஒருவகை வலை. படுத்து - அகப்படுத்திக்கொண்டு.

க0எ. அகம் - வீடு.

க0அ. 'பண்டொடர்மொழியின்' என்றும் பாடம். பயன்பல - பொருள் அணிகலம் ஆடை முதலியன.

க0கூ. வண்டின் - தேனைக்கொண்டு மலரைத் துறக்கும் வண்டுபோல; வண்டு - பரத்தையர்க்குவமை; "நறுந்தா துண்டு நயனில் காலை, வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்" என்று இக்காதையிலேயே முன்பு கூறியிருத்தல் காண்க; கக - உ0; "பருகு வாரிற் புல்லிப் பயங்கண் மாறத் துறக்கு, முருகு விம்மு குழலார் போல மொய்

கக0 பான்மையிற் பிணித்துப் படிற்றுரை யடக்குதல்
கோன்முறை யன்றோ குமரற் கென்றலு
முதைய குமர னுள்ளம் பிறழ்ந்து
விரைபரி நெடுந்தேர் மேற்சென் றேறி
யாயிழை யிருந்த வம்பல மெய்திக்
ககரு காடமர் செல்வி கடிப்பசி களைய
வோடுகைக் கொண்டுநின் றாட்டுனள் போலத்
தீப்பசி மாக்கட்குச் செழுஞ்சோ றீத்துப்
பாத்திர மேந்திய பாவையைக் காண்டலு
மிடங்கழி காமமோ டடங்கா னாகி
கஉ0 யுடம்போ டென்ற னுள்ளகம் புகுந்தெ
னெஞ்சங் கவர்ந்த வஞ்சக கள்வி
நோற்றாண் வாழ்க்கையி னொசிதவந் தாங்கி
யேற்றாண் விரும்பிய காரண மென்னெனத்
தானே தமிய ணின்றோண் முன்னர்
கஉரு யானே கேட்ட லியல்பெனச் சென்று
நல்லா யென்கொ னற்றவம் புரிந்தது

---

கொடும்பி, யுருவப் பூங்கொம் பொசியப் புல்லித் தீந்தேன் பருகி, யருகுவாய்விட் டார்ப்ப வண்ணன் மெல்லச் சென்றான்." என்று வருதல் காண்க; இது **சீவகசிந்தாமணி**, கேமசரியாரிலம்பகம்; ச. கொண்டி மகளிர் - பொருள் கொள்ளுதலையுடைய பரத்தையர்; கொண்டி - கொள்ளையுமாம்; "நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்" என்பது **மதுரைக்காஞ்சி**, ருஅரு.

கக0. படிற்றுரை - பொய்வார்த்தை.

ககக. கோன்முறை - செங்கோன்முறை. என்றலும் - என்று சம்பாபதி கூறலும்.

ககஉ. உள்ளம் பிறழ்ந்து - மனம்வேறுபட்டு.

ககரு. விரைபரி - வினைத்தொகை.

ககச. ஆயிழை - மணிமேகலை. அம்பலம் - உலகவறவி.

ககரு. காடமர்செல்வி - துர்க்கை; "காடமர் செல்வி கழிபெருங் கோட்டமும்" என்றார்முன்னும்; சு - ம் காதை, ருரு. கடிப் பசி களைய - பேய்களின்பசியைத் தவிர்த்தற்பொருட்டு. 'களைஇய' என்றும் பாடம்.

ககரு - ககசு. ஊட்டுனளாகிய காடமர் செல்விபோலவென இயைக்க.

ககஎ - ககஅ. பாத்திரமேந்தி மாக்கட்குச் செழுஞ்சோறீத்தபாவை - மணிமேகலை. காணடலும் - உதையகுமரன் கணடவுடன்.

ககக. இடங்கழிகாமம் - வரம்பின்றிப் பெருகியகாமம்; இராகவேகமென்பாருமுளர்; "இடங்கழி நெஞ்சத் திளமையானை" என்பது **சிலப்பதிகாரம்**, கட்டுரைகாதை, ருஎ.

கஉக. கள்வி - மணிமேகலை.

கஉஉ. நோற்றாண் வாழ்க்கை - விரதங்களாற் பட்டினிவிட்டுணணுதலையுடையவாழ்க்கை. வாழ்க்கை - தவத்திற்கு அடை. நொசிதவம் - நுண்ணியதவம்; "நோற்றுணல் யாக்கை நொசிதவத்தீர்" என்பது **சிலப்பதிகாரம்**, நாடுகாண்காதை, உஉரு.

கஉரு. ஏற்றாண்-இரந்துண்ணுமுணவு. 'காரணம் யாதென' என்றும் பாடம்.

கஉரு - கஉரு. என்னெனக் கேட்டல் இயல்பென்று உதையகுமரன்

கஉசு. நற்றவம் புரிந்தது என்கொல்.

சொல்லா யென்று துணிந்துடன் கேட்ப
வென்னமர் காதல னிராகுல னீங்கிவன்
றன்னடி தொழுதலுந் தகவென வணங்கி
௧௩௦ யறைபோய் நெஞ்ச மவன்பா லணுகினு
மிறைவளை முன்கை யீங்கிவன் பற்றினுந்
தொன்று காதலன் சொல்லெதிர் மறுத்த
னன்றி யன்றென நடுங்கினள் மயங்கிக்
கேட்டது மொழிவேன் கேள்வி யாளரிற்
௧௩௫ றோட்ட செவியைநீ யாகுவை யாமெனிற்
பிறத்தலு மூத்தலும் பிணிப்பட் டிரங்கலு
மிறத்தலு முடைய திடும்பைக் கொள்கல
மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து
மிக்க நல்லறம் விரும்புதல் புரிந்தேன்
௧௪௦ மண்டமர் முருக்குங் களிறனை யார்க்குப்
பெண்டிர் கூறும் பேரறி வுண்டோ

'நல்லா யெனக்கோ நற்றவம் புரிந்தது' எனறும் பாடம்.

௧௨௭. கேட்ப-உதயகுமரன் கேட்ப 'துணிந்துடன் கேட்ப' என்றும் பாடம்.

௧௨அ. என்னமர் காதலன் இராகுலன் - இவன் என்னை விரும்பிய கணவனாகிய இராகுலனாவான்; என்றது பழம் பிறப்பின் செய்தி கூறியபடி.

௧௨௯. வணங்கி - மணிமேகலை வணங்கி.

௧௩௦. அறைபோய் - ஒட்டைபோய். நெஞ்சம் அறைபோய் அவன்பால் அணுகினுமென்க.

௧௩௨. தொன்று - பழமை.

௧௩௩. நன்றியன்று - நன்மையன்று.

௧௩௪. கேட்டது மொழிவேன் - நீ கேட்டதற்கு விடை கூறுவேன். அவன் கேட்டது, முன்பு 'நல்லா யென்கொனற்றவம் புரிந்தது' (௧௨௩ - ம் அடி) என்பதனு லுணரப்படும். கேள்வியாளரின் = கேள்வியாளர்களால்.

௧௩௫. நீ துளைக்கப்பட்ட செவியையுடையாயாயின்.

௧௩௪ - ௧௩௫. எனின்மொழிவேனென இயையும். இதில் "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற், றோட்கப் படாத செவி" என்னும் ௪௧அ - ம் திருக்குறளின் பொருள் அமைந்திருத்தல் கா

மேல்வருவன மணிமேகலை கூற்று.

௧௩௭. இடும்பை - துன்பம்.

௧௩அ. யாக்கையாகிய இது.

௧௩௬-௧௩அ. இம்மூன்று உடையது கொள்கலம் என்க. இவ்வடிகளிற்போலவே "வினையின் வந்தது வினைக்குவிளைவாயது, புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது, மூத்துவிளி வுடையது தீப்பிணியிருக்கை, பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம், புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை, யவலக் கவலை கையா றழுங்க, றவலா வுள்ளந் தன்பா லுடையது, மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து, மிக்கோ யிதனைப் புறமறிப் பாராய்" என்று இந்நூலுள்ளே முன்னும் மக்கள் யாக்கையை இழித்துக்கூறியிருத்தல்காண்க; ௪ - ம் காதை, ௧௧௩ - ௧௨௧.

௧௩௯. நல்லறம் - தயாதருமம்.

௧௪௦. மண்டு அமர் முருக்கும் களிறு - மிக்குச் செல்லுகின்றபோரை அழிக்கும்யானை. 'மண்டல மாடுங் களிறு' என்றும் பாடம்.

௧௪௧. உண்டோ - இல்லையென்றபடி.

௧௪௦ - ௧௪௧. 'களிறனை யார்க்குப்,

கேட்டனை யாயின் வேட்டது செய்கென
வாட்டிறற் குரிசிலை மடக்கொடி நீங்கி
முந்தை முதல்வி முதியா ளிருந்த
கசடு குச்சரக் குடிகை தன்னகம் புக்காங்
காடவர் செய்தி யறிகுநர் யாரெனத்
தோடலர் கோதையைத் தொழுதன ளேத்தி
மாய விஞ்சை மந்திர மோதிக்
காயசண் டிகையெனுங் காரிகை வடிவாய்
கடுo மணிமே கலைதான் வந்து தோன்ற
வணிமலர்த் தாரோ னவள்பாற் புக்குக்
குச்சரக் குடிகைக் குமரியை மரீஇப்
பிச்சைப பாத்திரம் பெரும்பசி யுழந்த
காயசண் டிகைதன் கையிற் காட்டி
கடுரு மாயையி னொளித்த மணிமே கலைதனை
யீங்கிம் மண்ணீட் டியாரென வுணர்கே
னுங்கவ ளிவளென் றருளா யாயிடிற்
பன்னா ளாயினும் பாடு கிடப்பே

பெண்டிர் கூறும் பேரறி வுண்டோ' என்றது முன்னிலைப்புறம்; இப்படியே "இளமை நாணி முதுமை யெய்தி, யுரை முடிவு காட்டிய வுரவோன் மருகற், கறிவுஞ் சால்பு மரசியல் வழக்குஞ், செறிவளை மகளிர் செப்பலு முண்டோ" என்று உதையகுமரனைநோக்கிச் சுதமதிகூறியதாக இந்நூலில் முன்பு கூறியிருத்தல் காண்க; ச - ம் காதை, கoஎ - ககo.

கசஉ. வேட்டது - விரும்பியது.

கசங. குரிசிலை-உதையகுமரனை. மடக்கொடி - மணிமேகலை.

கசச. முதியாள் - சம்பாபதி.

கசடு குச்சரக்குடிகை [=கூர்ச்சரகுடிகா] கூர்ச்சரதேசத்துப் பணியமைந்த சிறிய கோயில். கூர்ச்சரதேசம் சிற்பத்திற் பெயர் பெற்றதென்பர். "குச்சரக் குடிகைக்கன்னியை மரீஇ" என்று இக்காதையிலேயே பின்னும் வரும்; கடுஉ. கூர்ச்சரமென்பது குஜ்ஜரமென்று கன்னடபாஷையில் வழங்கப்படுகின்றது.

கசசு அறிகுநர் - அறிவோர்.

கசஎ. கோதை - சம்பாபதி.

கசஅ. மந்திரம் - மணிமேகலாதெய்வம் உபதேசித்த (வேற்றுரு எய்துவிக்கும்) மந்திரம். இதனை, கo - ம் காதை அo - ம் அடிமுதலியவற்றாலுணர்க.

கசகூ. காரிகை - பெண்.

கசகூ - கடுo. மணிமேகலை காரிகை வடிவாய் வந்துதோன்றவென்க.

கடுக. தாரோன் - உதையகுமரன். அவளென்றது, காயசண்டிகை வடிவு கொண்டு நின்ற மணிமேகலையை.

கடுஉ. குமரி - சம்பாபதி.

மேல்வருவன உதையகுமரன் கூற்று.

கடுங - கடுச. பாத்திரத்தைக் கையிற் காட்டியென்க

கடுசு. மண்ணீடு - சுதையாற் செய்யப்பட்ட பாவை. மண்ணீடுகளுள்ளென எழுனுருபுவிரிக்க.

கடுஅ. பாடுகிடப்பேன் - வரங்கிடப்பேன்; பாடு - படுக்கை; "பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்கு" (கனாத்திறமுரைத்தகாதை, கடு) எனவும், "பாசண் டன்பாற் பாடு கிடந்தாட்கு" (வரந்தருகாதை, எஅ) எனவும் சிலப்பதிகாரத்து வருதல்காண்க.

னின்னுங் கேளா யிமையோர் பாவாய்
௧௧௦ பவளச் செவ்வாய்த் தவளவா ணகையு
மஞ்சனஞ் சேராச் செங்கய னெடுங்கணு
முரிந்துகடை நெரிய வரிந்தசிலைப் புருவமுங்
குவிமுட் கருவியுங் கோணமுங் கூர்நுனைக்
கவைமுட் கருவியு மாகிக் கடிகொளக்
௧௧௫ கல்விப் பாகரிற் காப்புவலை யோட்டி
வல்வா யாழின் மெல்லிதின் விளங்க
முதுக்குறை முதுமொழி யெடுத்துக் காட்டிப்
புதுக்கோள் யானை வேட்டம் வாய்த்தென

௧0௯. இமையோர் பாவாய் - தேவர்களுடைய தலைவி; "பவமறு வித்த வானோர் பாவாய்" (௨௫ - ம் காதை, ௧௭௭) என்று சிந்தாதேவியைப் பின்பு கூறுதல் காண்க.

இனி, உதயகுமரன் மணிமேகலையின் நகைமுதலியவற்றால் தான்வலியழிந்து அவளுக்குவயமாயினமை கூறுவான், தன்னை யானையாகவும் அவள் நகைமுதலியவற்றை யானையையடக்கி வயமாக்குங் கருவிகளாகவும் உருவகஞ்செய்து கூறுகின்றான்.

௧௧௧. 'அஞ்சனஞ் சேரா' என்றதனாற் கண்ணுக்கு மையெழுதாமை துணியப்படும்.

௧௧௩. கோணம் - தோட்டி; "கோணந் தின்ற வடுவாழ் முகத்த" என்பது மதுரைக்காஞ்சி, ௫௯௨.

௧௧௪. கவைமுட்கருவி-கவைத்த முள்ளையுடைய பரிக்கோல்; "கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக், கல்லா வினைஞர் கவளங் கைப்ப" என்பது முல்லைப்பாட்டு, ௩௫ - ௩௬. கடிகொள - காவல்கொள்ள.

௧௧௩ - ௧௧௪. குவிமுட் கருவிமுதலிய மூன்றும் யானையையடக்கும் கருவிவிசேடங்கள்.

௧௧0-௧௧௪. நகை குவிமுட்கருவியும், கண் கோணமும், புருவம் கவைமுட் கருவியுமாகிக் கடிகொளவென வியைக்க; இது நிரனிறை.

௧௧௫. கல்வியாகிய பாகர்களாற் காத்தலாகிய வலையைப்போக்கி; "மடங்கெழு நோக்கின் மதமுகத் திறப்புண், டிடங்கழி நெஞ்சத் திளமை யானை, கல்விப் பாகன் கையகப் படாஅ, தொல்கா வுள்ளத் தோடு மாயினும்" என்றதிற் கல்வியைப் பாகனாக உருவகஞ்செய்திருத்தல் காண்க. இது சிலப்பதிகாரம், கட்டுரைகாதை, ௩௯ - ௩௯.

௧௧௭. முதுக்குறைமுதுமொழி - பேரறிவைப் புலப்படுத்தியமொழி; என்பது "பிறத்தலு மூத்தலும்" என்றது முதலியவற்றை.

௧௧௬ - ௧௧௭. யாழோசைபோல இனிமையாக மொழிகளை எடுத்துக்காட்டி; யானை யாழிற்கு வயமாகுமாதலின், இங்ஙனம் கூறினான்; இதனைப் பின்வரும் மேற்கோள்களாலுணர்க; "காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல், யாழ்வரைத் தங்கி யாங்கு" என்பது கலித்தொகை, ௨. "அணியிழை மகளிரும் யானையும் வணக்கு, மணியொலி வீணை" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், நருமதைச்சம்பந்தம். "இசையினி லிவட்குத் தோற்றும் யானையால் வேறு மென்னி, னிசைவதொன் றன்று கண்டீர்" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், ௨௫௯. 'யானை நாதத்திற்றோற்றலின், அதற்கு வணங்குதலியல்பு' என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

௧௧௮. புதிதாகக் கொள்ளப்படும்யானை வேட்டையில் அகப்பட்டதென்றுகருதி. இது, மணிமேகலையின் உட்கோளென்று உதயகுமரன் கருதினான். 'புதுக்கோட்டியானை' என்றும் பாடம்.

ரியா ளூன்றன் கோட்டம் புகுந்த
கஎ௦ மதிவாண் முகத்து மணிமே கலைதனை
யொழியப் போகே னுன்னடி தொட்டே
னிதுகுறை யென்றன னிறைமகன் றானென

உதையகுமரன் அம்பலம்புக்ககாதை முற்றிற்று.

கசுசு. முதியாள் - விளி.

கஎக. அடிதொடுதல் - சூளுறவுகளுள் ஒன்று; இதனைப் பின்வருவனவற்றாலு ணர்க; "நம்மூ, ணுமுசாஅங் கோனடி தொட்டேன்" என்பது கலித்தொகை, கூசு. "அடல்வலி யெயினர்நி னடி தொடு கடனிது" எனவும் "அடிதொடு படுகடனிது" எனவும் வருவன சிலப்ப திகாரம், வேட்டுவவரி; "சுடரொடு"— "துடியொடு".—

கஎஉ. இதுகுறை - இஃது எனக்கு வேண்டுங்காரியம்; குறை - காரியம்; "முறைவேண் டுநர்க்குங் குறைவேண் டுநர்க்கும், வேண்டுப வேண்டுப வேண் டினர்க் கருளி" என்பது பெரும்பா ணாற்றுப்படை, ௪௪௬ - ௪௪௪. இறைம கன் - உதையகுமரன்.

க - கஎஉ. சித்திராபதி, அதுகேட்டு எறி வெய்துயிர்த்துக் கலங்கித் திரிப்ப லென்று கூத்தியன் மடந்தையரெல்லார் க்குங்கூறும்; அங்ஙனங்கூறுகின்றவள் வஞ்சினஞ்சாற்றி உயிர்த்துத் தேர்ந்து போகிக் குறுகிப் பொருந்தி நின்று எத்த அவன் 'தவறின்றோ' என, அவள், 'வேந்தே; நின்கண்ணி வாழ்க; காஞ்சி அம்பலத்தாயது' என, அதுகேட்டு அவ ட்கு உரைப்போன் 'எய்யாமையலேன்' என்று சொல்ல, சித்திராபதி சிறுநகை யெய்தி, 'படிற்றுரை யடக்குதல் கோன் முறையன்றோ குமரற்கு' என்றலும், உதையகுமரன் உள்ளம் பிறழ்ந்து எறி எய்திக் காண்டலும் அடங்காளுகிச் செ ன்று துணிந்து கேட்ப, அவள் வணங்கி நடுங்கி மயங்கி, 'வேட்டதுசெய்க' என் றுகூறி நீங்கிப் புக்குத் தொழுது எத்தி ஒதிக் காயசண்டிகை வடிவாய் வந்துதோ ன்ற, தாரோன்புக்கு மரீஇ 'இதுகுறை' என்றனனென வினைமுடிவு செய்க.

பத்தொன்பதாவது

# சிறைக்கோட்டமறக்கோட்டமாக்கியகாதை.

[பத்தொன்பதாவது மணிமேகலை காயசண்டிகைவடிவாய்ச் சிறைக்கோட்டம்புக்குச் சிறைவீடுசெய்து சிறைக் கோட்டம் அறக்கோட்டமாக்கிய பாட்டு.]

முதியாள் திருந்தடி மும்மையின் வணங்கி
மதுமலர்த் தாரோன் வஞ்சினங் கூற
வேடவிழ் தாரோ யெங்கோ மகன்மு
னாடாது துணிந்து நாநல்கூர்ந் தனையென
ரு வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச்
சித்திர மொன்று தெய்வங் கூறலு
முதைய குமர னுள்ளங் கலங்கிப்
பொதியறைப் பட்டோர் போன்றுமெய் வருந்தி
யங்கவ டன்றிற மயர்ப்பா யென்றே
க0 செங்கோல் காட்டிய தெய்வமுந் திப்பியம்

க. முதியாள் - சம்பாபதி. மும்மை - மனம் வாக்குக் காயங்கள். 'முறைமையின் வணங்கி' என்றும் பாடம்.

உ. தாரோன் - உதையகுமரன். வஞ்சினம் - சூளுறவு; அஃது "உன்னடி தொட்டேன்" என்றது; கஅ-ம் காதை, களக.

மேல்வருவன தெய்வத்தின் கூற்று.

ச. நாடாது துணிந்து - ஆராயாது துணிவுற்று, நாநல்கூர்ந்தனை - நாவறுமையுற்றாய்; என்றது, "எண்ணித் துணிக கருமந் துணிந்தபி, னெண்ணுவ மென்ப திழுக்கு" என்னும் சசுஎ-ம் திருக்குறளின் பொருளைத் தழுவிவந்தவாறு காண்க. நாநல்கூர்ந்தனை:—க0-ம் காதை, கூச.

ரு. வித்தகர் - சிற்பாசாரிகள்; "வித்தகரியற்றிய, கண்கவரோவியம்" (கூ-ம் காதை, ககூ0 - ககூக) எனவும், "வித்தகரியற்றிய விளங்கிய கைவினைச், சித்திரச் செய்கை" (கூ-ம் காதை, கசுஎ - கசுஅ) எனவும் முன்பு வந்திருத்தல் காண்க; "வித்தக ரியற்றிய விளங்கிய கோலத்து" என்பது சிலப்பதிகாரம், நடுகற்காதை, உஉச.

சு. ஒன்றுதெய்வம் - பொருந்திய தெய்வம்.

ச - சு. நல்கூர்ந்தனையெனக் கூறலுமென்க.

அ. பொதியறை - துவாரமில்லாத கீழறை; "போதார் பிறவிப் பொதியறையோர்" என்பது சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, ககூக.

கூ. அவள் - மணிமேகலை. அயர்ப்பாய் - மறப்பாய்.

க0. செங்கோல் காட்டிய - செங்கோன்முறையை எடுத்துக் காட்டிய. தெய்வமுமென்றது மணிமேகலா தெய்வத்தை; உம்மை - எதிரதுதழீஇயது. திப்பியமென்பதன்பொருளை, எ-ம் காதை, கூஎ-ம் அடிக்குறிப்பிற்பார்க்க.

கூ - க0. உதயகுமரனுக்கு மணிமேக

பையர வலகுல பலாபசி களையக்
கையி லேந்திய பாத்திரந் திப்பிய
முந்தை முதல்வி யடிபிழைத் தாயெனச்
சித்திர முரைத்த விதூஉந் திப்பிய
கரு மிந்நிலை யெல்லா மிளங்கொடி செய்தியிற்
பின்னறி வாமெனப் பெயர்வோன் றன்னை
யகல்வாய் ஞால மாரிரு ளுண்ணப்
பகலர சோட்டிப் பணையெழுந் தார்ப்ப
மாலை நெற்றி வான்பிறைக் கோட்டு
உ0 நீல யானை மேலோ ரின்றிக்
காமர் செங்கை நீட்டி வண்டுபடு
பூநா றுகடாஅஞ் செருக்கிக் கால்கிளர்ந்து

லாதெய்வம் செங்கோன் முறையை யெடுத்துக்காட்டி, மணிமேகலை திறத்தை நீ மறப்பாயென்று கூறியதனை, "கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியுங், கோணிலை திரிந்திடின் மாரி வறங்கூரு, மாரி வறங்கூரின் மன்னுயி ரில்லை, மன்னுயி ரெல்லா மண்ணாள் வேந்தன், றன்னுயி ரென்னுந் தகுதியின் ருகுந், தவத்திறம் பூண்டோ டன்மேல் வைத்த, வவத்திற மொழிகென் றவன் வயி னுரைத்தபின்" (எ - ம் காதை, அ - கச) எனவும், "பொன்றிகழ் மேனி யொருத்தி தோன்றிச், செங்கோல் காட்டிச் செய்தவம் புரிந்த, வங்கவ டன்றிற மயர்ப்பா யென்றனள்" (கஅ - ம் காதை, அக - அரு) எனவும் இந்நூலுள்ளே முன் புவந்தவாற்ருலுணர்க.

சக. 'பசிகெடுப்ப' என்றும் பாடம்.

கக - கஉ. களைய வேந்தியபாத்திரம்.

கரு. பிழைத்தாய் - தவறுசெய்தாய்.

கச. இதூஉம் - இதுவும்.

கரு. இந்நிலையெல்லாம் - செங்கோல் காட்டிய தெய்வமுதலிய மூன்றன் வரலாற்றையும். இளங்கொடி - மணிமேகலை.

கசு. பெயர்வோன்றன்னை - பெயர்ந்து செல்லும் உதயகுமரனை.

இனி இராத்திரியை யானையாக உருவகித்துக் கூறுவார்.

கஅ. பகல் அரசு - சூரியனாகிய அரசனை. பணை - பறை; யானை செல்லுங்கால் அதன்வரவை எல்லார்க்குந் தெரிவித்தற்குப் பணைமுழங்கும்; "வெரூஉப் பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை, வெருவரு செலவின் வெகுளி வேழம்" என்பது பொருநராற்றுப்படை, கஎக - கஎஉ.

கக. மாலை நெற்றி - அந்திக்காலமாகியநெற்றி; பிறைக்கோடு - பிறையாகிய தந்தம்.

உ0. நீலயானை - கரியநிறத்தையுடைய (இராத்திரியாகிய) யானை. மேலோர் - பாகர்; "மேலோரின்றி" என்றார் முன்னும்; ச - ம் காதை, ௬; "மேலோர் வீசி" என்பது மதுரைக்காஞ்சி, ௬அக.

உக. காமர்செங்கை - விருப்பமாகிய ?க்கை.

உஉ. பூநாறுகடாம் - எழிலைப்பாலை மலரினது மணநாறுகின்றமதம்; இதனை, "பாத்த யானையிற் பதங்களிற் படுமத நாறக், காத்த வங்குச நிமிர்ந்திடக் கால்பிடித் தோடிப், பூத்த வேழிலைப் பாலையைப் பொடிப்பொடி யாகக், காத்தி ரங்களாற் றலத்தொடுந் தேய்த்த தோர் களிறு" என்னுஞ் செய்யுளாலுணர்க; இது கம்பராமாயணம், வரைக் காட்சிப்படலம், சு. செருக்கி - களித்து. கால்கிளர்ந்து - காற்றைப்போலே எழுந்து; "கால்கிளர்ந் தன்ன வேழம்" என்பது திருமுருகாற்றுப்படை, அஉ.

நிறையழி தோற்றமொடு தொடர முறைமையி
னகர நம்பியர் வளையோர் தம்முடன்
௨௫ மகர வீணையின் கிளைநரம்பு வடித்த
விளிபுண ரின்சீ ரெஃகுளங் கிழிப்பப்
பொறாஅ நெஞ்சிற் புகையெரி பொத்திப்
பறாஅக் குருகி னுயிர்த்தவன் போயபி
னுறையுட் குடிகை யுள்வரிக் கொண்ட
௩௰ மறுவில் செய்கை மணிமே கலைதான்
மாதவி மகளாய் மன்றந் திரிதரிற்
காவலன் மகனோ கைவிட லீயான்
காய்பசி யாட்டி காயசண் டிகையென
வூர்முழு தறியு முருவங் கொண்டே
௩௫ யாற்று மாக்கட் காற்றுந் துணையாகி

௧௯ - ௨௩. பெயர்வோன்றன்னை நீல யானை தொடர வெனவியைக்க; இரவுவர வென்றபடி.

௨௪. நம்பியர் - காதலஞ்செல்வர்; "நறுஞ்சாந் தகலத்து நம்பியர்" என்பது சிலப்பதிகாரம், ஊர்காண்காதை, ௧௦௦. வளையோர் - மகளிர்.

௨௫. மகரவீணை - மகரயாழ்; இது நால்வகையாழ்களுள் ஒன்று; பதினேழு நரம்புகளையுடையது. கிளைநரம்பு - குரல், இளி, துத்தம், விளரி, கைக்கிளையென்னும் ஐந்துமாம்; இதனை "கிளையெனப் படுவ கிளக்குங் காலைக், குரலே யிளியே துத்தம் விளரி, கைக்கிளை யென வைந் தாகுமென்ப." என்பதனாலுணர்க. வடித்தல் - 'சுட்டு விரலும் பெருவிரலுங் கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய்தல்' என்பர் சிலப்பதிகார அரும்பத வுரையாசிரியர்; 'நரம்பை உருவுதல்' என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

௨௬. இளி-இசை; ஏழுநரம்பினுள் ஒன்றன் பெயராயிருந்தும் எல்லாப்பண்ணிற்கும் இஃது அடிமணையாதலின், ஈண்டு இப்பொருளைத் தந்துநின்றது. சீர் - தாளவறுதி. எஃகு - வேல். சீராகிய எஃகு உளத்தைக்கிழிப்ப.

௨௭. எரிபொத்தி - (காமமாகிய) தீமூட்டப்பட்டு.

௨௮ பறாஅக்குருகின் உயிர்த்து - கொல்லனுலைமூக்குப்போலே யுயிர்த்து; பறாஅக்குருகு - வெளிப்படை; கருவூரைப் பூவாவஞ்சியென்றும், குதிரைமலையை ஊராக்குதிரையென்றும், குறிஞ்சிப்பண்ணைக் கொய்யாக் குறிஞ்சியென்றும் நாஞ்சின்மலையை உழாநாஞ்சிலென்றும் நூல்களில் வழங்குதல் காண்க. "ஊதுலைக் குருகி னுயிர்த்து" என்றார் முன்னும்; ௨ - ம் காதை, ௬௧.

௧௯ - ௨௮. பெயர்வோன்றன்னை நீல யானைதொடர, சீராகியஎஃகு உளங்கிழிப்ப எரிபொத்தி உயிர்த்து அவன் போயபினென்க.

இனி, மணிமேகலை உதயகுமரனுக்கு அஞ்சிக் காயசண்டிகை வடிவத்துடன் பிச்சையிடுதற்கு வெளிப்பட்டு வந்தமை கூறுவார்.

௨௯. உறையுட் குடிகை - இருப்பிடமாகிய சிறிய கோயிலில். உள்வரிக்கொண்ட - வேற்றுருவங்கொண்ட; உள்வரியாவது பாண்டவர் விராடநகரத்துப் பிறிதுருவங்கொண்டாற்போல்வது; இருத்திரிமவேடமென்றும் வடிவுமறைத்தலென்றுங்கூறுவர் சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர்.

௩௧. 'மாதவிமகளாய்' என்பது முதலியன மணிமேகலையின் உட்கோள். மன்றம் - உலகவறவி.

௩௨. காவலனமகன் - உதயகுமரன். கைவிடலீயான் - கைவிடான்.

௩௫. ௧௭ - ம் காதை, ௬௪.

யேற்றலு மிடுதலு மிரப்போர் கடனவர்
மேற்சென் றளித்தல் விழுத்தகைத் தென்றே
நூற்பொரு ளுணர்ந்தோர் நுனித்தன ராமென
முதியாள் கோட்டத் தகவயி னிருந்த
சం வமுத சுரபியை யங்கையின் வாங்கிப்
பதியகந் திரிதரும் பைந்தொடி நங்கை
யதிர்கழல் வேந்த னடிபிழைத் தாரை
யொறுக்குந் தண்டத் துறுசிறைக் கோட்டம்
விருப்பொடும் புகுந்து வெய்துயிர்த்துப் புலம்பி
சரு யாங்குப் பசியுறு மாருயிர் மாக்களை
வாங்கு கையகம் வருந்தநின் றூட்டலு
மூட்டிய பாத்திர மொன்றென வியந்து
கோட்டங் காவலர் கோமகன் றனக்கிப்
பாத்திர தானமும் பைந்தொடி செய்தியும்
ருO யாப்புடைத் தாக விசைத்துமென் றேகி
நெடியோன் குறளுரு வாகி நிமிர்ந்துத
னடியிற் படியை யடக்கிய வந்நா
ணீரிற் பெய்த மூரி வார்சிலை
மாவலி மருமான் சீர்கெழு திருமகள்

---

ங௯ - ௩௮. வாங்குதலும் கொடுத்தலும் இரப்போர்கடனுமாதலின், அவர் எவ்விடத்தும் வலிந்து சென்று கொடுத்தல் சிறப்புடைத்தென்று நூற்பொருளுணர்ந்தோர் ஆராய்ந்து சொன்னாரென்று கருதி. (?)

சO. வாங்கி - கொண்டு.

சக. நங்கை - மணிமேகலை. 'பைந்தொடி மடந்தை' என்றும் பாடம்.

சஉ. பிழைத்தாரை - பிழை செய்தாரை.

சங. தண்டத்து - தண்டத்தினையுடைய. சிறைக்கோட்டம்-சிறைச்சாலை.

ங௦ - சரு. மணிமேகலை, நுனித்தனராமென வாங்கிப் புகுந்து நின்று மாக்களையூட்டலுமென்க.

இவள் பலரையும் உண்பித்தல்கண்ட கோட்டங்காவலர் வியப்புற்றுச்சென்று அரசனுக்குத் தெரிவித்தல் இனிக்கூறப்படும்.

ருO. யாப்புடைத்தாக - உறுதியுடைத்தாக. இசைத்தும் -சொல்லுவேம்.

சஎ - ருO. கோட்டங்காவலர் வியந்து தானமும் செய்தியும் கோமகனுக்கு இசைத்துமென்றேகியென்க.

ருக. நெடியோன் - திருமால், குறளுருவாகி - வாமனனாகி, நிமிர்ந்து - பேருருவங்கொண்டு.

ருஉ. அடக்கிய- அடக்க. அந்நாளில்; அடக்கிய அந்நாளென வினைத்துப் பெயரெச்சத்தொடராக்கினுமமையும்.

ருங. நீரிற் பெய்த - நீருடன் பூமியைக்கொடுத்த; பூமியைத் தாரைவார்த்துக் கொடுத்தவென்றபடி.

ருஉ - ருங. அடக்கிய நீரிற் பெய்த வெனவியைக்க.

ருச. மாவலி மருமான் மகள் - மகாபலியின் வழித்தோன்றலாகிய அரசனுடைய மகள்; அரசன்பெயர் புலப்படவில்லை.*

* மகாபலியின் பரம்பரையரசர் யாரென்று வினவியபொழுது, இராசாங்கத்துச் சிலாசாதன பரிசோதகர்களுள் ஒருவராகிய ம-ள-ள-ஸ்ரீ வி. வெங்கையரவர்கள்

ருரு சீர்த்தி யென்னுந் திருத்தகு தேவியொடு
போதவிழ் பூம்பொழில் பொருந்தினன் புக்குக்
கொம்பர்த் தும்பி குழலிசை காட்டப்
பொங்கர் வண்டின நல்லியாழ் செய்ய
வரிக்குயில் பாட மாமயி லாடும்
சுo விரைப்பூம் பந்தர் கண்டுளஞ் சிறந்தும்
புணர்துணை நீங்கிய பொய்கை யன்னமொடு
மடமயிற் பேடையுந் தோகையுங் கூடி
யிருசிறை விரித்தாங் கெழுந்துடன் கொட்பன

ருரு. சீர்த்தியென்று பெயர் கூறப்படும் செல்வமிக்க தேவியுடன். 'சீதரதனையெனுந் திருத்தகு தேவி' என்றும் பாடம்.

ருசு. போது - மலரும் பருவமுள்ள அரும்பு. 'பொருந்தினன் புக்கு' என்றும் பாடம்.

ருஎ. குழல் - வேய்ங்குழல்.

ருஅ. பொங்கர் - சோலை

ருஎ - ருஅ. இவ்வடிகளிற்போலவே "குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட, மழலை வண்டின நல்லியாழ் செய்ய" என்று முன்பு வந்திருத்தல் காண்க; ச - ம் காதை, கூ - ௪.

ருகூ. வரி - வரிப்பாட்டு; கீற்றுமாம். 'மாமயி லாடுவ' என்றும் பாடம்.

ருஎ - சுo. காட்டச் செய்யப் பாட ஆடும்பந்தர்கண்டு உளஞ்சிறந்துமென்க.

சுக. துணை - பெண்ணன்னம்.

சுஉ. தோகை - ஆண்மயில். 'சேவலுங் கூடி' என்றும் பாடம்.

சுஈ. கொட்பன - சுழலுவனவற்றை.

(எம் - வ), அன்புடன் எழுதியனுப்பியவிடை வருமாறு:—" "பாணவம்சத்து அரசர்கள் மகாபலியின் பரம்பரையைச்சேர்ந்தவர்கள்; அவர்களின் கல்வெட்டுக்கள், வட ஆர்க்காடு ஜில்லா வேலூருக்கடுத்த திருவல்லமென்கிற கிராமத்திலும் மைஸூர் ஸம்ஸ்தானத்தில் தூல்கான்போடே என்கிற ஊரிலும் கிடைத்திருக்கின்றன; "மூவுலகிலும் தொழப்பட்டவனும் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் தலைவனுமிருக்கின்ற பரமேசுவரனுக்கு வாயில்காக்கும்படியாக நியமிக்கப்பட்டமகாபலிகுலத்தைச்சேர்ந்தவன்" என்று சிலபாணவரசர்கள், தங்களுக்குரிய கல்வெட்டுக்களிற் சிறப்பிக்கப்பட்டிருக்கிறார்கள். பாணகுலத்தைச்சேர்ந்த செப்புப்பட்டயங்கள் இரண்டுண்டு. அவற்றில் ஒன்று, சிதம்பரம் கனகஸபையின் முகட்டைப் பொன்வேய்ந்த பராந்தகனென்று சொல்லப்பட்ட வீரநாராயணச்சோழன் பாணவம்சத்தை நிர்மூலஞ்செய்து அவர்களின் நாட்டைக் கங்கவம்சத்தைச்சேர்ந்த அத்திமல்லனென்ற அரசனுக்குக்கொடுத்ததாகச் சொல்லுகின்றது. இந்த வீரநாராயணன் கி. பி. 10 - ம் நூற்றாண்டின் முற்பாதியில் ஜீவித்திருந்தான். மற்றொரு செப்புப்பட்டயத்தில் கீழே எழுதப்பட்டிருக்கும் வம்சாவலி கிடைத்தது:— பலி, அவன் மகன் பாணன், அவன் குலத்திற்பிறந்தவன் பாணுதிராசன், இவ்வம்சத்தைச்சேர்ந்த அநேக அரசர்கள் மரித்தபிறகு இருந்தோன் ஜயநந்திவர்மன் (-இவன் ஆந்திரதேசத்திற்கு மேற்கிலிருந்த நாட்டை ஆண்டவன்), அவன் மகன் முதலாம் விசயாதித்தன், அவன்மகன் ஜகதேகமல்லனென்கிற மல்லதேவன், அவன்மகன் பாணவித்தியாதரன், அவன் மகன் பிரபுமேருதேவன், அவன் மகன் முதலாம் விக்கிரமாதித்தன், அவன் மகன் புகழ்விப்பவர்கண்டனென்கிற இரண்டாம் விசயாதித்தன், அவன்மகன் விசயபாகுவென்று கூறப்பட்ட இரண்டாம் விக்கிரமாதித்தன் (- இவன் கிருஷ்ணராஜனென்ற அரசனுக்கு நேசன்.) இந்த அரசர்களின்காலம் தெரியவில்லை."

வொருசிறைக் கண்டாங் குண்மகிழ் வெய்தி
கூரு மாமணி வண்ணனுந் தம்முனும் பிஞ்ஞையு
மாடிய குரவையிஃ தாமென நோக்கியுங்
கோங்கலர் சேர்ந்த மாங்கனி தன்னைப்
பாங்குற விருந்த பல்பொறி மஞ்ஞையைச்
செம்பொற் றட்டிற் றீம்பா லேந்திப்
எ0 பைங்கிளி யூட்டுமோர் பாவையா மென்று
மணிமலர்ப் பூம்பொழி லகவயி னிருந்த
பிணவுக்குரங் கேற்றிப் பெருமதர் மழைக்கண்
மடவோர்க் கியற்றிய மாமணி யூசல்
கடுவனூக் குவது கண்டுநகை யெய்தியும்
எரு பாசிலை செறிந்த பசுங்காற் கழையொடு
வால்வீ செறிந்த மராஅங் கண்டு
நெடியோன் முன்னொடு நின்றன னாமெனத்

கச. ஒருசிறை - ஒருபக்கம்.

கரு. மாமணிவண்ணன் - கண்ணன். தம்முன் - பலதேவர். பிஞ்ஞை - நப்பின்னை. 'பின்னையும்' என்றும் பாடம்.

கசு. ஆடிய - (துவராபதியில் எருமன்றத்தே அக்காலத்து) ஆடிய. குரவை - கைகோத்தாடுங்கூத்து; இதனை, வரிக்கூத்தின் ஒருறுப்பென்றும், விநோதக்கூத்து ஆறினுள் ஒன்றென்றுங்கூறுவர் அடியார்க்கு நல்லார்.

கரு - கசு. கண்ணனும் பலதேவரும் நப்பின்னையுமாகிய மூவரும் துவராபதியில் எருமன்றத்தே குரவைக்கூத்து ஆடியதனை, "மாயவன்றன் முன்னினொடும் வரிவளைக்கைப் பின்னையொடுங், கோவலர்தஞ் சிறுமியர்கள் குழற்கோதை புறஞ்சோர, வாய்வளைச்சீர்க் கடிபெயர்த்திட் டசோதையார் தொழுதேத்தத், தாதெருமன் றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே" என்பதனாலுணர்க. இது சிலப்பதிகாரம், ஆய்ச்சியர் குரவை.

கக - கசு. அன்னத்திற்குப் பலதேவரும், மயிற்பேடைக்கு நப்பின்னையும், தோகைக்குக் கண்ணனும் உவமைகள். கொட்புனவற்றைக் கண்டு மகிழ்வெய்திக் குரவையிஃதாமென நோக்கியுமென்க.

கஎ. கோங்கலர் - கோங்கம்பூ.

கஅ. மஞ்ஞை - மயில்.

எ0. பாவை - பெண். என்றும் - என்று கருதியும்.

கஎ - எ0. கோங்கலர்க்குப் பாலையுடையபொற்றட்டும், மாங்கனிக்குக் கிளியும், மயிலுக்குப் பெண்ணும் உவமைகள்.

எக. பிணவுக்குரங்கு - பெண்குரங்கு; "பன்றி புல்வாய் நாயென மூன்றும், ஒன்றிய வென்ப பிணவென் பெயர்க்கொடை" (தொல்காப்பியம், மரபியல், ருஅ) என்னும் சூத்திரத்தில் 'ஒன்றிய' என்றதனாற் 'பிணவு' என்பது குரங்குக்கும் கொள்ளப்பட்டது.

எங. மடவோர்க்கு - மகளிர்க்கு.

எச. கடுவன் - ஆண்குரங்கு; "குரங்கினேற்றினைக் கடுவ னென்றலும்" என்பது தொல்காப்பியம், மரபியல், கஅ. ஊக்குவது - செலுத்துதலை. 'கண்டுமகிழ் வெய்தியும்' என்றும் பாடம்.

எக - எச. கடுவன், பிணவுக்குரங்கையேற்றி ஊசலை ஊக்குவதுகண்டு நகையெய்தியுமென்க.

எரு. கழை - மூங்கில்.

எசு. வால்வீ - வெள்ளியமலர். மராம் - வெண்கடம்பு.

எஎ. நெடியோன் - கண்ணன். முன் - தமையன்; என்றது பலதேவனை. 'நெடியோன் றம்முனொடு' என்றும் பாடம்.

எரு - எஎ. கழைக்குக் கண்ணனும்,

தொடிசேர் செங்கையிற் றொழுதுநின் றேத்தியு
மாடற் கூத்தினே டவிநயந் தெரிவோர்
அ௦ நாடகக் காப்பிய நன்னூ னுனிப்போர்
பண்ணியாழ் நரம்பிற் பண்ணுமுறை நிறுப்போர்
தண்ணுமைக் கருவிக் கண்ணெறி தெரிவோர்
குழலொடு கண்டங் கொளச்சீர் நிறுப்போர்
பழுனிய பாடல் பலரொடு மகிழ்வோ
அடு ராரம பரிந்த முத்தங் கோப்போ
ரீரம் புலர்ந்த சாந்தந் திமிர்வோர்
குங்கும வருணங் கொங்கையி னிழைப்போ
ரஞ்செங் கழுநீ ராயிதழ் பிணிப்போர்
நனைவெடுங் கூந்த னறுவிரை குடைவோர்
கூ௦ பொன்னணி யாடியிற் பொருந்துபு நிற்போ
ராங்கவர் தமமோ டகவிரு வானத்து
வேந்தனிற் சென்று விளையாட் டயர்ந்து

வெண்கடம்பிற்குப் பலதேவரும் உவமைகள்.

எஅ. தொடி - வீரவளை; "தொடித் தோட்கை துடுப்பாக" என்பது மதுரைக்காஞ்சி, கூ௪.

எக. அவிநயம் - கதைதழுவாதே பாட்டுக்களின் பொருள்தேர்னறக் கைகாட்டி அவிநயிப்பது.

அ௦. நாடகம் - கதைதழுவிவருங்கூத்து. காப்பியம் - காவ்யம். நாடகக்காப்பியமாகிய நன்னூலென்க. நுனிப்போர் - கூர்ந்து ஆராய்வோர்; "நூற்பொரு ளுணர்ந்தோர் நுனித்தனர்" என இக்காதையிலேயே முன்பு வந்திருத்தல் காண்க; கூஅ - ம் அடி.

அக. பண்களையுடைய வீணைநரம்பு களிற் பண்களை முறையே நிறுத்துவோர்.

அஉ. தண்ணுமைக்கருவி - மத்தளம்; இதனை உத்தமத்தோற் கருவியென்பர். கண்ணெறிதெரிவோர் - அதன் முகத்தில அடித்தலையாராய்வோர்; கண் - வாத்தியங்களின் முகம்; "பண்ணமை முழவின் கண்ணெறி யறிந்து" என்பது சிலப்பதிகாரம், அரங்கேற்றுகாதை, கக.

அ௩. குழலொடு கண்டம் கொள - வேய்ங்குழலோடு மிடற்றுப்பாடல் பொருந்துமவண்ணம். சீர் - தாளவறுதி.

அ௪. பழுனிய பாடல் - முற்றப்பெற்ற இசைப்பாடல். மகிழ்வோர் - மகிழ்ந்துபாடுவோர். 'பலவொடு மகிழ்வோர்' என்றும் பாடம்.

அடு. ஆரம் பரிந்தமுத்தம் - ஆரம் அறுபடுதலாற் சிந்தியமுத்துக்கள்.

அசு. புலர்ந்த சாந்தம் - உலர்ந்த சந்தனம்.

அஎ. குங்குமவருணம் - சிவந்தசாய் யிற்குழம்பு. இழைப்போர் - எழுதுவோர்.

அஅ. ஆயிதழ்பிணிப்போர் - அழகிய இதழைக்கட்டுவோர்; 'ஆயிதழ் பிணைப்போர்' என்றும் பாடம்.

கூ௦. ஆடி - கண்ணாடி. 'பொன்னணியாடியின்' என்றும் பாடம்.

எக - கூக. தெரிவோரும், நுனிப்போரும், நிறுப்போரும், தெரிவோரும், நிறுப்போரும், மகிழ்வோரும், கோப்போரும், திமிர்வோரும், இழைப்போரும், பிணிப்போரும், குடைவோரும், நிற்போருமாகிய அவர்களோடென்க.

கூக - கூஉ. யானத்து வேந்தனில் - இந்திரன்போல; "வேந்தன் மேய தீம்புன லுலகமும்" (தொல்காப்பியம்,

குருந்துந் தளவுந் திருந்துமலர்ச் செருந்தியு
முருகுவிரி முல்லையுங் கருவிளம் பொங்கரும்
கூரு பொருந்துபு நின்று திருந்துநகை செய்து
குறுங்கா னகுலமு நெடுஞ்செவி முயலும்
பிறழ்ந்துபாய் மானு மிறும்பகலா வெறியும்
வம்மெனக் கூஉய் மகிழ்துணை யொடுதன்
செம்மலர்ச் செங்கை காட்டுபு நின்று
க00 மன்னவன் ருனு மலர்க்கணை மைந்தனு
மின்னிள வேனிலு மிளங்காற் செல்வனு
மெந்திரக் கிணறு மிடுங்கற் குன்றமும்
வந்துவீ ழருவியு மலர்ப்பூம் பந்தரும்
பரப்புநீர்ப் பொய்கையுங் கரப்புநீர்க் கேணியு
க0ரு மொளித்துறை யிடங்களும் பளிக்கறைப் பள்ளியும்
யாங்கணுந் திரிந்து தாழ்ந்துவிளை யாடி

அகத்திணையியல், ரு) எனவும், வேந்தனும் வேந்து கெடும்" திருக்குறள், அகூகூ.) எனவும் வருதலால், வேந்தனென்றற்கே இந்திரனென்று பொருள்கூறினும் இழுக்காது. விளையாட்டயர்ந்து - விளையாட்டை விரும்பிச்செய்து.

கூரு. தளவு - செம்முல்லை. செருந்தி - ஒருமரம்; இது செருந்தெனவும் வழங்கும். 'குருகுந் தளவுந் திருமலர்ச் செருந்தியும்' என்றும் பாடம்.

கூச. முருகு - வாசனை. கருவிளை - ஒருமரம். "நறுந்தண் ணகிலுஞ் சந்தனக் குழையுங், கருவிளங் கோடும்" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், நீராட்டரவம். பொங்கர் - சோலை; கிளையுமாம்.

கூரு. நகுலம் - கீரி.

கூஎ. இறும்பு - குறுங்காடு. வெறி - ஆடு. 'விரும்புகயாவெறியும்' என்றும் பாடம்.

கூஅ. வம்மெனக்கூஉய் - வாருமென்றுகூவி; வாருமென்றது 'வம்' என நின்றது; "கதுமெனக் சனைந்து வம்மெனக் கூஉய்" என்பது பொருநராற்றுப்படை, க0க. மகிழ்துணை - இராசமாதேவி.

கூகூ. காட்டுபு - காட்டி.

க00. மலர்க்கணை மைந்தன் - மன்மதன்.

க0க. இன்னிள வேனில் - இனிய இளவேனிற்பருவம்; அஃதாவது சித்திரை வைகாசிமாதங்கள். இளங்காற்செல்வன் - தென்றற்காற்றாகிய செல்வன்; "சிறுகாற் செல்வன் மறுகிற் றூற்ற" என்பது சிலப்பதிகாரம், அந்திமாலைச் சிறப்புச்செய்காதை, கஅ.

க0உ. எந்திரக்கிணறு - நீரை நிறைக்க வேண்டுமாயின் நிறைத்தும் போக்கவேண்டுமாயிற் போக்குதற்குரிய கிணறு. இடுங்கற்குன்றம் - செய்குன்று.

க0ச. கரப்புநீர்க்கேணி - மறைதலையுடைய நீரையுடைய கிணறு; இதனை அந்தக்கேணியென்பர்.

க0ரு. பளிக்கறை - பளிங்கறை. பள்ளி - இடம்.

க0கூ. யாங்கணும் - கிணறும் குன்றமும் அருவியும் பந்தரும் பொய்கையும் கேணியும் இடங்களும பள்ளியுமாகிய எவ்விடத்தும். திரிந்து - மன்னவன்றனும் மைந்தனும் வேனிலும் செல்வனுந் திரிந்து.

க0உ - க0கூ. இவ்வடிகளிற்போலவே, "அந்தக்கேணியு மெந்திரக் கிணறுந், தண்பூங்காவுந் தலைத்தோன் றருவிய, வெணசுதைக் குன்றொடு வேண்டுவ பிறவு, மிளையோர்க் கியற்றிய விளையாட்டிடத்த, சித்திரப் பூமி வித்தக நோக்கி" (பெருங்கதை, உஞ்சைச்சாண்டம், மாலை

மகத வினைஞரு மாராட்டக் கம்மரு
மவந்திக் கொல்லரும் யவனத் தச்சருந்
தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடிக்
௧௧௦ கொண்டினி தியற்றிய கண்கவர் செய்வினைப்
பவளத் திரள்காற் பன்மணிப் போதிகைத்
தவள நித்திலத் தாமந் தாழ்ந்த
கோணச் சந்தி மாண்வினை விதானத்துத்
தமனியம் வேய்ந்த வகைபெறு வனப்பிற்
௧௧௫ பைஞ்சேறு மெழுகாப் பசும்பொன் மண்டபத்
திந்திர திருவன் சென்றினி தேறலும்
வாயிலுக் கிசைத்து மன்னவ னருளாற்
சேய்நிலத் தன்றியுஞ் செவ்வியின் வணங்கி

ப்புலம்பல்) எனவும், "பளிக்கறைப் பூமி யும்பசுந்தெறி களத்து, மணிக்கயிற் றூசன் மறலிய விடத்துங், கொய்மலர்க் காவும் பொய்கைக் கரையு, மந்தக் கேணியும் வந்துபெயர் கூவி" (பெருங்கதை, உஞ்சைக்காண்டம், யாழ்கை வைத்தது) எனவும் வருதல்காண்க.

௧௦௭. மகதவினைஞர் - மகதநாட்டிற்பிறந்த இரத்தினவேலைக்காரர். மராட்டம் - மகாராஷ்டிரதேசம்.

௧௦௮. அவந்தி - அவந்திதேசம். யவனம் - யவனதேசம்.

௧௦௭ - ௧௦௮. மகததேசத்துப் பிறந்த இரத்தினவேலைக்காரர் முதலியோர் தொழிலிற் பெயர்பெற்றவரென்பதை, "யவனத் தச்சரு மவந்திக் கொல்லரு, மகதத்துப் பிறந்த மணிவினைக் காரரும ...... பிறந்த பசும்பொன் வினைஞருங், கோசலத் தியன்ற வோவியத் தொழிலரும், வத்த நாட்டு வண்ணக் கம்மரும்" என்பதனுணர்க. இது, பெருங்கதை, உஞ்சைக்காண்டம், சயந்திபுக்கது.

௧௦௭ - ௧௦௯. மேற்கூறிய மகதவினைஞர் முதலியோர் தண்ணிய தமிழ்நாட்டிற்பிறந்த வேலைக்காரருடனேகூடி.

௧௧௨. நித்திலத்தாமம் - முத்துமாலை.

௧௧௩. கோணச்சந்தி - கோணமாகிய சந்தி; "சந்திக் கோணமு மெந்திர வாணியும்" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், சயந்திபுக்கது. விதானம் - மேற்கட்டி.

௧௧௪. தமனியம் - பொன். 'வகை வேறு வனப்பின்' என்றும் பாடம்.

௧௧௫. பைஞ்சேறு மெழுகா - ஆப்பியால் மெழுகப்படாத; "பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்" பெரும்பாணாற்றுப்படை, ௨௯௮; சந்தனத்தால் மெழுகியவென்றபடி; "மங்கல வெள்ளை வழித்துமுத் திர்த்தபின்" என்று வருதல் காண்க. இது சீவகசிந்தாமணி, கேமசரியாரிலம்பகம், ௯௯. 'செம்பொன் மண்டபத்து' என்றும் பாடம்.

௧௧௬. இந்திரதிருவன் - இந்திரச்செல்வமுடைய அரசன்.

௫௧ - ௧௧௬. இந்திரதிருவன், தேவியொடுபுக்குக் கண்டு உளஞ்சிறந்தும் நோக்கியும பாவையாமென்றும் நகைசெய்தியும் எத்தியும் அவர்தம்மோடுசென்று அயர்ந்து பொருந்துபுணர்று நகைசெய்து கூடியக் காட்டுபுகின்று யாங்களுந்திரிந்து விளையாடி மண்டபத்து அவன் சென்று இனிது வேறலுமென்க.

௧௧௭. வாயிலுக்கு இசைத்து - வாயில் காவலர்க்குத் தெரிவித்து. அருளால் - கட்டளையால்.

௧௧௮. சேய்நிலத்தன்றியும் - தூரமான இடத்தே தாம் நின்றதல்லாமலும். செவ்வியின் - சமயத்தில்.

௪௮ - ௧௧௮. கோட்டங்காவலர் இசைத்துமென்றேகி இசைத்து வணங்கியெனக் கூட்டுக.

யெஞ்சா மண்ணசைஇ யிகலுளந் துரப்ப
கஉ0 வஞ்சியி னிருந்து வஞ்சி சூடி
முறஞ்செவி யானையுந் தேரு மாவு
மறங்கெழு நெடுவாள் வயவரு மிடைந்த
தலைத்தார்ச் சேனையொடு மலைத்துத் தலைவந்தோர்
சிலைக்கய னெடுங்கொடி செருவேற் றடக்கை
கஉரு யார்புனை தெரிய விளங்கோன் றன்னாற்
காரியாற்றுக் கொண்ட காவல் வெண்குடை
வலிகெழு தடக்கை மாவண் கிள்ளி
யொளியொடு வாழி யூழிதோ றூழி

ககக. எஞ்சா மண் நசைஇ - குறையாத மண்ணைவிரும்பி, இகல் உளம் துரப்ப - மாறுபாடு உள்ளத்தைச்செலுத்த. 'எஞ்சார் மண்ணசை' என்றும் பாடம்.

கஉ0. வஞ்சியின் இருந்து - கருவூரிலிருந்து, வஞ்சி சூடி - வஞ்சிப்பூமாலையைச்சூடி; "பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி, வாய்வாணெடுந்தகை மணிமுடிக் கணிந்து" என்று இப்படியே சிலப்பதிகாரத்துங் கூறியிருத்தல் காண்க; கால்கோட்காதை, ருo.

ககக - கஉ0. இதனை, "எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்த, னஞ்சு தகச் சென் றடல்குறித் தன்றே" (தொல்காப்பியம், புறத்திணையியல், எ.) எனவும், "வாடா வஞ்சி தலைமலைந்து, கூடார் மண் கொளல்குறித்தன்று"; "வஞ்சி வணங்கார் வணக்கிய வண்டார்ப்பக், குஞ்சி மலைந்தானெங் கோ" (புறப்பொருள்வெண்பாமாலை, வஞ்சிப்படலம், க.) எனவும் வருவனவற்றாலுணர்க.

கஉக. முறஞ்செவி யானை - முறம்போலும் காதுகளையுடையயானை; "முறஞ்செவி வாரணம்" என்பது சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, உசஎ.

கஉஉ. மறம் - ஆண்மை. வயவர் - வீரர். 'மறவரு மிடைந்த' என்றும் பாடம்.

கஉங. தலைத்தார்ச்சேனையொடு - முதன்மையாகிய தூசிப்படையோடு. மலைத்து - மாறுபட்டு. தலைவந்தோரென்றது சேரபாண்டியர்களை; பின் "சிலைக்கய னெடுங்கொடி" என்று வருதலால் இங்ஙனங்கொள்ளப்பட்டது.

கஉச. சிலைக்கயல் நெடுங்கொடி - சேரனுடைய விற்கொடியையும், பாண்டியனுடைய கயற்கொடியையும்.

கஉரு. ஆர் - ஆத்தி; இது சோழர்களுக்கு உரிய அடையாளமாலை இளங்கோன் - தம்பி; இவன் யுவராஜாவாக இருத்தலின், 'இளங்கோன்' என்றார் போலும்.

கஉசு. காரியாறு - ஒருநதியின்பெயர். இதனை, 'காரியாற்றுத்துஞ்சியநெடுங்கிள்ளி' (புறநானூறு, சஎ) எனவும், "செல்கதிமுன் னளிப்பார்தந் திருக்காரிக் கரைபணிந்து" (பெரியபுராணம், திருநாவுக்கரசுநாயனார்புராணம், ருசரு) எனவும் வருவனவற்றாலுணர்க. பெரும்போர்புரிவோர் ஆற்றிடையே அது செய்தல் இயல்பு; "உடன்றுமேல் வந்த வாரிய மன்னரைக், கடும்புனற் கங்கைப்பேர்யாற்று வென்றோய்" (சிலப்பதிகாரம், நடுகற்காதை, கஉ0 - கஉக.) என்று வருதல் காண்க.

கஉஎ. மாவண்கிள்ளி - விளி; இஃது அரசன் பெயர்.

கஉரு - கஉஎ. வந்தோருடைய கொடிகளை இளங்கோனாற் காரியாற்றுக்கொண்ட மாவண்கிள்ளியென்க.

கஉஅ. ஒளி - உறங்காநிற்கவும் உலகங்காக்கின்ற அரசரிடத்துள்ள கடவுட்டன்மை; "இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற, வொளியோ டொழுகப்படும்" என்பது திருக்குறள், சுகஅ; "உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" என்பது சீவகசிந்தாமணி, நாமக

வாழி யெங்கோ மன்னவர் பெருந்தகை
கஙo கேளிது மன்னோ கெடுகநின் பகைஞர்
யானைத் தீநோய்க் கயர்ந்துமெய் வாடியிம்
மாநகர்த் திரியுமோர் வம்ப மாத
ரருஞ்சிறைக் கோட்டத் தகவயிற் புகுந்து
பெரும்பெயர் மன்ன நின்பெயர் வாழ்த்தி
கஙரு ஐயப் பாத்திர மொன்றுகொண் டாங்கு
மொய்கொண் மாக்கண் முசிக்கவூண் சுரந்தன
ளூழிதோ றூழி யுலகங் காத்து
வாழி யெங்கோ மன்னவ வென்றலும்
வருக வருக மடக்கொடி தானென்
கசo றருள்புரி நெஞ்சமொ டரசன் கூறலின்
வாயி லாளரின் மடக்கொடி தான்சென்
றாய்கழல் வேந்த னருள்வா ழியவெனத்
தாங்கருந் தன்மைத் தவத்தோய் நீயார்
யாங்கா கியதிவ் வேந்திய கடிஞையென்
க றரசன் கூறலு மாயிழை யுரைக்கும்
விரைத்தார் வேந்தே நீநீடு வாழி
விஞ்சை மகள்யான் விழவணி மூதூர்
வஞ்சந் திரிந்தேன் வாழிய பெருந்தகை
வானம் வாய்க்க மண்வளம் பெருகுக
கருo தீதின் றாக கோமகற் கீங்கீ
தையக் கடிஞை யம்பல மருங்கோர்

ளிலம்பகம், உகக. 'ஒலியொடுவெழா அது' என்றும் பாடம்.

கஉக. 'வாழி யெங்கோ வாழிய பெருந்தகை' என்றும் பாடம்.

கஙக. அயர்ந்து - வலையுற்று.

கஙஉ. வம்பமாதர் - காயசண்டிகை; வம்பு - புதுமை.

கஙச. பெரும்பெயர் - பெரியபுகழ்.

கஙசு. மொய் - நெருக்கம். முசிக்க - (வாங்குதலால்) மெலிய. 'மொசிக்கவூண் சுரந்தனள்' என்றும் பாடம்.

கஙஉ - கஙசு. மாதர் புகுந்து வாழ்த்திக் கொண்டு ஊண்சுரந்தனள்.

கஙஅ. என்றலும் - என்று கோட்டங் காவலர் கூறலும்.

கஙகூ. மடக்கொடிவருக வருகவென்று.

கசக. வாயிலாளரின் - வாயிலாளர்களால்.

கசஉ. வாழியவென - வாழ்கவென்று மணிமேகலைசொல்ல. 'தான்வா ழிய' என்றும் பாடம்,

மேல்வருவது அரசன்கூற்று.

கசச. நீ ஏந்திய இப்பாத்திரம் எங்கே கிடைத்தது.

மேல்வருவன மணிமேகலைகூற்று.

கசஎ. விஞ்சைமகளென்பதற்கு வித்தையையுடைய மகளென்றும், வித்தியாதரமகளென்றும் இருபொருள்கொள்க. பின்வருவனவும் இப்படியே ஏற்பப்பொருள் கொள்ளுதற்குரியவை.

கசக. வானம் - மழை.

கருo. கோமகற்குத் தீதின்றாகுக. 'கோமகன் றனக்கிங்கு' என்றும் பாடம்.

கருo - கருக. ஈது ஐயக்கடிஞை - இது பிச்சைப்பாத்திரம்.

தெய்வந் தந்தது திப்பிய மாயது
யானைத் தீநோ யரும்பசி கெடுத்த
தூனுடை மாக்கட் குயிர்மருந் திதுவென
கருரு யான்செயற் பாலதெ னிளங்கொடிக் கென்று
வேந்தன் கூற மெல்லிய லுரைக்குஞ்
சிறையோர் கோட்டஞ் சீத்தரு ளெஞ்சத்
தறவோர்க் காக்கு மதுவா ழியரென
வருஞ்சிறை விட்டாங் காயிழை யுரைத்த
கசுO பெருந்தவர் தம்மாற் பெரும்பொரு ளெய்தக்
கறையோ ரில்லாச் சிறையோர் கோட்ட
மறவோர்க் காக்கின னரசாள் வேந்தெள

சிறைக்கோட்டம் அறக்கோட்டமாக்கியகாதை முற்றிற்று.

---

கருஉ. திப்பியமாயது-தெய்வலோகத்திருந்து உண்டாகியபொருளாவுள்ளது.

கருச ஊனுடைமாக்கட்கு-உடம்பு மெலிந்தவர்களுக்கு. உயிர்மருந்து - உயிரைக்கொடுக்குமருந்து. 'மானிட மாக்கள்ளுயிர்மருந்து' என்றும்பாடம். என - என்று மணிமேகலைசொல்ல.

கருஎ. 'கோட்டஞ் சிதைத்து' என்றும் பாடம்.

கருஅ. 'அறவோர்க் காக்குமதி' என்றும் பாடம்.

கருஎ - கருஅ. சிறைச்சாலையை இடித்துத் தூய்மைசெய்து அவ்விடத்தை அருள்பொருந்திய மனத்தையுடைய முனிவர்களுக்கு உரிய இடமாகச்செய்யுமதுவே நீ செயற்பாலதென்று மணிமேகலை சொல்ல.

கருகூ. 'அருஞ்சிறை விடுத்த தாயிழை தானென' என்றும் பாடம்.

கசுO. பெரும்பொருள் - அறம்; ஞானமுமாம்.

கசுக. கறையோர் - கடமைகொடுப்போர். இல்லாக்கோட்டமென்க; என்றதனால், அரசன் கறைவீடுசெய்த செங்கோன்முறையையுடையனென்றவாறாயிற்று; இதனை, "சிறைப்படு கோட்டஞ் சீமின் யாவதுங், கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மி, னிடுபொரு ளாயினும் படுபொரு ளாயினு, முற்றவர்க் குறுதி பெற்றவர்க் காமென, யானையெருத்தத் தணிமுரசிரீஇக், கோன்முறையறைந்த கொற்ற வேந்தன்" (கட்டுரை காதை, கஉசு - கஙக.) எனவும், "சிறையோர் கோட்டஞ் சீமின் யாங்கணுங், கறைகெழு நல்லூர்க் கறைவீடு செய்ம்மென" (நடுகற்காதை, உOரு - உOச) எனவும் **சிலப்பதிகாரத்து** வருதல்காண்க.

க - கசுஉ. தாரோன் வணங்கிக் கூற தெய்வங்கூறலும், உள்ளங்கலங்கி வருந்தி அறிவாமெனப் பெயர்வோன்றன்னை நீலயானைதொடர எஃகு உளங்கிழிப்ப அவன் பொத்தி உயிர்த்துப் போயபின், மணிமேகலை துனித்தனரென்று கருதி வாங்கிக் கோட்டம்புகுந்து மாக்களை ஊட்டலும், காவலர் வியந்து கோமகனுக்கு இசைத்துமென்றேகி, திருவன் சென்று எறலும், வாயிலுக்கிசைத்து வணங்கி, 'மன்னவ, வம்பமாதர் ஊண் சுரந்தனள்' என்றலும், 'வருகவருக' என்று அரசன்கூறலின், மடக்கொடி வாயிலாளரிற் சென்று 'நின் அருள்வாழிய' என, 'யாங்காகியது' என்றுஅரசன் கூறலும், ஆயிழையுரைக்கும்; அங்ஙனமுரைப்பவள் 'உயிர்மருந்து இது' என, 'யான்செயற்பாலது என்' என்று வேந்தன்கூற, மெல்லியல் உரைக்கும்; அங்ஙனம் உரைப்பவள் 'நீ செயற்பாலது அறவோர்க்கு ஆக்குமது' என, வேந்து பெரும்பொருளெய்துதற்குக் கோட்டத்தை அறவோர்க்கு ஆக்கினனென வினைமுடிவுசெய்க.

இருபதாவது

# உதயகுமரனைக் காஞ்சனன் வாளாலெறிந்தகாதை.

[இருபதாவது மணிமேகலை காயசண்டிகைவடிவெய்தக் காயசண்டிகை கணவனுகிய காஞ்சனனென்னும் விச்சாதரன்வந்து காயசண்டிகையா மெனக்கருதி அவள் பின்னிலேவிடா உதையகுமரனைப் புதை யிருட்கண் உலகவறவியில் வாளாலெறிந்துபோனபாட்டு.]

அரச னாணையி னாயிழை யருளா
னிரயக் கொடுஞ்சிறை நீக்கிய கோட்டந்
தீப்பிறப் புழந்தோர் செய்வினைப் பயத்தான்
யாப்புடை நற்பிறப் பெய்தினர் போலப்
ரு பொருள்புரி நெஞ்சிற் புலவோன் கோயிலு
மருள்புரி நெஞ்சத் தறவோர் பள்ளியு
மட்டிற் சாலையு மருந்தினர் சாலையுங்
கட்டுடைச் செல்வக் காப்புடைத் தாக
வாயிழை சென்றதூஉ மாங்கவ டனக்கு
க0 வீயா விழுச்சீர் வேந்தன் பணித்ததூஉஞ்

உ. நிரயக் கொடுஞ்சிறை - நரகவேதனையைச்செய்யும் கொடியசிறை. கோட்டம் - அறை.

ந. தீப்பிறப்புழந்தோர் - கொடிய பிறவியிற்பிறந்து வருந்தினேர். 'செய்தவப் பயத்தால்' என்றும் பாடம்.

ச. யாப்பு - பொருத்தம்.

ரு. பொருள்புரிநெஞ்சிற் புலவோன் - சத்தியம் நான்கினையும் விரும்பிய நெஞ்சினையுடைய புத்தன்; பொருள் - சத்தியம்.

சு. அறவோர்-பௌத்தமுனிவர்; "அறவோர் பள்ளியு மறனேம் படையும்" என்று வருதல்காண்க; இது சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்த காதை, கஎசு. "அருணெஞ்சத், தறவோர் பள்ளி" (உ0 - ம் காதை, கக - கஉ) என்பர் பின்னும்.

எ. அட்டிற்சாலை - மடைப்பள்ளி; "அடிசில் வைக லாயிரம்" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், சஎ. அருந்தினர்சாலை - போசனசாலை.

அ. கட்டு - உறுதி. காப்பு உடைத்தாக - காவலையுடையதாக.

உ - அ. கோட்டம் காப்புடைத்தாக வென இயைக்க.

கூ. ஆயிழை - மணிமேகலை.

க0. வீயாவிழுச்சீர் - மாறாத சிறந்த கீர்த்தி. பணித்தது - சொல்லியது; அது, "யான்செயற் பாலதெ னிளங்கொடிக்கு" (கூ - ம் காதை, கஙூ) என்றது.

சிறையோர் கோட்டஞ் சீத்தருணெஞ்சத்
தறவோர் கோட்ட மாக்கிய வண்ணமுங்
கேட்டன னாகியத் தோட்டலர் குழலியை
மதியோ ரெள்ளினு மன்னவன் காயினும்
கரு பொதியி னீங்கிய பொழுதிற் சென்று
பற்றினன் கொண்டென் பொற்றே ரேற்றிக்
கற்றறி விச்சையுங் கேட்டவ ளுரைக்கு
முதுக்குறை முதுமொழி கேட்குவ னென்றே
மதுக்கமழ் தாரோன் மனங்கொண் டெழுந்து
௨0 பலர்பசி களையப் பாவைதா னொதுங்கிய
வுலக வறவியி னூடுசென் றேறலு
மழைசூழ் குடுமிப் பொதியிற்குன் றத்துக்
கழைவளர் கான்யாற்றுப் பழவினை பயத்தான
மாதவன் மாதர்க் கிட்ட சாப
௨௫ மீரா றாண்டு வந்தது வாராள்
காயசண் டிகையெனக் கையற வெய்திக்
காஞ்சன னென்னு மவடன் கணவ
னைய மூதா ருள்வந் திழிந்து

கக-க௨. அருணெஞ்சத் தறவோர்:— ௨0 - ம் காதை, சு.

க௩. கேட்டனனாகி - (உதயகுமரன்) கேட்டு.

க௪. மதியோர் எள்ளினும் - அறிவுடையோர் இகழ்வாராயினும். காயினும் - கோபித்தாலும்.

க௫. பொதியில்=பொது இல் - அம்பலம்.

கசு. பற்றினன்கொண்டு - பிடித்துக் கொண்டு.

க௩ - கசு. குழலியைப் பற்றினன் கொண்டென்க.

கஎ. விச்சை - வித்தை; உம்மை - இறந்தது தழீஇயது. 'விஞ்சையும்' என்றும் பாடம்.

கஅ. முதுக்குறை முதுமொழி:— கஅ - ம் காதை, கசுஎ; ௨0 - ம் காதை, எ௪. 'முதுக்குறை மொழியுங் கேட்குவன்' என்றும் பாடம்.

கக. தாரோன் - உதயகுமரன்.

௨0. 'பாவைதா னொடுங்கிய' என்றும் பாடம்.

௨க. ஊடு - உள்ளே.

க - ௨க. சென்றதூஉம் பணித்ததூஉம் சென்று குழலியைப்பற்றிக்கொண்டு ஏற்றிக் கேட்டுக் கேட்குவனென்று மனங்கொண்டு தாரோன் எழுந்து சென்று ஏறலு மென்க.

மேலே, காஞ்சனன் காயசண்டிகையைத் தேடிப்போந்ததும், உதயகுமரனைக் கொன்றதும் கூறப்படும்.

௨௨. பொதியிற்குன்றம் - பொதியின் மலை.

௨௩. கழை - மூங்கில். யாறு - ...ல்.

௨௪. மாதவன் - விருச்சிகன். மாதர்க்கு - காயசண்டிகைக்கு.

௨௫. ஈராறாண்டு - பன்னிரண்டுவருடம்.

௨சு. கையறவு - செயலறுதல்.

௨௫-௨சு. காயசண்டிகை வாராள்.

௨அ. மூதூர் - காவிரிப்பூம்பட்டினம். இழிந்து - இறங்கி; என்றதனால், காஞ்சனன் ஆகாயகமனமுடையனென்பது பெறப்பட்டது; "விஞ்சையன் போயினன் விலங்குவிண் படர்ந்தென" என்று

பூத சதுக்கமும் பூமலர்ச் சோலையு
க0 மாதவ ரிடங்களு மன்றமும் பொதியிலுந்
தேர்ந்தனன் றிரிவோ னேந்திள வனமுலை
மாந்தர் பசிநோய் மாற்றக் கண்டாங்
கின்றுநின் கையி னேந்திய பாத்திர
மொன்றே யாயினு முண்போர் பலரா
கரு லானாத் தீநோ யரும்பசி களைய
வான வாழ்க்கைய ரருளினர் கொல்லெனப்
பழமைக் கட்டுரை பலபா ராட்டவும்
விழையா வுள்ளமொ டவன்பா னீங்கி
யுதைய குமரன் றன்பாற் சென்று
ச0 நரைமூ தாட்டி யொருத்தியைக் காட்டித்
தண்ணறல் வண்ணந் திரிந்துவே றாகி
வெண்மண லாகிய கூந்தல் காணாய்
பிறைநுதல் வண்ணங் காணா யோநீ
நரையையிற் றிரைதோற் றகையின் றாயது
சரு விறல்விற் புருவ மிவையுங் காணா
யிறவி னுணங்கல் போன்றுவே றாயின
கழுநீர்க் கண்காண் வழுநீர் சுமந்தன
குமிழ்மூக் கிவைகா ணுமிழ்சீ யொழுக்குவ

இக்காதையிற் பின்வருதல் காண்க; கஉக - ம் அடி. 'உள்வந்து புகுந்து' என்றும் பாடம்.

உக. பூதசதுக்கம் - தவவேடத்தில் மறைந்துநின்று அத்தவத்திற்கு இழுக்கானவற்றின்கணொழுகும் பொய்வேடத்தார்முதலிய அறுவகையோரையும் பாசத்தாற்கட்டி அடித்துண்ணும் பூதம் நிற்றற்கிடமாகிய சதுக்கம்; சதுக்கம் - நாற்சந்தி; "தவமறைந்தொழுகுந்...... .......... பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்" என்று சிலப்பதிகாரத்து வருதல்காண்க; இந்திர விழவூரெடுத்தகாதை, கஉஅ - கஙௗ. பூ - பொலிவு. 'பூமரச் சோலையும்' என்றும் பாடம்.

க0. மன்றம் - ஊருக்குநடுவாய் எல்லாருமிருக்கு மரத்தடி. பொதியில் - அம்பலம்; "மன்றமும் பொதியிலும்" (திருமுருகாற்றுப்படை, உஉரு.) என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் இங்ஙனம் எழுதியிருத்தல்காண்க.

கங. தேர்ந்து திரிவோன் - காஞ்சனன்.

கஉ. கண்டு - (காஞ்சனன்) கண்டு. மேல்வருவன காஞ்சனன் கூற்று.

கரு. நோய் - பஸ்மகவியாதி.

கசு. வானவாழ்க்கையர் - தேவர்.

கரு - கசு. களைய அருளினர்கொல்?

கஎ. பலபாராட்ட - பலவற்றைக்கூறிப் பாராட்ட.

கக. அவன் - காஞ்சனன்.

ச0. நரைமூதாட்டி - நரையையும் முதுமையையுமுடையவள்.

சக. 'தண்ணறல் வண்ணம்' என்பதுமுதலியன மணிமேகலை கூற்று. அறல் - கருமணல்.

சஉ. 'கூந்தலுங் காணாய்' என்றும் பாடம்.

சங. நரைமை - வெண்மை.

சசு. இறவின் உணங்கல் - இறாமீனின்வற்றல்.

சஅ. 'ஒழுகுவ' என்றும் பாடம்.

நிரைமுத் தனைய நகையுங் காணாய்
௫0 சுரைவித் தேய்ப்பப் பிறழ்ந்துவே றாயின
இலவிதழ்ச் செவ்வாய் காணா யோநீ
புலவுப் புண்போற் புலால்புறத் திடுவது
வள்ளைத் தாள்போல் வடிகா திவைகா
ணுள்ளூன் வாடிய வுணங்கல் போன்றன
௫௫ இறும்பூது சான்ற முலையுங் காணாய்
வெறும்பை போல வீழ்ந்துவே றாயின
தாழ்ந்தொசி தெங்கின் மடல்போற் றிரங்கி
வீழ்ந்தன இளவேய்த் தோளுங் காணாய்
நரம்பொடு விடுதோ லுகிர்த்தொடர் கழன்று
௬0 திரங்கிய விரல்க ளிவையுங் காணாய்
வாழைத் தண்டே போன்ற குறங்கிணை
தாழைத் தண்டி னுணங்கல் காணா
யாவக் கணைக்கால் காணா யோநீ
மேவிய நரம்போ டென்புபுறங் காட்டுவ
௬௫ தளிரடி வண்ணங் காணா யோநீ
முளிமுதிர் தெங்கி னுதிர்கா யுணங்கல்
பூவினுஞ் சாந்தினும் புலான்மறைத் தியாத்துத்
தூசினு மணியினுந் தொல்லோர் வகுத்த
வஞ்சந் தெரியாய் மன்னவன் மகனென
எ0 விஞ்சை மகளாய் மெல்லிய லுரைத்தலுந்
தற்பா ராட்டுமென் சொற்பயன் கொள்ளாள்

௪௯. நகை - பல். 'பல்லுங்காணாய்' என்றும் பாடம்.

௫0. சுரைப்பழத்தின்விதை பல்லுக்கு உவமையாதலை, "சுரைவித்துப் போலுந் தம் பல்." என்பதனாலு முணர்க; இது நாலடியார், அவையறிதல், ௫.

௫௨. புலவு - புலால்நாற்றம்.

௫௩. வள்ளைத்தாள் - வள்ளைத்தண்டு. வடிகாது - வடிந்தகாது. 'வடிந்தகாது' என்றும் பாடம்.

௫௪. உணங்கல் - வற்றல்.

௫௫. இறும்பூது - அதிசயம்; "இறும்பூது போலுமஃ தறிந்தரு ளீயென" என்பது சிலப்பதிகாரம், பதிகம், க.
'முலையிணைகாணாய்' என்றும் பாடம்.

௫எ. திரங்கி - திரைந்து.

௫அ. 'தோளிவைகாணாய்' என்றும் பாடம்.

௫௯. உகிர்த்தொடர் - நகத்தின்தொடர்ச்சி. 'உகிரொடுகழன்று' என்றும் பாடம்.

௬௧. குறங்கு - துடை. இணை - இரண்டு.

௬௩. ஆவம் - அம்புக்கூடு.

௬௬. முளிமுதிர்தெங்கு - உலர்ந்த முதிர்ந்த தென்னை.

௬எ. "புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது" என்றார் முன்னும்; ௨௰ம் காதை, ௧௧௪. 'புலான்மறுத்து' என்றும் பாடம்.

௬௯. தெரியாய் - தெரிந்துகொள்வாய்.

எ0. விஞ்சைமகளாய் - காயசண்டிகையாய், மெல்லியல் - மணிமேகலை.

பிறன்பின் செல்லும் பிறன்போ ரோர்க்கு
மதுக்கம ழலங்கன் மன்னவன் மகற்கு
முதுக்குறை முதுமொழி யெடுத்துக் காட்டிப்
எரு பவளக் கடிகையிற் றவளவா ணகையுங்
குவளைச் செங்கணுங் குறிப்பொடு வழாஅ
வீங்கிவன் காதல னாதலி னேந்திழை
யீங்கொழிந் தனனென விகலெரி பொத்தி
மற்றவ ளிருந்த மன்றப் பொதியிலுட்
அ0 புற்றடங் காவிற் புக்கொளித் தடங்கினன்
காஞ்சன னென்னுங் கதிர்வாள் விஞ்சைய
னாங்கவ ளுரைத்த வரசிளங் குமரனுங்
களையா வேட்கை கையுதிர்க் கொள்ளான்
வளைசேர் செங்கை மணிமே கலையே
அரு காயசண் டிகையாய்க் கடிஞை யேந்தி
மாய விஞ்சையின் மனமயக் குறுத்தன

மேல்வருவது காஞ்சனன்செய்தி.

எஉ. பிறனென்றது உதயகுமரனை. இங்கே பிறன்பின் செல்லுமென்றது போல, "எண்ணிப்பத் தங்கையிட்டா லிந்திரன் மகளு மாங்கே, வெண்ணெய்க்குன் றெரியுற் றாற்போன் மெலிந்து பின் னிற்கு மன்றே." (கனகமாலையாரிலம்பகம், சுக) என்று சீவகசிந்தாமணியிலும் வந்திருத்தல்காண்க.

எச. கஅ - ம் காதை, கசுஎ.

எரு. பவளக்கடிகை - பவளத்துண்டம்; என்றது உதட்டினை. 'கடிகையும்' என்றும் பாடம்.

எசு. குறிப்பு - இங்கிதம்.

எரு - எசு. இவ்வடிகளின் பொருளோடு "ஒத்தொளிர் பவளத் துள்ளொளி சிறந்த, முத்துக்கூர்த் தன்ன முள்ளெயிற் றமுத, மருந்தே மாந்த வாருயிர் தளிர்ப்ப, விருந்தின் மூர லரும்பிய தூஉ, மாயிதழ்க் குவளை மலர்புறத் தோட்டிக், காய்வேல் வென்ற கருங்கய னெடுங்க, ணறிவுபிறி தாகிய தாயிழை தனக்கெனச், செவியகம் புகூஉச்சென்ற செவ்வியும், பளிங்கு புறத்தெறிந்த பவளப் பாவையென், னுளங்கொண் டொளித்தா ளுயிர்க்காப் பிட்டு" (கஅ - ம் காதை, எ0 - எக.) என்று உதயகுமரன் கூறியவாக்கியம் ஒப்புநோக்கற்பாலது.

எஎ. இவனென்றது உதயகுமரனை. காதலன் - ஆசாநாயகன்.

எஅ. ஈங்கு ஒழிந்தனன் - இவ்விடத்திலேயே தங்கிவிட்டான்; என்னைத்தவிர்ந்தானென்றபடியாம்; ஈங்கு - தன்மையையுணர்த்துதலை "ஒழிக காம மீங்கென" (சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், சுசு) என்பதிற்காண்க. இகல் - மாறுபாடு.

எகூ. மன்றப்பொதியில் - மன்றமாகியபொதியில்; இருபெயரொட்டு; இப்படியே, "மன்றப் பொதியிற், கந்துடை நெடுநிலைக் கடவுட் பாவை" (உக - ம் காதை, கூ - எ.) என்று பின்னும்வரும்.

அ0. இங்கே காஞ்சனனுக்குப்பாம்பை உவமை கூறியதற்கேற்ப "வேகவெந்தீ நாகங் கிடந்த, போகுயர் புற்றளை புகுவான் போல" (கூஅ - கக.) எனவும், "வெஞ்சின வரவ நஞ்செயி றரும்பத், தன்பெரு வெகுளியி னெழுந்தனை விரித்தென" (க0ச - க0ரு) எனவும் இக்காதையிலேயே பின்புவருதல் காண்க.

அஉ. அவள் - மணிமேகலை.

அங. கையுதிர்க்கொள்ளான் - நீக்கான்

மேல்வருவன உதயகுமரனுட்கோள்.

அசு. மாயவிஞ்சையின் - மாயவித்தையினால்.

ளம்பல மருங்கி லயர்ந்தறி வுரைத்தவிவ்
வம்பலன் றன்னொடிவ் வைகிரு ளொழியா
ளிங்கிவள் செய்தி யிடையிருள் யாமத்து
க௯0 வந்தறி குவனென மனங்கொண் டெழுந்து
வான்றேர்ப் பாகனை மீன்றிகழ் கொடியனைக்
கருப்பு வில்லியை யருப்புக்கணை மைந்தனை
யுயாவுத் துணையாக வயாவொடும் போகி
யூர்துஞ் சியாமத் தொருதனி யெழுந்து
க௯௫ வேழம் வேட்டெழும் வெம்புலி போலக்
கோயில் கழிந்து வாயி னீங்கி
யாயிழை யிருந்த வம்பல மணைந்து
வேக வெந்தீ நாகங் கிடந்த
போகுயர் புற்றளை புகுவான் போல
க00 வாகந் தோய்ந்த சாந்தல ருறுத்த
வூழடி யிட்டத னுள்ளகம் புகுதலு
மாங்குமுன் னிருந்த வலர்தார் விஞ்சைய
னீங்கிவன் வந்தன னிவள்பா லென்றே
வெஞ்சின வரவ நஞ்செயி றரும்பத்
க0௫ தன்பெரு வெகுளியி னெழுந்துபை விரித்தென

அஎ. அயர்ந்து - வருந்தி; றுமாம். அறிவுரைத்த - பழமைக்கட் டொ பலபாராட்டிய.

அஅ. வம்பலன் - அயலான். வைகிருள் - வைகறைப்பொழுது. 'ஒளியான்' என்றும் பாடம்.

௯௧. வான்றேர் - ஆகாயத்திலுலவும் தென்றற்காற்றாகிய தேர். 'மான்றேர்' என்றும் பாடம்.

௯௨. கஅ - ம் காதை, க0௫; உ௫ - ம் காதை, ௯0; "மைதுழா நெடுங்கணார் மனத்துட் காமனு, மைதுலாங் கவர்கணை யரும்பு வைத்தவே" என்பது சூளாமணி, குமாரகாலச்சருக்கம், ௫.

௯௩. உயாவுத்துணையாக - வினவுந்துணையாக; கொண்டென்று ஒருசொல் வருவிக்க; தனியேசென்றானென்றபடி. வயா - வேட்கைநோய்; இதுவயவெனவும் வழங்கும்; "வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது" என்பது புறநானூறு, உ0. 'உயிர்த்துணை யாக வயர்வொடும்' என்றும், 'அயாவொடும்' என்றும் பாடம்.

௯௪. போயவன் நடுஇரவில் மீட்டும் எழுந்து வந்தான்.

௯அ. தீ - விடம்.

௯௯. போகுயர்புற்றளை - மிகவுயர்ந்த புற்றின்துவாரம்.

௯அ - ௯௯. உ0 - ம் காதை, அ0; க0௪ - க0௫.

க00. சாந்து - சந்தனம். அலருறுத்த - பலரறியச்செய்ய.

க0க. ஊழ்அடியிட்டு - முறையே அடி வைத்து; "ஊழடி முட்டம்" என்பது குறிஞ்சிப்பாட்டு, உ௫அ. அதன் உள்ளகம் - அம்பலத்தினுள்ளிடம்.

க0௩. 'ஈங்குவந்தனன்' என்றும் பாடம். என்று - என்றுகருதி.

க0௪. நஞ்சு எயிறு அரும்ப - விடத்தைப் பல் வெளிப்படுத்த; விடத்தையுடைய பல்தோன்றவென்றுமாம்.

க0௫. பை - படம்.

க0௪-க0௫. உ0-ம் காதை, அ0; ௯அ-௯௯.

விருந்தோ னெழுந்து பெரும்பின் சென்றவன்
சுரும்பறை மணித்தோ ணெரிய வீசிக்
காயசண் டிகையைக் கைக்கொண் டந்தரம்
போகுவ லென்றே யவள்பாற் புகுதலு
ககo நெடுநிலைக் கந்தி னிடவயின் விளங்கக்
கடவு ளெழுதிய பாவையாங் குரைக்கு
மணுக லணுகல் விஞ்சைக் காஞ்சன
மணிமே கலையவண் மறைந்துரு வெய்தினள்
காயசண் டிகைதன் கடும்பசி நீங்கி
ககரு வானம் போவழி வந்தது கேளா
யந்தரஞ் செல்வோ ரந்தரி யிருந்த
விந்த மால்வரை மீமிசைப் போகார்
போவா ருளரெனிற் பொங்கிய சினத்தள்
சாயையின் வாங்கித் தன்வயிற் றிடூஉம்
கஉo விந்தங் காக்கும் விந்தா கடிகை
யம்மலை மிசைப்போ யவள்வயிற் றடங்கினள்
கைம்மை கொள்ளேல் காஞ்சன விதுகே

கoசு. இருந்தோன் - காஞ்சனன்.

கoஎ. சுரும்பு அறை மணித்தோள் - மலையையொத்த அழகியதோள்; சுரும்பு - மலை. அறை - உவமவுருபு.

கoஅ. போகுவல் - போவேன்.

கoஉ - கoஅ. விஞ்சையன் இருந்தோன், இவன் இவள்பால் வந்தனனென்று எழுந்து சென்று வீசிப் போகுவலென்று புகுதலுமென்க.

ககo. கந்து - தூண்.

ககக. கடவுள் எழுதிய - மயனாற்பண்ணப்பட்ட; "மயனெனக் கொப்பா வகுத்த பாவையி, னீங்கேன்" என்ற பின் வருதல்காண்க; உக - ம் காதை, கநஉ - கநரு.

மேல்வருவன கந்திற்பாவை காஞ்சனனைநோக்கிக்கூறும் கூற்று.

ககஉ. அணுகல் அணுகல் - அணுகாதே அணுகாதே.

ககச - ககரு. தன்பசிநீங்கிக் காயசண்டிகை வானம்போவழி அவளுக்கு வந்த துன்பத்தைக்கேள்.

ககசு. அந்தரஞ்செல்வோர் - தேவர். அந்தரி - துர்க்கை.

ககஎ. விந்தமால்வரை - விந்தியமலை. 'மீமிசைச் செல்லார்' என்றும் பாடம்.

ககசு - ககஎ. விந்தியமலையிலிருத்தல் பற்றித் துர்க்கைக்கு விந்தியவாஸினி யென்றும் ஒரு பெயருண்டு.

ககஅ - கஉo. விந்தமலையைப் பாதுகாக்கும் விந்தாகடிகை யென்பவள், யாரேனும் மேற்போவாராயின் மிக்ககோபத்தையுடையளாய்ச் சாயையினால் அவர்களை இழுத்துத் தன்வயிற்றிலிடுவள்; பிரஹ்மதேவரிடம் வரம்பெற்ற ஸிம்ஹிகை யென்னுமரக்கி இலங்கைக்குச் சென்ற ஹநுமானை நிழலாலிழுத்துத் தடைப்படுத்தியதாக ஸ்ரீமத் வால்மீக ராமாயணம், சுந்தரகாண்டத்தால் தெரி

கஉக. (காயசண்டிகை) விந்தாகடிகையின் வயிற்றிலடங்கினள்.

கஉஉ. கைம்மை கொள்ளேல்-சிறுமையைக்கொள்ளாதே; கைம்மை - சிறுமை; சிறுமையென்றது ஆராயாது செய்தலை. இனி, உதயகுமரன் மணிமேகலையின் பூர்வஜன்மநாயக னென்பதனைத் தனது ஞானத்தாலறிந்த கந்திற்பாவை அவன்

றூழ்வினை வந்திங் குதைய குமரனை
யாருயி ருண்ட தாயினு மறியாய்
கஉ௫ வெவ்வினை செய்தாய் விஞ்சைக் காஞ்சன
வவ்வினை நின்னையு மகலா தாங்குறு
மென்றிவை தெய்வங் கூறலு மெழுந்து
கன்றிய நெஞ்சிற் கடுவினை யுருத்தெழ
விஞ்சையன் போயினன் விலங்குவிண் படர்ந்தென.

உதையகுமரனைக் காஞ்சனன் வாளாலெறிந்தகாதை முற்றிற்று.

பற்றி, மணிமேகலையை அமங்கலையாக நினைந்து அவளைக் கொள்ளாதே யென்று கூறிற்றென்றலுமாம்; கைம்மை - அமங்கலை.

கஉ௫ - கஉச. மடைத்தொழில் செய்வோனை முற்பிறப்பில் வெட்டிய பாவம் உதையகுமரனை வெட்டுண்ணச் செய்தது; ஆனாலும் ஆராயாது செய்தலின் நீ அறியாய். இவ்வரலாற்றை, உக - ம் காதையாலும் (சஎ - ம் அடிமுதலியவை.) உரு - ம் காதையாலும் (அஉ - ம் அடிமுதலியவை.) அறிந்து கொள்க.

கஉஅ. கடுவினை - உதையகுமரனைக் கொன்ற பாவம்.

கஉகூ. விலங்கு - குறுக்காக.

க-கஉகூ. கோட்டம் காப்புடைத்தாக, தாரோன் கேட்டுமனங்கொண்டு எழுந்து சென்று எறலும், கணவன் கையறவெய்தி வந்து இழிந்து தேர்ந்து திரிவோனைக் கண்டு பலபாராட்டவும், நீங்கிச் சென்று காட்டி மெல்லியல் உரைத்தலும், விஞ்சையன் புக்கு ஒளித்து அடங்கினன்; அரசிளங்குமரனும் கொள்ளான் மனங்கொண்டு எழுந்து போகி எழுந்து கழிந்து நீங்கி அணைந்து புகுதலும், விஞ்சையன், எழுந்து சென்று வீசிப் புகுதலும், பாவை உரைக்கும்; அங்ஙனம் உரைப்பது கூறலும், விஞ்சையன் எழுந்து படர்ந்து போயினனென வினைமுடிவு செய்க.

இருபத்தோன்றாவது

# கந்திற்பாவை வருவதுரைத்தகாதை.

[பத்தோன்றாவது மணிமேகலை உதையகுமரன்மடிந்ததுகண்டு
உறுதுயரெய்த, நெடுநிலைக்கந்தின் நின்றபாவை
வருவதுரைத்து அவள் மயக்கொழித்தபாட்டு.]

கடவு ளெழுதிய நெடுநிலைக் கந்தின்
குடவயி னமைத்த நெடுநிலை வாயின்
முதியாள் கோட்டத் தகவையிற் கிடந்த
மதுமலர்க் குழலி மயங்கின ளெழுந்து
ரு விஞ்சையன் செய்தியும் வென்வேல் வேந்தன்
மைந்தற் குற்றது மன்றப் பொதியிற்
கந்துடை நெடுநிலைக் கடவுட் பாவை
யங்கவற் குரைத்த வற்புதக் கிளவியுங்
கேட்டன ளெழுந்து கெடுகவிவ் வுருவெனத்
க0 தோட்டலர்க் குழலி யுள்வரி நீங்கித்
திட்டி விடமுண நின்னுயிர் போநாட்
கட்டழ லீமத் தென்னுயிர் சுட்டே

க. கடவுள் எழுதிய - தேவதிகளையொத்த பாவையை (மயன்) பண்ணின; "கடவுட் பாவை" என்பர் பின்னும்; எ - ம் அடி.

உ. குடவயின்-மேற்றிசை யிடத்தே.

ந. முதியாள் கோட்டம் - சம்பாபதி கோயில்.

க - ந. இவ்வடிகளால், சம்பாபதிகோயில், கந்திற்பாவைக்கு மேற்றிசையிலுள்ளதென்று தெரிகின்றது.

ச. குழலி - மணிமேகலை.

ரு. விஞ்சையன்-காஞ்சனன். வென் - வெற்றி; "வென்வே லாடவன்" என்பது புறப்பொருள்வெண்பாமாலை, வஞ்சிப் படலம், உச. 'வென்வேல்' என்றும் பாடம்.

சு. மைந்தற்கு-உதயகுமரனுக்கு. மன்றப்பொதியில் :—உ0 - ம் காதை, எக.

எ. கந்திற்பாவை.

அ. அங்கவற்கு - காஞ்சனனுக்கு. அற்புதம் - ஆச்சரியம்.

கூ. இவ்வுருக் கெடுகவென்று.

க0. குழலி-சுட்டு. உள்வரிநீங்கி-மறைந்தவேட மொழிந்து; என்றது காயசண்டிகையின் வடிவமொழிந்தென்றபடி.

இனி, உதயகுமரனைக்குறித்து மணிமேகலை புலம்புதல் கூறப்படும்.

கக. திட்டிவிடம் - கண்ணில் விடமுடையதோர் பாம்பு; இதனியல்பை, இந்நூல் கூ - ம் காதை, சக - ம் அடிக்குறிப் பிற்பார்க்க. இதனைப் பாம்புகளுக்கு அரசென்றுங் கூறுவர்.

கஉ. கட்டழல் - மிக்கநெருப்பு, ஈமம் - மயானம்.

கக - கஉ. இவ்வடிகளாற் போனபிறப்பின்செய்தி கூறினள்.

னுவவன மருங்கி னின்பா லுள்ளந்
தவிர்விலே னாதலிற் றலைமக டோன்றி
கரு மணிபல் லவத்திடை யென்னையாங் குய்த்துப்
பிணிப்பறு மாதவன் பீடிகை காட்டி
யென்பிறப் புணர்ந்த வென்முற் றோன்றி
யுன்பிறப் பெல்லா மொழிவின் றுரைத்தலிற்
பிறந்தோ ரிறத்தலு மிறந்தோர் பிறத்தலு
உ0 மறந்தரு சால்பு மறந்தரு துன்பமும்
யானினக் குரைத்துநின் னிடர்வினை யொழிக்கக்
காயசண் டிகைவடி வானேன் காதல
வைவாள் விஞ்சையன் மயக்குறு வெகுளியின்
வெவ்வினை யுருப்ப விளிந்தனை யோவென
உரு விழுமக் கிளவியின் வெய்துயிர்த்துப் புலம்பி
யழுதன ளேங்கி யயாவுயிர்த் தெழுதலுஞ்
செல்லல் செல்லல் சேயரி நெடுங்க
ணல்லியந் தாரோன் றன்பாற் செல்ல
னினக்கிவன் மகனுத் தோன்றிய தூஉ
ங0 மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம்
பண்டும் பண்டும் பல்பிறப் புளவாற்

---

கச. தலைமகள் - மணிமேகலாதெய்வம்.

கஙு - கச. உவவனத்திற் கண்டபொழுது உதயகுமரன்பால் மணிமேகலைக்குக் காதலிருந்ததென்பதை, "புதுவோன் பின்றைப் போனதென் னெஞ்சம், மிதுவோ வன்னாய் காமத் தியற்கை" (ரு - ம் காதை, அகூ - கூ0) என்றும், "அவன்பா லுள்ள, நீங்காத் தன்மை நினக்குமுண் டாதலின்" (க0 - ம் காதை; சச - சரு) என்றும் முன்வந்திருத்தலாலுணர்க.

ககூ. பிணிப்பறு மாதவன் - புத்தன்; பிணிப்பு - பற்று; "பிணிப்பறுத்தோர் தம் பெற்றி யெய்தவும்" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, க00.

கச - கஅ. தலைமகள் தோன்றி உய்த்துக் காட்டித் தோன்றி உரைத்தலினென்க.

உ0. சால்பு - அமைதி; இன்பமுமாம். மறம் - பாவம்.

கக - உ0. உக - ம் காதை, கககூ.

உச. உருப்ப - கோபிக்க. விளிந்தனையோ - இறந்தாயோ.

உங - உச. உருப்ப வெகுளியின் விளிந்தனையோ.

உரு. விழுமக்கிளவி - துன்பத்தைப் புலப்படுத்தும் சொற்கள். வெய்துயிர்த்து - வெம்மையைப்போக்கி.

உசு. அயாவுயிர்த்து - நெட்டுயிர்ப்புக் கொண்டு. எழுதலும் - மணிமேகலை எழுதலும்.

மேல், மணிமேகலையைநோக்கிக் கந்திற்பாவை கூறுதலைச் சொல்லுவார்.

உஎ. செல்லல் செல்லல் - போகாதே போகாதே. சேயரிநெடுங்கண் - விளி.

உஅ. அல்லி - அகவிதழ். தாரோன் - உதையகுமரன்.

உகூ. மகனு - கணவனாக.

ங0. மனக்கினியாற்கு - உதயகுமரனுக்கு. மகளாயதூஉம் - மனைவியானதும்.

உக - ங0. "நோதக வுண்டோ நும் மக ளார்க்கு" எனக் கணவனை மகனென்று சிலப்பதிகாரம், கொலைக்களக்

கண்ட பிறவியே யல்ல காரிகை
தடுமாறு பிறவித் தாழ்தரு தோற்றம்
விடுமாறு முயல்வோய் விழுமங் கொள்ளே
௩௫ லென்றிவை சொல்லி யிருந்தெய்வ முரைத்தலும்
பொன்றிகழ் மேனிப் பூங்கொடி பொருந்திப்
பொய்யா நாவொடிப் பொதியிலிற் பொருந்திய
தெய்வ நீயோ திருவடி தொழுதேன்
விட்ட பிறப்பின் வெய்துயிர்த் தீங்கிவன்
௪0 றிட்டி விடமுணச் செல்லுயிர் போயது
நெஞ்சு நடுங்கி நெடுந்துயர் கூரயான்
விஞ்சையன் வாளி னிவன்விளிந் ததூஉ
மறிதலு மறிதியோ வறிந்தனை யாயிற்
பெறுவே னல்லநின் பேரரு ளீங்கெனக்
௪௫ வையரி நெடுங்க ணாயிழை கேளெனத்
தெய்வக் கிளவியிற் றெய்வங் கூறுங்
காயங் கரையெனும் பேரியாற் றடைகரை
மாயமின் மாதவன் வருபொரு ளுரைத்து

காதையில் [அடி - கஎ] கூறியிருத்தல்

௩௨. நீ அறிந்துகொண்ட முற்பிறப்பில் மட்டுமல்ல ; காணுதல் - அறிதல்.

உக-௩௨. தோன்றியதூஉம் ஆயதூஉம் கண்டபிறவியேயல்ல ; பண்டும் பண்டும் பல்பிறப்புளவாமெனை வியைக்க.

௩௩. தாழ்தரு - தங்குகின்ற ; அழுந்துகின்றவென்றுமாம்.

௩௪ விழுமம் - துன்பம்.

௩௫. சொல்லியுரைத்தல் - கூறிவிளக்குதல் ; " அறைந்தனர் சாற்றும்" (சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, கக) என்புழிப்போல.

௩௬. பூங்கொடி - மணிமேகலை.

மேல், மணிமேகலையின் வினவும், கந்திற்பாவைகூறும் விடையும் கூறப்படும்.

௩௯. விட்டபிறப்பு - போனபிறப்பு. இவன் - உதயகுமரன்.

௩௯ - ௪0. இவன் உயிர்போதற்குக் காரணமாகிய தீவினையையும்.

௪க. யான் நெடுந்துயர் கூர; கூர-மிக.

௪உ. விளிந்ததூஉம் - இறந்ததற்குக் காரணமாகிய தீவினையையும்.

௪௩. அறிதலுமறிதியோ - அறிதலும் செய்தியோ; இஃது, "உண்ணலு முண்ணேன் வாழலும் வாழேன்" (கலித்தொகை, பாலைக்கலி, உஉ) என்பதுபோல் நின்றது.

௪௪. நல்ல நினது பெருங்கருணையை இவ்விடத்துப் பெறுவேன் ; என்றது - நீகூறும் விடையைக்கேட்கும் விருப்பமுடையேனென்றவாறு என - என்று மணிமேகலை சொல்ல. 'பேறுவே றில்லேன்' என்றும் பாடம்.

௪௫. ஆயிழை - விளி.

௪௬. தெய்வம் - கந்திற்பாவை.

௪எ. கரை - கரையில்.

௪அ. மாதவன் வருபொருள் - புத்தன் அவதரித்தலை. உலகத்திற் பாவங்கள் அதிகரித்தகாலந்தோறும அப்பாவங்களைப்போக்கி அருளறத்தை நிலைநிறுத்தி உயிர்களை நிருவாணமடைவித்தற்பொருட்டுப் புத்தாவதாரமுண்டென்பது பௌத்தநூற்றுணிபு; "ஈரெண் ணூற்றோ டீரெட் டாண்டிற், பேரறி வாளன் றோன்றும்" (கஉ - ம் காதை, எஎ - எஅ) எனவும், "மறவிரு ளிரிய மன்னுயி ரே

மருளுடை மாக்கண் மனமாசு கழூஉம்
௫௦ பிரம தருமனைப் பேணினி ராகி
யடிசிற் சிறப்பியா மடிகளுக் காக்குதல்
விடியல் வேலை வேண்டின மென்றனு
மாலைநீங்க மனமகிழ் வெய்திக்
காலை தோன்ற வேலையின் வரூஉ
௫௫ நடைத்திறத் திழுக்கி நல்லடி தளர்ந்து
மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனைச்
சீல நீங்காச் செய்தவத் தோர்க்கு

முற, வறவெயில் விரித்தாங் களப்பி லிருத்தியொடு, புத்த ஞாயிறு தோன்றுங் காறும்" (உக - ம் காதை, கசுடு - கசு௭) எனவும், "புலவன் முழுதும் பொய்யின் றுணர்ந்தோ, னுலகுயக் கோடற் கொருவன் றோன்று, மந்நா ளவனறங் கேட்டோ ரல்ல, தின்னாப் பிறவி யிழுக்குந ரில்லை" (உடு - ம் காதை, சுடு-சுஅ) எனவும், "கரவரும் பெருமைக் கபிலையம் பதியி, னளப்பரும் பாரமிதை யளவின் று நிறைந்து, துளக்கமில் புத்த ஞாயிறு தோன்றி" (உசு - ம் காதை, சுச சுசு) எனவும் ,இந்நூலுள்ளே பலவிடத்தும் வருதல் காண்க.

சுக. மருள் உடை மாக்கள் - மயக்கத்தையுடைய மனிதர். மனமாசு - காமவெகுளி மயக்கங்கள்; "வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென், றுள்ளந் தன்னி லுருப்பன மூன்றும்" (௩௦ - ம் காதை, ௭௦ - ௭க) என்பதனுலுணர்க. கழூஉம் - கழுவும்.

௫க. அடிகளுக்கு அடிசிற்சிறப்பு ஆக்குதலென்க.

௫உ. விடியல் வேலை-நாள்வெயிற்காலம்; வைகறைப்பொழுதெனினும்பொருந்தும்.

௫க - ௫உ. அடிகளுக்கு அடிசிற்சிறப்பு விடியல்வேலையாக்குதல் வேண்டினமென்று மடையனை நோக்கிக் கூறுதலும்.

௫௩. 'மாலைநீங்கி' என்றும் பாடம்.

சுஎ - ௫உ. அடைகனாயில் உனாத்துக் கழூஉம் பிரமதருமனைப்பேணி விடியல்வேலையில் ஆக்குதலை வேண்டினமென்றனுமென்க,

௫௩. மாலை - |

௫௪. காலை-நாள்வெயிற்காலை. வரூஉ - வந்து.

௫௫. நடைத்திறத்து இழுக்கி - நடைவகையால் வழுக்கி.

௫௬. மடைக் கலம் - சோற்றுப்பாத்திரம். மடையன் - சமையற்காரன்.

௫௭. சீலம் - பஞ்சசீலம்; தசசீலமுமாம்; கொல்லாமை = அஹிம்ஸை, பொய்சொல்லாமை = ஸத்தியம், களவின்மை = அஸ்தேயம், காமமின்மை = பிரமசரியம், இரவாமை = அஸங்கிரகம் என்னும் இவை பஞ்சசீலம்; இவ்வைந்தனோடு உயர்ந்த ஆசனத்து இருத்தல் கிடத்தலின்மை, சந்தனம் மாலை முதலியன தரியாமை, பொன்வெள்ளிகளைத் தீண்டாமை, பாடலாடல் விரும்பாமை, உதயத்திற்கு முன்பு புசித்தல் என்னும் ஐந்தும்சேரத் தசசீலமாம். பஞ்சசீலத்துள், இரவாமை நின்ற நிலைக்களத்தின்கண் கள்ளுண்ணாமையைச்சேர்த்துக்கூறுவாருமுளர். இது, நீலகேசி விருத்திஸமயதிவாகரத்திற் கண்டது. கொல்லாமை, திருடாமை, வியபிசரியாமை பொய்கூறாமை, கள்ளுண்ணாமை யென்னுமிவை பஞ்சசீலமென்றும், இவை இல்லறத்தார் எல்லோர்க்கும் உரியனவென்றும், இவ்வைந்தனோடு இரவில் தூய்மையில்லாத உணவைப்புசியாமை, சந்தனமுதலிய மணமுள்ள பொருள்களை உபயோகியாமை, தரையிற் பாய்மேலே படுத்தல் என்னும் மூன்றுஞ்சேர அஷ்ட சீலமென்றும், இவை இல்லறத்தாரில் நிஷ்டாபரர்களுக்கே யுரியனவென்றும், இவ்வெட்டனோடு நாட்டியம் கானமுத

வேலை பிழைத்த வெகுளி தோன்றத்
தோளுந் தலையுந் துணிந்துவே றாக
கூ0 வாளிற் றப்பிய வல்வினை யன்றே
விராமலர்க் கூந்தன் மெல்லிய லின்றே
டிராகுலன் றன்னை யிட்டக லாதது
தலைவன் காக்குந் தன்பொருட் டாகிய
அவல வெவ்வினை யென்போ ரறியா
கூரு ரறஞ்செய் காத லன்பின ராயினு
மறஞ்செய் துளதெனின் வல்வினை யொழியா
தாங்கல் வினைவந் தணுகுங் காலைத்
தீங்குறு முயிரே செய்வினை மருங்கின்
மீண்டுவரு பிறப்பின் மீளினு மீளா
எ0 மாங்கவ் வினைகா ணாயிழை கணவனை
யீங்கு வந்திவ் விடர்செய் தொழிந்த
தின்னுங் கேளா யிளங்கொடி நல்லாய்
மன்னவன் மகற்கு வருந்துதுய ரெய்தி
மாதவ ருணர்த்திய வாய்மொழி கேட்டுக்
எரு காவல னின்னையுங் காவல்செய் தாங்கிடு

வியவற்றை விரும்பாமை, பொன் வெள்ளிகளைத் தொடாமையென்னும் இவ்விரண்டும்சேரத் தசசீலமென்றும், இப்பத்தும் துறவிகளுக்கேயுரியனவென்றும், இப்பத்தில் வியபிசரியாமை நின்றவிடத்திற் பிரமசரியம் கூறப்படுமென்றும் தீர்மிகதந்திர மென்னும் பௌத்தநூல் கூறும்.

ருஅ. பிழைத்தவெகுளி - தவறினமையால்வந்த கோபம்.

கூ0. தப்பிய - வெட்டிய.

கூக. மெல்லியல் - விளி.

ருக - கூஉ. இவ்வடிகளிற்போலவே, "மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனை, யுடற்றுணி செய்தாங் குருத்தெழும் வல்வினை, நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி, விஞ்சையன் வாளால் வீட்டிய தன்றே" என்று இராசமாதேவியை நோக்கி மணிமேகலை கூறியதாகப் பின்புவருதல் காண்க; உ௩-ம் காதை, அஉ-அரு.

கூ௩. தலைவன் - கடவுள். காக்கும் - காப்பான்; தடுப்பானென்றபடி.

கூ௩ - கூச. வினையைத் தலைவன் காக்குமென்போர் அறியாரென இயைக்க; செய்தவன் நுகர்ந்தாலன்றி வினை தொலையாதென்றவாறு.

கூரு. 'அறஞ்செய் காதல னன்பினனாயினும்' என்றும் பாடம்.

கூகூ. மறம் செய்துளதெனின் - பாவம் செய்யப்பட்டிருப்பின். வல்வினை - சுட்டு.

கூஅ. தீங்கு - துன்பம்.

எ0. அவ்வினை - மடையனை வெட்டியபாவம். கணவனை - உதயகுமரனை.

எ0 - எக. அவ்வினை ஈங்குவந்து உன் கணவனை இவ்விடர் செய்தொழிந்ததென்க.

இனி, மணிமேகலைக்குப்பின் வருவனவற்றைக் கந்திற்பாவைத்தெய்வம் கூறுதல் கூறப்படும்.

எ௩. மகற்கு - உதயகுமரன் இறந்ததற்காக.

எச. உணர்த்தியவன் ஒருவனாயினும் உரைக்கவந்தோர் பலராதலின் 'மாதவருணர்த்திய' என்றார். 'மாதவருரைத்த' என்றும் பாடம். வாய் - உண்மை.

எரு. காவல செய்தாங்கிடும் - சிறையில் வைப்பான். 'காதலி நின்னையும்' என்றும் பாடம்.

யிடுசிறை நீக்கி யிராசமா தேவி
கூட வைக்குங் கொட்பின ளாகி
மாதவி மாதவன் மலரடி வணங்கித்
தீது கூறவவ டன்னொடுஞ் சேர்ந்து
அO மாதவ னுரைத்த வாய்மொழி கேட்டுக்
காதலி நின்னையுங் காவ னீக்குவ
ளரசாள் செல்வத் தாபுத் திரன்பாற்
புரையோர்ப் பேணிப் போகலும் போகுவை
போனா லவனொடும் பொருளுரை பொருந்தி
அரு மாநீர் வங்கத் தவனொடு மெழுந்து
மாயமில் செய்தி மணிபல் லவமெனுந்
தீவகத் தின்னுஞ் சேறலு முண்டாற்
றீவ திலகையிற் றன்றிறங் கேட்டுச்
சாவக மன்னன் றன்னா டடைந்தபி
கூO னாங்கத் தீவம்விட் டருந்தவன் வடிவாய்ப்
பூங்கொடி வஞ்சி மாநகர் புகுவை
யாங்கந் நகரத் தறிபொருள் வினவு

எசு. இராசமாதேவி - பட்டமகிஷி.
எஎ கொட்பு - கொள்கை.
எஅ. மாதவன் - அறவணவடிகள்.
எகூ. தீது - மணிமேகலை சிறையில் வைக்கப்பட்டிருத்தல்.
அO. வாய்மொழி-உண்மைமொழி.
எசு-அக. இராசமாதேவி நீக்கிக் கொட்பினளாகிக் கேட்டு நின்னைக் காவல் நீக்குவளென்க.
அஉ. ஆபுத்திரனென்றது புண்ணியராசனை; இது, "நாக புரமிது நன்னகராள்வோன், பூமிசந் திரன்மகன் புண்ணிய ராசன்" (உச - ம் காதை, கஎO - கஎக) என்று தருமசாவகன் மணிமேகலைக்குக் கூறியவாற்றாலுணரப்படும்; புண்ணியராசனை ஆபுத்திரனென்றே இந்நூலிற் பெரும்பாலும் வழங்குவர்.
அகூ. புரையோர் - சங்கத்தார்; புரை-உயர்ச்சி. போகலும் போகுவை - போகுதலுஞ்செய்வை. 'போக்கலும் போக்கும்' என்றும் 'போகினும் போகுவை' என்றும் பாடம்.
அச. பொருளுரை - தருமபதம்; என்றது, நாகபுரத்தின் பக்கத்ததாகிய சோலையிலுள்ள தருமசாவகன் ஆபுத்திரனுக்குக்கூறும் உபதேசமொழிகளைககுறித்துநின்றது. பொருந்தி - கேட்டு. அம்மொழிகளாவன, "அறனு மறனு மநித்தமு நித்தத், திறனுந் துக்கமுஞ் செல்லுயிர்ப் புக்கிலுஞ், சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியு, மாரிய னமைதியும்" (உரு - ம் காதை, ரு - சு) என்பவைகள்.
அரு - அஎ. மணிமேகலை நாகபுரத்திலிருந்து ஆகாயவழியேபோந்து மணிபல்லவத்தையடைந்தாளென்றும், ஆபுத்திரன் கப்பல்வழியேவந்து அத்தீவத்தை அடைந்தானென்றும் உரு-ம் காதையிலுள்ள உகூ-ம் அடிமுதலியவற்றால் விளங்குதலால், 'வங்கத் தவனொடு மெழுந்து' என்பதற்குப் பின்பு கப்பலேறி மணிபல்லவத்தை யடைவோனாகிய ஆபுத்திரனினின்று நீங்கி ஆகாயவழியேயெழுந்தெனப் பொருள்கொண்டு எழுந்து சேறலுமுண்டெனவியைக்க. அவனொடு மென்பது, ஐந்தாவதன்மயக்கம்.
அகூ. சாவகமன்னன் - சாவகநாட்டரசனாகிய ஆபுத்திரன்.
கூO. தீவம் - மணிபல்லவம்.
கூக. வஞ்சிமாநகர் - கருவூர்; இது

மோங்கிய கேள்வி யுயர்ந்தோர் பலரா
லிறைவ னெங்கோ னெவ்வுயி ரனைத்து
கூரு முறைமையிற் படைத்த முதல்வனென் போர்களுந்
தன்னுரு வில்லோன் பிறவுருப் படைப்போ
னன்னே னிறைவ னருமென் போர்களுந்
துன்ப நோன்பித் தொடர்ப்பா டறுத்தாங்
கின்பவுல குசசி யிருத்துமென் போர்களும்
க00 பூத விகாரப் புணர்ப்பென் போர்களும்
பல்வேறு சமையப் படிற்றுரை யெல்லா
மல்லியங் கோதை கேட்குறு மந்நா
ளிறைவனு மில்லை யிறந்தோர் பிறவா
ரறனே டென்னையென் றறைந்தோன் றன்னைப்
க0ரு பிறவியு மறவியும் பெற்றியி னுணர்ந்த
நறுமலர்க் கோதை யெள்ளினை நகுதி
யெள்ளினை போலு மிவ்வுரை கேட்டிங்
கொள்ளிய துரையென வுன்பிறப் புணர்த்துவை
யாங்குநிற் கொணர்ந்த வருந்தெய்வ மயக்கக்
கக0 காம்பன தோளி கனமயக் குற்றனை
யென்றவ னுரைக்கு மிளங்கொடி நல்லா
யன்றென் றவன்முன் னயர்ந்தொழி வாயலை

சேரர்களுடைய இராசதானி; மலைநாட்டிலுள்ளது.

கூச - கூரு. படைத்த முதல்வனே இறைவன் எங்கோன் என்போர்களுமென்க; இவர்கள் பிரஹ்மவாதிகள்; "பேருலகெல்லாம் பிரம வாதியோர், தேவனிட்ட முட்டை யென்றனன்" (உள - ம் காதை, கக-கள) என்றுவருதல் காண்க. இவர்களை இரணிய கருப்பவாதிகளென்றுங்கூறுவர்.

கூசு. 'தானுருவில்லோன்' என்றும் பாடம்.

கூசு - கூஎ. என்போர்கள் அத்துவைத வாதிகள்.

கூஅ. நோன்பு - கன்மங்கள். இத் தொடர்ப்பாடு - இந்தப்பந்தங்கள். 'நோன்பிற் றொடர்ப்பாடு' என்றும் பாடம்.

கூஅ - கூகூ. நோன்பு அறுத்து இருத்துமென்போர்கள் - கர்மப்ரஹ்மவாதிகள்.

க00. புணர்ப்பென்போர்கள் - பூதவாதிகள்.

கூச - க00. இவ்வடிகளிற்கூறிய சமய இலக்கணங்களுட் சிலவும், இன்னும் பலவும் இந்நூல் உஎ - ம் காதையால் [illegible]

க0ச. அறனேடு என்னை - தருமத்தால்வரும் பயன்யாது. அறைந்தோன் - உலோகாயதன்.

க0ரு. அறவி - தருமத்தோடு பொருந்தியவழி.

க0சு. எள்ளினை நகுதி - இகழ்ந்துசிரிப்பாய்.

க0ச - க0சு. அறைந்தோன் றன்னை எள்ளினை நகுதி.

க0எ. இவ்வுரைகேட்டு எள்ளினைபோலும். 'என்னுரை கேட்டீங்கு' என்றும் பாடம்.

கக0. 'காம்பினைத்தோளி' என்றும் பாடம்.

ககஉ. அயர்த்தொழிவாயலை - மறந்தொழியாய்.

தீவினை யுறுதலுஞ் செத்தோர் பிறத்தலும்
வாயே யென்று மயக்கொழி மடவாய்
கக வழுவறு மரனு மண்ணுங் கல்லு
மெழுதிய பாவையும் பேசா வென்ப
தறிதலு மறிதியோ வறியாய் கொல்லோ
வறியா யாயி னுங்கது கேளாய்
முடித்துவரு சிறப்பின் மூதூர் யாங்கணுங்
கஉ0 கொடித்தேர் வீதியுந் தேவர் கோட்டமு
முதுமர விடங்களு முதுநீர்த் துறைகளும்
பொதியிலு மன்றமும் பொருந்துபு நாடிக்
காப்புடை மாநகர்க் காவலுங் கண்ணி
யாப்புடைத் தாக வறிந்தோர் வலித்து
கஉ மண்ணினுங் கல்லினு மரத்தினுஞ் சுவரினுங்
கண்ணிய தெய்வதங் காட்டுநர் வகுக்க
வாங்கத் தெய்வத மவ்விட நீங்கா
வூன்கணி னூர்கட் குற்றதை யுரைக்கு
மென்றிறங் கேட்டியோ விளங்கொடி நல்லாய்
கங0 மன்பெருந் தெய்வ கணங்களி னுள்ளேன்
றுவதிக னென்பேன் றொன்றுமுதிர் கந்தின்
மயனெனக் கொப்பா வகுத்த பாவையி
னீங்கேன் யானென் னிலையது கேளாய்
மாந்த ரறிவது வானவ ரறியா

கககூ. உக - ம் காதை, கக - உ0.
கககச. வாயே - உண்மையே. 'மடக் கொடி மடவாய்' என்றும் பாடம்.
கககூ. உக - ம் காதை, கஉகூ.
ககஎ. அறிதலு மறிதியோ - அறிதலும் செய்தியோ.
கஉ0. தேவர் கோட்டம் - தேவர்கோயில்.
கஉக. முதுமரம் - பழையமரம்.
கஉங. காவலுங்கண்ணி - காவலையுங் கருதி.
கஉச. யாப்புடைத்தாக - உறுதியுடைத்தாக. வலித்து - எண்ணி.
கஉரு. தெய்வதங்காட்டுநர் - தெய்வத்தை நிறுத்துவோர்; உஉ - ம் காதை, கஉக. 'கண்ணிய வுருவங் காட்டுநர் வகுத்த' என்றும் பாடம்.

கஉஅ. ஊன்கணினூர்கட்கு - மானிடர்களுக்கு.
மேல்வருவன, மணிமேகலைக்குத் தன துவரலாற்றைக் கந்திற்பாவை கூறுங் கூற்று.
கஉக. கேட்டி - கேட்பாய்.
கஙக. துவதிகனென்பேன் - துவதிகனென்று பெயர் கூறப்படுவேன். தொன்று முதிர் - கந்து - பழைமை முதிர்ந்த தூண்.
கஙஉ. மயன் - தெய்வத்தச்சன்; அசுரத்தச்சனென்றுங்கூறுவர்; கந்திற்பாவை இருத்தற் கிடமாகிய சக்கரவாளக் கோட்டமும் மயனாற்செய்யப்பட்டதென்ற இந்நூல் சு - ம் காதை, கஉஉ ம் அடிமுதலியவற்றால் தெரிகின்றது. 'பாவையை' என்றும் பாடம்.

கஙரு ரோவியச் சேனனென் னுறுதுணைத் தோழ
னாவதை யிக்நகர்க் காருமுரைத் தனரோ
வவனுடன் யான்சென் றாடிட மெல்லா
முடனுறைக் தார்போ லொழியா தெழுதிப்
பூவும் புகையும் பொருந்துப் புணர்த்து
கசo நாநனி வருந்தவென் னலம்பா ராட்டலின்
மணிமே கலையான் வருபொரு ளெல்லாந்
துணிவுட னுரைத்தே னென்சொற் றேறெனத்
தேறே னல்லேன் றெய்வக் கிளவிக
ளீறு கடைபோக வெனக்கரு ளென்றலுந்
கசரு துவதிக னுரைக்குஞ் சொல்லலுஞ் சொல்லுவேன்
வருவது கேளாய் மடக்கொடி நல்லாய்
மன்னுயிர் நீங்க மழைவளங் காந்து
பொன்னெயிற் காஞ்சி நகர்கவி னழிய
வாங்கது கேட்டே யாருயிர் மருந்தா
கருo யீங்கிம் முதியா ளிடவயின் வைத்த
தெய்வப் பாத்திரஞ் செவ்விதின் வாங்கித்
தையலிற் பயந்தோர் தம்மொடு போகி
யறவணன் றானு மாங்குள னாதலிற்
செறிதொடி காஞ்சி மாநகர் சேர்குவை
கருரு யறவண னருளா லாய்தொடி யவ்வூர்ப்
பிறவண மொழிந்துநின் பெற்றியை யாகி
வறனோ டுலகின் மழைவளந் தரூஉ

---

கஙரு. ஓவியச்சேனன்-சித்திரசே.
கஙஎ. அவனுடன் - சித்திரசேனனுடன். ஆடிடம் - விளையாடுமிடம்.
கஙகூ. 'தொணர்ந்து' என்றும் பாடம்.
கசஉ. தேறென - தெளிவாயென்று கந்திற்பாவைசொல்ல.
மேல்வருவன மணிமேகலைகூற்று.
கசங. தெய்வக்கிளவிகளைத் தேறேனல்லேன்; தெளிவேனென்றபடி.
கசச. ஈறு கடைபோக-மரணம் இறுதியாக; "கடைபோகச் செல்வமுய்த் தார்" என்பது நாலடியார், மெய்ம்மை, க. என்றும்-என்று மணிமேகலை சொல்லலும்.
மேல்வருவன கந்திற்பாவைகூற்று.
கசரு. உரைக்கும் - முற்று. சொல்லலுஞ் சொல்லுவேன் - யான் சொல்லுதலையுஞ் செய்வேன்.
கசஎ. நீங்கக் கரந்து - நீங்கும்படி மறைந்து.
கருo. முதியாள் - சம்பாபதி.
கருஉ. பயந்தோர் - மாதவியும் சுதமதியும்.
கருங. ஆங்கு - காஞ்சிநகரில்.
கருச. செறிதொடி - விளி.
கருங - கருச. ஆங்குளனாதலிற் சேர்குவை.
கசகூ - கருச. அதுகேட்டு வாங்கிக் காஞ்சிமாநகர் சேர்குவையென்க.
கருசு. பிறவணமொழிந்து - ஆணுருவொழிந்து; வேற்றுமதப் பற்றொழிந்தென்றுமாம்.
கருஎ. வறன் ஓடு உலகில் - வறட்காலம் பரந்த உலகத்தில்.

மறனோ டேந்தி யாருயி ரோம்புவை
யாய்தொடிக் கவ்வூ ரறனொடு தோன்று
கசுo மேது நிகழ்ச்சி யாவும் பலவுள
பிறவற முரைத்தோர் பெற்றிமை யெல்லா
மறவணன் றனக்குநீ யுரைத்த வந்நாட்
டவமுந் தருமமுஞ் சார்பிற் றோற்றமும்
பவமறு மார்க்கமும் பான்மையி னுரைத்து
கசுரு மறவிரு ளிரிய மன்னுயி ரேமுற
வறவெயில் விரித்தாங் களப்பி லிருத்தியொடு
புத்த ஞாயிறு தோன்றுங் காறுஞ்
செத்தும் பிறந்துஞ் செம்பொருள் காவா
வித்தல நீங்கே னிளங்கொடி யானுந்
களo தாயரு நீயுந் தவறின் றாக
வாய்வ தாகநின் மனப்பாட் டறமென
வாங்கவ னுரைத்தலு மவன்மொழி பிழையாய்
பாங்கிய னல்லறம் பலவுஞ் செய்தபின்
கச்சிமுற் றத்து நின்னுயிர் கடைகொள

கருஅ. அறனோடு - அமுதசுரபி.

கருஎ-கருஅ. கரு-ம் காதை, ருரு-ருச.

கசுக. பிறவறமுரைத்தோர் - வஞ்சி நகரத்தில் மற்றைச் சமயதருமங்களைச் சொன்னோருடைய.

கசுரு. சார்பு - துவாதசநிதானம்; அவை, "பேதைமை செய்கை யுணர்வே யருவுரு, வாயி லூறே நுகர்வே வேட் கை, பற்றே பவமே தோற்றம் வினைப் பய, னிற்றென வகுத்த வியல்பீ ராறும்" என்பன; உச - ம் காதை, கoரு - கoஅ; ருo - ம் காதை, சரு - சஅ. இவற்றின் இயல்பு, ருo - ம் காதையில் விளங்கக் கூறப்படும்.

கசுச. பவம் - கருமங்களின்கூட்டம்; "பவமெனப் படுவது கரும வீட்டம்" (ருo - ம் காதை, கக.) என வருதல் காண்க. 'உரைத்தவன்' என்றும் பாடம்.

கசுரு. மறவிருள் - பாவமாகிய இருட்டு. ஏம் உற - நிருவாணமாகிய இன்பத்தை அடையும்படி; ஏம் - இன்பம்.

கசுசு. இருத்தி-அணிமாதியோக சித்திகளெட்டும்; "எத்திறத் தார்க்கு மிருத்தியுஞ் செய்குவம்" என்று பின்னும் தல்காண்க; உசு - ம் காதை, சுக. சி எண்பத்தொன்பதென்று கூறுதலுமுண்டு; "எண்பத்தொன் பதுசித்தியியல் பினு ளவென்று, பண்பொத்த நுண் பொருளைப் பாரறியப் பகர்ந்தனையே" என்று வருதல்காண்க; இது,, வீரசோழியம், யாப்புப்படலம், கக - ம் கலித் !தாரணத்திற் கண்டது.

கசுஎ. தோன்றுங்காறும் - தோன்றுமளவும்.

கசுஅ. செம்பொருள் - தருமம்; மெய் யுணர்ந்தார் நெஞ்சிற்கெல்லாஞ் செம்மையுடைத்தாய்த் தோன்றலின், இப்பெயர் பெற்றது; "செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்" என்பது திருக்குறள், கக. காவா - காத்து.

கசுகூ. இத்தலம்-இக்காஞ்சிநகரத்தை. 'இத்திற நீங்கேன்' என்றும் பாடம்.

களக. அறம் வாய்வதாக.

களஉ. அவன் - அறவணன். பிழையாய் - தப்பாயாய்.

கசுச - களஉ. அவன் உரைத்து நின் மனப்பாட்டறம் வாய்வதாகவென வுரைத்தலும்.

களரு. நல்லறம் - காருண்யம்.

களச. கச்சிமுற்றம் - காஞ்சிநகரிடம். கடை - முடிவு.

கஎ௫ வுத்தர மகதத் துறுபிறப் பெல்லா
மாண்பிறப் பாகி யருளற மொழியாய்
மாண்பொடு தோன்றி மயக்கங் களைந்து
பிறர்க்கற மருளும் பெரியோன் றனக்குத்
தலைச்சா வகனுய்ச் சார்பறுத் துய்தி
கஅ௦ யின்னுங் கேட்டியோ வன்னுதன் மடந்தை
யூங்க ணோங்கிய வுரவோன் றன்னை
வாங்குதிரை யெடுத்த மணிமே கலாதெய்வஞ்
சாது சக்கரற் காரமு தீத்தோ
யீது நின்பிறப் பென்பது தெளிந்தே
கஅ௫ யுவவன மருங்கி னின்பாற் றோன்றி
மணிபல் லவத்திடைக் கொணர்ந்தது கேளெனத்
துவதிக னுரைத்தலுந் துயர்க்கட னீங்கி
யவதி யறிந்த வணியிழை நல்லாள்
வலையொழி மஞ்ஞையின் மனமயக் கொழிதலு
கசு௦ முலகுதுயி லெழுப்பினன் மலர்கதி ரோனென.

கந்திற்பாவை வருவதுரைத்தகாதை முற்றிற்று.

கஎ௫. உத்தரமகதம் - வடமகதநாடு.
கஎசு. ஒழியாய் - நீங்காயாய்.
கஎஅ. பெரியோன் - புத்தன்.
கஎகூ. தலைச்சாவகனுய் - முதன்மாணுக்கனுய். சாவகன்—ச்ராவகன் - கேட்பவன்; "தரும சாவகன் றன்னடி வணங்கி" என்பர் பின்னும்; உ௫-ம் காதை, உ. சார்பு - பன்னிருநிதானம். உய்தி - பிழைப்பாய்.
கஅக. உன்குலத்தில் முன்பு அறத்தால் உயர்ச்சியுற்றிருந்த அறிவுடையோனுகிய ஒருவனை; ஊங்கண் - முன்பு; "தூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர் நினைப்பின்" என்பது புறநானூறு, கூகூ. "போந்தைக் கண்ணிநின் னூங்கணோர் மருங்கிற், கடற்கடம் பெறிந்த காவலன்" என்பது சிலப்பதிகாரம், நடுகற் காதை, கசுச - கசு௬.
கஅஉ. திரை எடுத்த - அழுந்தி இறவாவண்ணம் கடலினின்றும் எடுத்த. எடுத்தகதையை, சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, உஅ - ம் அடி முதலியவற்றிற் காண்க.
கஅகூ. சாதுசக்கரற்கு - சாது சக்கரனென்னு முனிவனுக்கு.
கஅச. ஈது - இத்தன்மையையுடையது.
கஅஅ. அவதி - எல்லை.
கசு௦. மலர்கதிரோன் - விளைத்தொகை.
க - கசு௦. குழலி எழுந்து கேட்டு எழுந்து நீங்கி வெய்துயிர்த்துப் புலம்பி அழுதேங்கி அயாவுயிர்த்தெழுதலும், இருந்தெய்வம் உரைத்தலும், பூங்கொடி பொருந்தி 'நின்பொருள் பெறுவேன்' என, தெய்வங்கூறும்; அங்ஙனங்கூறுந் தெய்வம் 'என்சொற்றேறு' என, மணிமேகலை 'எனக்கு அருள்' என்றலும் துவதிகனுரைக்கும்; அங்ஙனமுரைக்குந் துவதிகன் உரைத்தலும், நல்லாள்நீங்கி மயக்கொழிதலும், கதிரோன் துயிலெழுப்பினனென வினைமுடிவுசெய்க.

இருபத்திரண்டாவது

# சிறைசெய்காதை.

[இருபத்திரண்டாவது மணிமேகலைபொருட்டால் மடிந்தான் உதயகுமர னென்பது மாதவர்வாய்க்கேட்ட மன்னவன் மணிமேகலையை மந்திரியாகிய சோழிகவேனாதியாற் காவல்கொண்டபாட்டு.]

கடவுண் மண்டிலங் காரிருள் சீப்ப
நெடுநிலைக் கந்தி னின்ற பாவையொடு
முதியோள் கோட்டம் வழிபடல் புரிந்தோ
ருதைய குமரற் குற்றதை யுரைப்பச்
௫ சாதுயர் கேட்டுச் சக்கர வாளத்து
மாதவ ரெல்லா மணிமே கலைதனை
யிளங்கொடி யறிவது முண்டோ விதுவெனத்
துளங்கா தாங்கவ ளுற்றதை யுரைத்தலு
மாங்கவ டன்னை யாருயிர் நீங்கிய
௧௦ வேந்தன் சிறுவனொடு வேறிடத் தொளித்து
மாபெருங் கோயில் வாயிலுக் கிசைத்துக்
கோயின் மன்னனைக் குறுகினர் சென்றீங்
குயர்ந்தோங் குச்சி யுவாமதி போல
நிவந்தோங்கு வெண்குடை மண்ணக நிழற்செய
௧௫ வேலுங் கோலு மருட்கண் விழிக்க
தீதின் றுருள்கநீ யேந்திய திகிரி

௧. கடவுண்மண்டிலம் - சூரியன்.
௩. முதியாள் - சம்பாபதி.
௧ - ௪. பாவையொடு கோட்டத்தை வழிபடல்புரிந்தோர் உற்றதை முனிவர்க்கு உரைப்ப.
௫. சாதுயர் - உதயகுமரனிறந்ததுன்பம்.
௬. மணிமேகலையைநோக்கி.
௭. இளங்கொடியென்பது முன்னிலைக்கண்வந்தது. இது - உதயகுமரனிறந்தது. என - என்று முனிவர்கேட்ப.
௫ - ௭. மாதவரெல்லாம் மணிமேகலையைநோக்கி இதனை நீ அறிவது முண்டோவென.
௮. துளங்காது - நடுங்காது.
இனி, சக்கரவாளக் கோட்டத்துள்ள முனிவர் அரசனையடைந்து உதயகுமரன் இறந்தது மொழிதல் கூறப்படும்.
௧௧. வாயில் - வாயில்காப்போர்.
௧௩. உவாமதி - பூர்ணசந்திரன்.
௧௪. செய - வியங்கோள்.
௧௬. திகிரி தீதின்று உருள்க; தீது - இடையூறு.

நினக்கென வரைந்த வாண்டுக ளெல்லா
மனக்கினி தாக வாழிய வேந்தே
யின்றே யல்ல விப்பதி மருங்கிற்
உ0 கன்றிய காமக் கள்ளாட் டயர்ந்து
பத்தினிப் பெண்டிர் பாற்சென் றணுகியு
நற்றவப் பெண்டிர் பின்னுளம் போக்கியுந்
தீவினை யுருப்ப வுயிரீறு செய்தோர்
பாராள் வேந்தே பண்டும் பலரான்
உரு மன்மருங் கறுத்த மழுவா ணெடியோன்
றன்முன் றோன்ற றகாதொழி நீயெனக்
கன்னி யேவலிற் காந்த மன்னவ
னிந்நகர் காப்போர் யாரென நினைஇ
நாவலந் தண்பொழி னண்ணார் நடுக்குறக்
ஙூ0 காவற் கணிகை தனக்காங் காதல
னிகழ்ந்தோர் காயினு மெஞ்சுத லில்லோன்
ககந்த மனக் கூஉ

---

கஎ. வரைந்த - எல்லையிட்ட.

கஅ. இனிது - பன்மையொருமை மயக்கம்.

காமமிகுதியாற் கொலையுண்ட உதயகுமரன்பொருட்டு வருந்தாவண்ணம், முற்காலத்து அந்நகரத்திற் காமமிகுதியால் தீங்கிழைத்துக்கொலையுண்ட இருவருடைய சரித்திரங்களை அம்முனிவர்களுள் ஒருவர் அரசனுக்குக் கூறுதல் மேற்கூறப்படும்.

உ0. கன்றிய - அடிப்பட்ட; "காமமே கன்றி நின்ற" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், கஅக. அயர்ந்து-செய்து. காமக்கள்ளாட்டு :—கஅ-ம் காதை, அஅ; உ௫-காதை, கக.

உஉ. நற்றவப்பெண்டிர் - நல்ல தவஞ்செய்யுமகளிர்; நற்றவம் - வீடுபெறுதற்குச் செய்யுந் தவமுமாம்; "நற்றவஞ்செய் வார்க்கிடந் தவஞ்செய் வார்க்கு மஃதிடம்" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், சஅ.

உச. பண்டும், உம்மை-எதிரதுதழீஇய வெச்சப்பொருளது.

உ௫. மன்மருங்கறுத்த - இராசகுலத்தை இல்லையாக்கின; "ஞாமருங் கறுத்த மொய்ம்பின் மதவலி" என்பது திருமுருகாற்றுப்படை, உசு. மழுவாணெடியோன் - பரசுராமன்; மழுவாள் - மழுவாகிய வாள்.

உஎ. கன்னி - துர்க்கை; சம்பாபதியுமாம். காந்தமன்னவன் - காந்தனென்னும் பெயரையுடைய அரசன்.

உஅ. இந்நகரென்றது, காவிரிப்பூம் பட்டினத்தை. நினைஇ - நினைந்து.

உக. நாவலந்தண்பொழில் - சம்புத்தீவில். நண்ணார் - பகைவர்.

ஙூ0. காவற்கணிகை - களத்தரவெட்டி; இராக்கிடைப் பெண்டென்பர் சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர்; இக்கிரவிழவூரெடுத்தகாதை, ௬0 - ம் அடிக்குறிப்பைப் பார்க்க. இவள் அரசன் காமக்கிழத்திபோலும். காதலன்-மகன்.

ஙூக. எஞ்சுதல் - குறைதல். 'இகழ்ந்தோர் காயினும்' என்றும் பாடம்.

உக - ஙூக. நண்ணார் இகழ்ந்தோராய் நடுக்குறக்காயினும் எஞ்சுதலில்லோன்.

ஙூஉ. ககந்தனுமென - ககந்தன் காத்தற்குரியனாவானென்று நினைத்து. கூஉய்-அழைத்து.

ஙூ0 - ஙூஉ. காதலனும் எஞ்சுதலில்லோனுமாகிய ககந்தனென்க.

மேல்வருவது, ககந்தனைநோக்கி அரசன் கூறுங்கூற்று.

யரசா ளுரிமை நின்பா லின்மையிற்
பரசு ராமனின் பால்வந் தணுகா
௩௫ னமர முனிவ னகத்தியன் றனாது
துயர்நீங்கு கிளவியின் யான்றோன் றளவுங்
ககந்தன் காத்தல் காகந்தி யென்றே
யியைந்த நாம மிப்பதிக் கிட்டீங்
குள்வரிக் கொண்டவ் வுரவோன் பெயர்நாட்
௪௦ டெள்ளுநீர்க் காவிரி யாடினள் வரூஉம்
பார்ப்பனி மருதியைப் பாங்கோ ரின்மையின்
யாப்பறை யென்றே யெண்ணின னாகிக்
காவிரி வாயிலிற் ககந்தன் சிறுவ
னீவா வென்ன நேரிழை கலங்கி
௪௫ மண்டிணி ஞாலத்து மழைவளந் தரூஉம்
பெண்டி ராயிற் பிறர்நெஞ்சு புகாஅர்
புக்கேன் பிறனுளம் புரிநூன் மார்பன்
முத்தீப் பேணு முறையெனக் கில்லென
மாதுய ரெவ்வமொடு மனையகம் புகாஅள்
௫௦ பூத சதுக்கம் புக்கனள் மயங்கிக்
கொண்டோற் பிழைத்த குற்றந் தானிலேன்

---

௩௩. ககந்தன் கணிகைமகனாதலின் அவன்பால் அரசவுரிமை இலதாயிற்று.

௩௫. அமரமுனிவனாகிய அகத்தியன்.

௩௫-௩௬. இம்மன்னவன் அகத்திய முனிவர்பாற் பத்திமையுடையனாதலை, "கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட, வமர முனிவ னகத்தியன் றனாது, கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை" (பதிகம், ௧௦-௧௨) என்பதனாலுணர்க.

௩௭. ககந்தன் - அண்மைவிளி. காத்தல் - வியங்கோள்; 'என்று கூறி' என 'ககந்தன் காத்தலின்' என்றும் பாடம்.

௩௯. உள்வரிக்கொண்டு - வேற்றுருவங்கொண்டு. நாள் - நாளில்.

இனிக் கூறப்படுவது, பத்தினிப்பெண்டிர்பாற்சென்றணுகித் தீங்குற்றோன் கதை.

௪௨. யாப்பறை - உறுதியற்றவள். 'எள்ளின னாகி' என்றும் பாடம்.

௪௩. காவிரிவாயிலில் - காவிரிக்கரையில் திருமுகத்துறைகழிகின்றவாயிலில்; "காவிரி வாயிற் கடைமுகங் கழிந்து" என்பது சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, ௩௩.

௪௪. என்ன - என்றுகூற. நேரிழை - மருதி.

௪௭. பிறனுளம்புக்கேனென்க. இக்கருத்தைத்தழுவி, சிலப்பதிகாரம், மங்கலவாழ்த்துப் பாடலிலுள்ள "தீதிலா வடமீன்" என்பதில் 'தீது' என்பதற்கு 'பிறர்நெஞ்சு புகுதல்' என்று அடியார்க்கு நல்லார் பொருள்செய்திருத்தல் காண்க. புரிநூன்மார்பனென்றது தன் கணவனாகிய அந்தணனை.

௪௯. மாதுயரெவ்வம் - மிக்கதுன்பம். புகாஅள் - புகாளாய்.

௫௦. பூதசதுக்கம் - தவமறைந்தொழுகுந் தன்மையிலாளர்முதலிய அறுவகையினரைப் பாசத்தாற்கட்டிப் புடைத்துண்ணும் பூதநிற்றலையுடைய சதுக்கம்; சதுக்கம் - நாற்சந்தி. பூதசதுக்கத்தின் வரலாற்றைச் சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்தகாதை, ௧௨௮-ம் அடிமுதலியவற்றாலுணர்க.

௫௧. கொண்டோன் - கணவன்.

கண்டோ னெஞ்சிற் கரப்பெனி தாயினேன்
வான்றரு கற்பின் மனையறம் பட்டேன்
யான்செய் குற்றம் யானறி கில்லேன்
ருரு பொய்யினை கொல்லோ பூத சதுக்கத்துத்
தெய்வ நீயெனச் சேயிழை யரற்றலு
மாபெரும் பூதந் தோன்றி மடக்கொடி
நீகே ளென்றே நேரிழைக் குரைக்கும்
தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
கூo பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்
பிசியு நொடியும் பிறர்வாய்க் கேட்டு
விசிபிணி முழவின் விழாக்கோள் விரும்பிக்
கடவுட் பேணல் கடவியை யாகலின்
கூரு மடவர லேவ மழையும் பெய்யாது
நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப்
பிறர்நெஞ்சு சுடூஉம் பெற்றியு மில்லை
யாங்கவை யொழிகுவை யாயி னாயிழை
யோங்கிரு வானத்து மழையுநின் மொழியது
எo பெட்டாங் கொழுகும் பெண்டிரைப் போலக்
கட்டா துன்னையென் கடுந்தொழிற் பாச

உஉ. கரப்பு - ஒளித்தல்.

உ௩. வான்றருகற்பு - மழையைத்தரும் கற்பு. மனையறம் பட்டேன் - இல்லறத்திற்குத் துணையாக நிற்றலை ஒழிந்தேன்.

உச. யானறிகில்லேன்-யானறியேன்.

உரு. பொய்யினைகொல்லோ - பொய்ம்மையை யுடையாயோ; 'போயினை கொல்லோ' என்றும் பாடம்.

உரு - உசு. நீ இல்லையாயினையோ.

உஎ. பூதம் - சதுக்கப்பூதம். 'மாபெருந் தெய்வம்' என்றும் பாடம்.

உகூ - கூo. திருக்குறள், ௫௫. 'தொழுமவள்' என்றும் பாடம்.

கூக. பொய்யில்புலவன் - திருவள்ளுவர். பொருளுரை - பொருளையுடைய சொல்; தருமவார்த்தையுமாம். தேறாய்- தெளியாயாய்.

கூஉ. பிசி - பொய்; என்றது பொருளொடு புணராப் பொய்ம்மொழிகளை; நொடி - பொருளொடு புணர்ந்த நகைமொழி. 'கேட்டும்' என்றும் பாடம்.

கூ௩. விசிபிணிமுழவின் விழா - கட்டப்பட்ட கட்டினையுடைய முழவினையுடைய விழா. 'விரும்பியும்' என்றும் பாடம்.

கூச. கடவியையாகலின் - கடப்பாடாக வுடையையாகலின்.

கூரு. மடவரல் - முன்னிலைப்பெயர்.

கூசு. நிறை - நிறுத்தல். பெண்டிர் தம்மேபோல - பெண்டிரைப்போல.

கூஎ. பெற்றியுமில்லை - தன்மையுமில்லை.

கூஅ. அவை - பிசியும் நொடியும் கேட்டலும், விழாக்கோள்விரும்பலும், கடவுட்பேணலும்.

எo. பெட்டாங்கு - விரும்பியவண்ணம். பெண்டிரைப்போல - பெண்டிரைக்கட்டுவதுபோல.

மன்முறை யெழுநாள் வைத்தவன் வழூஉம்
பின்முறை யல்ல தென்முறை யில்லை
யீங்கெழு நாளி லிளங்கொடி நின்பால்
எரு வாங்கா நெஞ்சின் மயரியை வாளாற்
றகர்ந்தன் கேட்டுக் கடிதலு முண்டெனச்
இகந்த பூத மெடுத்துரை செய்ததப்
பூத முரைத்த நாளா லாங்கவன்
றாதை வாளாற் றடியவும் பட்டனன்
அ௦ னின்னுங் கேளா யிருங்கட லுடுத்த
மண்ணாள் செல்வத்து மன்னவ ரேறே
தரும தத்தனுந் தன்மா மன்மகள்
பெருமதர் மழைக்கண் விசாகையும் பேணித்
தெய்வங் காட்டித் திப்பிய வோவியக்
அரு கைவினை கடந்த கண்கவர் வனப்பினர்
மைத்துனன் முறைமையால் யாழோர் மணவினைக்
கொத்தன ரென்றே யூர்முழு தலரெழப்
புனையா வோவியம் புறம்போந் தென்ன
மனையக நீங்கி வாணுதல் விசாகை
௯௦ யுலக வறவியி னூடுசென் றேறி
யிலகொளிக் கந்தி னெழுதிய பாவா
யுலகர் பெரும்பழி யொழிப்பாய் நீயென
மாநக ருள்ளீர் மழைதரு மிவளென
நாவுடைப் பாவை நங்கையை யெடுத்தலுங்
௯௫ தெய்வங் காட்டித் தெளித்திலே னாயின்
மைய லூரோ மனமா சொழியாது
மைத்துனன் மனையாண் மறுபிறப் பாகுவே

எ௨. எழுநாள் - எழுநாளாம். வைத்து - சொன்னவை; இதற்குப்பொருளில்லை. வழூஉம் - தவறும்.

எ௫. மயரி - மயக்கமுடையான்.

எ௪ - எ௬. எழுநாளிற்கடிதலுமுண்டு.

எஎ. இகந்தபூதம் - (தீமையைக்) கடந்தபூதம்.

எஅ. நாளால் - நாளில்.

இனிக்கூறப்படுவது, நற்றவப்பெண்டிர் பின்னுமம்போக்கித் தீங்குற்றோன் கதை.

அ௨ - அ௫. தருமதத்தனும் விசாகையும் வனப்பினர்.

அ௬. யாழோர்மணவினைக்கு - காந்தருவவிவாகத்திற்கு.

அஎ. ஒத்தனர் - இயைந்தனர்.

அஅ. புனையாவோவியம் - வண்ணங்களைக்கொண்டெழுதாதவடிவைக்கோட்டினசித்திரம்; "புனையா வோவியங் கடுப்ப" என்பது நெடுநல்வாடை, ௧௪௭; செயற்கையழகு யாதொன்றும் இன்மையின், இங்ஙனங்கூறினர்.

௯௦. ஊடு - உள்ளே. 'ஊடுவந் தேறி' என்றும் பாடம்.

௯௨. என - என்றுவிசாகைவேண்ட.

௯௩. இவள் மழையைத் தருவாளென்று.

௯௪. நாவுடைப்பாவை - கந்திற்பாவை. எடுத்தல் - உயர்த்தல்.

௯எ. மறுபிறப்பில் மைத்துனன் மனை

னிப்பிறப் பிவனொடுங் கூடே னென்றே
நற்றாய் தனக்கு நற்றிறஞ் சாற்றி
க00 மற்றவள் கன்னி மாடத் தடைந்தபின்
றரும தத்தனுந் தந்தையுந் தாயரும்
பெருநகர் தன்னைப் பிறகிட் டேகித்
தாழ்தரு துன்பந் தலையெடுத் தாயென
நாவுடைப் பாவையை நலம்பல வேத்தி
க0ரு மிக்கோ ருறையும் விழுப்பெருஞ் செல்வத்துத்
தக்கண மதுரை தான்சென் றடைந்தபின்
றரும தத்தனுந் தன்மா மன்மகள்
விரிதரு பூங்குழல் விசாகையை யல்லது
பெண்டிரைப் பேணே னிப்பிறப் பொழிகெனக்
கக0 கொண்ட விரதந் தன்னுட் கூறி
வாணிக மரபின் வருபொரு ளீட்டி
நீணிதிச் செல்வனாய் நீணில வேந்தனி
னெட்டிப் பூப்பெற் றிருமுப் பதிற்றியாண்
டொட்டிய செல்வத் துயர்ந்தோ னாயின
ககரு னந்த ணாள னொருவன் சென்றீங்
கென்செய் தனையோ விருநிதிச் செல்வ
பத்தினி யில்லோர் பலவறஞ் செய்யினும்
புத்தே ளுலகம் புகாஅ ரென்பது
கேட்டு மறிதியோ கேட்டனை யாயி
கஉ0 னீட்டித் திராது நின்னக ரடைகெனத்
தக்கண மதுரை தான்வறி தாக

வியாவேன். மைத்துனனென்றது தரும தத்தனை.

கூகூ. நற்றிறம் - விரதம்.

க00. அவள் - விசாகை.

க0உ. பெருநகர் - காவிரிப்பூம்பட்டினம். பிறகிட்டு - பின்வைத்து.

க0ரு. தலையெடுத்தாய் - நீங்கினாய்.

க0சு. தக்கணமதுரை - கூடல்; தக்கணம் - பாகதச்சிதைவு.

க0எ. தருமதத்தனும், உம்மை - இறந்ததுதழீஇயது.

கக0. கொண்ட - மேற்கொண்ட.

ககக வாணிகமரபு - கொள்வதுமிகையும் கொடுப்பது குறையுமாகாமல் ஒப்பநாடிச்செய்தல்.

ககங. எட்டிப்பூப்பெற்று - அரசனாற் கொடுக்கப்படும் எட்டிப்பட்டத்திற்குரிய பூவைப்பெற்று; இதன்வரலாற்றை இந்நூல் ச - ம் காதை, ருஅ - ம் அடிக்குறிப்பிற்பார்க்க. இரு மூப்பதிற்றியாண்டு - அறுபதுவருடம்; என்றது அவன்பிராயத்தை; "ஆறைந் திரட்டி யாண்டினைக் காயது" என்று பின்பு விசாகைகூறுதல் காண்க; கஉக - ம் அடி.

ககச. ஒட்டிய - நிரம்பிய.

க0எ - ககச. தருமதத்தனும் கூறி ஈட்டிப் பெற்று உயர்ந்தோனாயினனென்க.

கஉ0. அடைகென - அடைவாயென்று அந்தணாளன் கூற.

விப்பதிப் புகுந்தன னிருநில வேந்தே
மற்றவ னிவ்வூர் வந்தமை கேட்டுப்
பொற்றொடி விசாகையு மனைப்புறம் போந்து
கஉரு நல்லா ளொருள் பல்லோர் காப்ப
ணல்லவை கடிந்த வவன்பாற் சென்று
நம்முறை மறிந்தில நம்மை முன்னாண்
மம்மர் செய்த வனப்பியாங் கொளித்தன
வாறைந் திரட்டி யாண்டுனக் காயதெ
கஙு0 னறைங் கூந்தலு நரைவிரா வுற்றன
விளமையுங் காமமும் யாங்கொளித் தனவோ
வுளனில் லாள வெனக்கீங் குரையா
யிப்பிறப் பாயினியா னின்னடி யடையே
னப்பிறப் பியானின் னடித்தொழில் கேட்குவ
கஙுரு னிளமையு நில்லா யாக்கையு நில்லா
வளவிய வான்பெருஞ் செல்வமு நில்லா
புத்தே ளுலகம் புதல்வருந் தாரார்
மிக்க வறமே விழுத்துணை யாவது
தானஞ் செய்யெனத் தரும தத்தனு
கச0 மாமன் மகள்பால் வான்பொருள் காட்டி
யாங்கவ னவளுடன் செய்த நல்லற
மோங்கிரு வானத்து மீனினும் பலவாற்
குமரி மூத்தவக் கொடுங்குழை நல்லா
ளமர னருளா லகனக ரிடீஉம்

கஉஉ. புகுந்தனன் - தருமதத்தன் புகுந்தனன்.

கஉசு. அல்லவை - பொய்முதலியன. மேல் வருவது விசாகைகூற்று.

கஉஅ. மம்மர் - மயக்கம். வனப்பென்றது இருவருடைய அழகையும்.

கஉகூ - கஙு0. என் கூந்தலும் - எனது கூந்தலும், கூந்தல் - மயிர்மாத்திரையாய் ஐவகையுமுணர்த்தலின், 'நரைவிரா வுற்றன' என்று பன்மைகூறினார்; "வண்ணப்போ தருச்சித்து மகிழ்வானுத் தகையவே" என்று சீவகசிந்தாமணியில் வந்திருத்தல்காண்க; நாமகளிலம்பகம், கஙுகூ.

கஙுக. 'யாங்குருத் தனவோ' என்றும் பாடம்.

கஙுச. அப்பிறப்பு - மறுபிறப்பு.

கஙுரு. 'நில்லாது' என்றும் பாடம்.

கஙுஎ. புத்தேளுலகம் - தேவருலகம்.

கஙுகூ. தானஞ்செய்யென - தானஞ் செய்யென்று விசாகைசொல்ல,

கச0. மாமன்மகள் - விசாகை. 'மாமன் மகள்போல் வான்பொருள் காட்டி' என்றும் பாடம்.

கசங. குமரிமூத்த - கன்னிப்பெண்ணாகவிருந்து வறிதே மூப்புற்ற; நல்லாள் - விசாகை; "குமரி மூத்தவென் பாத்திரம்" என ஆபுத்திரன் கூறியதாக முன்னும் கூறியிருத்தல்காண்க; கசும் காதை, ள; "அற்றூர்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம், பெற்றா டமியண் மூத்தற்று." என்பது திருக்குறள், க00எ.

கசச. அமரன் அருளால் - கந்திற்பா

கசரு படுபழி நீங்கிப் பல்லோர் காப்பட்
கொடியிடை வீதியின் வருவோன் குழன்மேன்
மருதி பொருட்டான் மடிந்தோன் றம்முன்
கருகிய நெஞ்சினன் காமங் காழ்கொளச்
சுரியிரும் பித்தை சூழ்ந்து புறந்தாழ்ந்த
கரு0 விரிபூ மாலை விரும்பினன் வாங்கித்
தொல்லோர் கூறிய மணமீ தாமென
வெல்லவிழ் தாரோ னிடுவான் வேண்டி
மாலை வாங்க வேறிய செங்கை
நீலக் குஞ்சி நீங்கா தாகலி
கருரு னேறிய செங்கை யிழிந்தில திந்தக்
காரிகை பொருட்டெனக் ககந்தன் கேட்டுக்
கடுஞ்சினந் திருகி மகன்றுயர் நோக்கான்
மைந்தன் றன்னை வாளா லெறிந்தன
னூழிதோ றூழி யுலகங் காத்து
கசு0 வாழிய வெங்கோ மன்னவ வென்று
மாதவர் தம்முளோர் மாதவன் கூறலும்
வீயா விழுச்சீர் வேந்தன் கேட்டன
னின்றே யல்ல வென்றெடுத் துரைத்து
நன்றறி மாதவிர் நலம்பல காட்டினி
கசுரு ரின்று முளதோ விவ்வினை யுரையென

---

வையிலுள்ள துவதிகனென்னும் தேவ னுடைய கருணையால்.

கசரு. படுபழி - மைத்துனன் முறை யால் யாழோர் மணவினைக்கு ஒத்தனரெ ன்று ஊர்கூறிய பொய்ப்பழி.

கசரு - கசசு. நாப்பண்வருவோன் - விசாகை.

கசஎ. மருதி - முற்கூறிய பார்ப்பனி மருதி. தம்முன் - தமையன்.

கசஅ. கருகிய நெஞ்சு - இருண்ட நெஞ்சு. காழ்கொள - வயிரங்கொள்ள. காழ்கொளக் கருகிய நெஞ்சினனென்க.

கசகூ. சுரியிரும்பித்தை - சுரிந்தகரிய தன் குடுமியில்.

கரு0. மாலையை விரும்பி வாங்கி.

கருஉ. எல் - விளக்கம். இடுவான் வேண்டி - இடவிரும்பி.

கருரு. வாங்க-கொள்ளுதற்பொருட்டு.

கருச. நீலக்குஞ்சி - கருமையையு டைய குடுமி; நீலம் - கருமை; "நீல யானை மன்னவன்" என்பது சீவகசிந் தாமணி, நாமகளிலம்பகம், கசக.

கருரு - கருச கை நீங்காதாகலின்.

கருசு - கருஅ. விசாகைக்குச் சூட்டு தற்பொருட்டு மாலைவாங்குதற்கு ஏறிய கை குஞ்சியினின்றும் இழிந்திலதென்று ககந்தன் கேட்டு.

கருஎ. சினந்திருகி - கோபமுறுகி; "காய்சினந் திருகிய கடுந்திறல் வே னில்" என்பது பெரும்பாணாற்றுப்படை, கூ. நோக்கான் - நோக்கானாய்; இது நோக்கல் நோக்கம்.

கசுஉ. வீயா - மாறாத.

கசுரு. 'இன்றேயல்ல' என்று எடுத் துரைத்ததனை இக்காதையில் கஅ - ம் அடியிற் காண்க.

கசுரு. உரைமென - சொல்லுமென்று அரசன் சொல்ல.

வென்றி நெடுவேல் வேந்தன் கேட்பத்
தீதின் றாக செங்கோல் வேந்தென
மாதவர் தம்முளோர் மாதவ னுரைக்கு
முடிபொரு ளுணர்ந்தோர் முதுநீ ருலகிற்
௧௭0 கடியப் பட்டன வைந்துள வவற்றிற்
கள்ளும் பொய்யுங் களவுங் கொலையுந்
தள்ளா தாகுங் காமந் தம்பா
லாங்கது கடிந்தோ ரல்லவை கடிந்தோ ரென
நீங்கின ரன்றே நிறைதவ மாக்க
௧௭௫ ணீங்கா ரன்றே நீணில வேந்தே
தாங்கா நரகந் தன்னிடை யுழப்போர்
சேயரி நெடுங்கட் சித்திரா பதிமகள்
காதல னுற்ற கடுந்துயர் பொறாஅண்
மாதவி மாதவர் பள்ளியு ளடைந்தனண்
௧௮0 மற்றவள் பெற்ற மணிமேகலைதான்
முற்றா முலையினண் முதிராக் கிளவியள்
செய்குவன் றவமெனச் சிற்றிலும் பேரிலு
மையங் கொண்டுண் டம்பல மடைந்தன
ளாங்கவ ளவ்வியல் பினளே யாயினு
௧௮௫ நீங்கா னவளை நிழல்போல் யாங்கணுங்

---

௧௬௭. வேந்தே, செங்கோல் தீதின் றாகவென்று.

௧௬௮. உரைக்கும் - உரைப்பான்.

௧௬௯. முடிபொருள் உணர்ந்தோர் - பரமார்த்ததத்துவஞானிகள்.

௧௭0. கடியப்பட்டன - விலக்கப்பட்டன. ஐந்தாவன, கள், பொய், களவு, கொலை, காமமென்பன; "கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையு, முள்ளக் களவு மென் றுரவோர் துறந்தவை" என்பர் பின்னும்; உ௪ - ம் காதை, ௭௭ - ௭௮. அவற்றில் - அவ்வைந்தனுள்ளே.

௧௭௧ - ௧௭௨. காமம், கள்முதலிய நான்கினையும் நீக்காது; என்றது, காமமுடையோர் மற்றை நான்கு குற்றத்தையும் உடையராவரென்றபடி.

௧௭௩. ஆங்கது - அத்தன்மையதாகிய காமத்தை. அல்லவை கடிந்தோர் - அல்லாதகள்முதலியவற்றையுங் கடிந்தோராவார். 'அவைகடிந்தோரென' என்றும் பாடம்.

௧௭௪. நீங்கினரன்றே - அக்காமத்தை நீங்கினோரே.

௧௭௬. உழப்போர் - வருந்துவோர்.

௧௭௫ - ௧௭௬. நீங்காரே நரகத்தில் துன்பமனுபவிப்போராவார்.

மேல் உதயகுமரன்செய்தி கூறப்படும்.

௧௭௮. காதலனுற்ற கடுந்துயர்-கோவலன் கொலையுண்டிறந்தது.

௧௭௯. மாதவர்பள்ளியுள் - சங்கத்தாரான அறவணவடிகளுடைய உறைவிடத்தில். 'அடைதலும்' என்றும் பாடம்.

௧௭௭ - ௧௭௯. மகளாகியமாதவி பள்ளியுளடைந்தனள்.

௧௮0. அவள் - மாதவி.

௧௮௨. தவம் செய்குவனென்று.

௧௮௩. ஐயம் - பிக்ஷை. அம்பலம் - உலகவறவி.

௧௮௫. அவளை நிழல்போல் யாங்கணும் நீங்கானாய்.

காரிகை பொருட்டாற் காமங் காழ்கொள
வாரிரு ளஞ்சா னம்பல மடைந்தனன்
காயசண் டிகைவடி வாயினள் காரிகை
காயசண் டிகையு மாங்குள ளாதலிற்
௧௯0 காயசண் டிகைதன் கணவ னாகிய
வாய்வாள் விஞ்சைய னொருவன் றோன்றி
யீங்கிவள் பொருட்டால் வந்தன னிவனென
வாங்கவன் றீவினை யுருத்த தாகலின்
மதிமருள் வெண்குடை மன்ன நின்மக
௧௯௫ னுதய குமர னொழியா னாக
வாங்கவ டன்னை யம்பலத் தேற்றி
யோங்கிரு ளியாமத் திவனையாங் குய்த்துக்
காயசண் டிகைதன் கணவ னாகிய
வாய்வாள் விஞ்சையன் றன்னையுங் கூஉய்
௨00 விஞ்சை மகள்பா லிவன்வந் தனனென
வஞ்ச விஞ்சையன் மனத்தையுங் கலக்கி
யாங்கவன் றன்கை வாளா லம்பலத்
தீங்கிவன் றன்னை யெறிந்ததென் றேத்தி
மாதவர் தம்முளோர் மாதவ னுரைத்தலுஞ்
௨0௫ சோழிக வேனாதி தன்முக நோக்கி

௧அ௬. காரிகைபொருட்டு - மணிமேகலைபொருட்டு. காழ்கொள - முற்ற.

௧அ௭. அஞ்சானாய் அம்பலமடைந்தனன்.

௧அ௮. காரிகை - மணிமேகலை.

௧அ௯. உளள் - உள்ளாள்.

௧௯௧. வாய்வாள் - தப்பாத வாள்.

௧௯உ. இவள்பொருட்டு - காயசண்டிகையின் பொருட்டு.

௧௯௩. அவன் - உதயகுமரன்; யாஞ்சனுமாம்.

௧௯௪. மருள் - உவமவுருபு. 'மதிமருணெடுங்குடை,' என்றும் பாடம்.

௧௯௬. அவள்தன்னை - மணிமேகலையை.

௧௯௭. இவனை - உதயகுமரனை.

௧௯௯. கூஉய் - அழைத்து.

௨00. விஞ்சைமகள் - காயசண்டிகை.

௨0௩. எறிந்தது -(அத்தீவினை) வெட்டியது.

௨0௫. ஏனாதியென்பது வேந்தனாற் கொடுக்கப்படும் பட்டப்பெயர்களுளொன்று; இதனை, தொல்காப்பியம், புறத்திணையியல், அ - ம் சூத்திரத்தில் 'யானையம் பெற்ற நெடுமொழி யானும்' என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதிய வுரையாலும், அதில் "போர்க்கடலாற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக், கார்க்கடல் பெற்ற கரையன்றோ - போர்க்கெல்லாந், தானாதி யாகிய தார்வேந்தன் மோதிரஞ்சேர், ஏனாதிப் பட்டத்திவன்" என்று அவர் எடுத்துக்காட்டிய பழம்பாட்டாலுமுணர்க; பெரியபுராணத்துக் கூறப்பட்டுள்ள திருத்தொண்டர்களுள் ஒருவர்க்கு ஏனாதிநாதநாயனாரென்ற திருநாமம் இதுபற்றியே வந்த குடிப்பெயர்போலும்; சீவகசிந்தாமணி, மண்மகளிலம்பகத்தில் "செம்பொனீண்முடி" என்னுங்கவியில் 'ஆழி தொட்டான்' என்பதற்கு 'ஏனாதிமோதிரஞ்செறித்த சேனாபதி' என்று ஆசிரியர் நச்சினார்க்கினியரெழுதி யிருக்கின்

யான்செயற் பால திளங்கோன் றன்னைத்
தான்செய் ததனுற் றகவிலன் விஞ்சையன்
மாதவர் நோன்பு மடவார் கற்புங்
காவலன் காவ லின்றெனி னின்றால்
உ௧0 மகனை முறைசெய்த மன்னவன் வழியோர்
துயர்வினை யாளன் றோன்றின னென்பது
வேந்தர் தஞ்செவி யுறுவதன் முன்ன
மீங்கிவன் றன்னையு மீமத் தேற்றிக்
கணிகை மகளையுங் காவல்செய் கென்றனன்
உ௧௫ அணிகிளர் நெடுமுடி யரசாள் வேந்தென.

சிறைசெய்காதை முற்றிற்று.

றனர். மேற்கூறியவாற்றாலும், இக்காதையின் தலைப்பில் 'மந்திரியாகிய சோழிகவேனுதி' என்றிருத்தாலும் 'சோழிகவேனுதி' என்பதற்குச் சோழனுடைய (ஏனுதிமோதிரஞ்செறித்த) சேனுபதியும் மந்திரியுமாகிய ஒருவனென்று பொருள்கொள்ளுதல் பொருத்தமுடைத்து.

உ0௭. விஞ்சையன் தகவிலன் - காஞ்சனன் தகுதியில்லாதவனாயினான்.

உ0௬ - உ0௭. யான் செயற்பாலதைத் தான் செய்தனனெலன்க.

உ0௮ - உ0௯. காவலின்றெனின், நோன்புமின்று, கற்புமின்று; "அருந்திற லரசர் முறைசெயி னல்லது, பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாது" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, உ0௭ - உ0௮.

உ௧0. மகனை முறைசெய்த மன்னவன் - கன்றையிழந்த பசுவின் துயரைத் தீர்த்தற்குத் தன்மகனைக்கிடத்தி அவன் மார்பில் உருளைசெல்லும்படி தேரையூர்க் தமனுவேந்தன்; இதனைப் பின்வருவன வற்றாலுணர்க; "வாயிற் கடைமணி நடுநா நடுங்க, வாவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான்றன், அரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன், பெரும்பெயர்ப் புகாரென் பதியே" (வழக்குரைகாதை, ௫௩ - ௫௬) எனவும், "கறவை முறைசெய்த காவலன்காணம் மானை, காவலன் பூம்புகார் பாடேலோ ரம்மானை" (வாழ்த்துக்காதை, "புறவு நிறை"—) எனவும் வருவன சிலப்பதிகாரம்; "மருளும் பசுவொன்றின் மம்மர்நோய் தீர, வருளுந் திருத்தேரூர் வோன்" என்பது குலோத்துங்கசோழனுலா. இக்கதையின் விரிவைப் பெரிய புராணத்தில் திருவாரூர்ச் சிறப்பிற்காண்க.

உ௧௧ துயர்வினை - தீவினை.

உ௧௨ - உ௧௩. முன்னம் ஏற்றி.

உ௧௪. கணிகைமகள் - மணிமேகலை.

௧ - உ௧௫ மண்டிலம் சீப்பப் புரிந்தோர் உரைப்பக்கேட்டமாதவரெல்லாம் மணிமேகலையைநோக்கி 'இதனை நீயறிவதுமுண்டோ' என, அவள் உரைத்தலும், அவளைச் சிறுவனொடு வேறிடத்தொளித்து இசைத்துச்சென்று குறுகி ஓர் மாதவனுரைத்தலும், கேட்டு வேந்தன் 'உரையும்' என, ஓர்மாதவனுரைக்கும்; அங்ஙனமுரைக்குமாதவன் எத்தி உரைத்தலும், வேந்து காவல்செய்கென்றனனென வினைமுடிவுசெய்க.

# இருபத்துமூன்றாவது

# சிறைவிடு காதை

[இருபத்துமூன்றாவது மணிமேகலை சிறைவிடுசெய்த இராசமாதேவி குறைகொண்டிரப்பச் சீலங்கொடுத்தபாட்டு.]

மன்னவ னருளால் வாசத் தலைபெறு
நன்னெடுங் கூந்த னரைமூ தாட்டி
யரசற் காயினுங் குமரற் காயினுந்
திருநிலக் கிழமைத் தேவியர்க் காயினுங்
௫ கட்டுரை விரித்துங் கற்றவை பகர்ந்தும்
பட்டவை துடைக்கும் பயங்கெழு மொழியின
ளிலங்கரி நெடுங்க ணிராசமா தேவி
கலங்கஞ ரொழியக் கடிதுசென் றெய்தி
யழுதடி வீழா தாயிழை தன்னைத்
௧௦ தொழுதுமுன் னின்று தோன்ற வாழ்த்திக்
கொற்றங் கொண்டு குடிபுறங் காத்துச்
செற்றத தெவ்வர் தேயந்தம தாக்கியுந்
தருப்பையிற் கிடத்தி வாளிற் போழ்ந்து

உ. நரைக்கூந்தல் - வெண்மையையுடைய கூந்தல்.

௩ - ௪. ஆயினுமென்பது விகற்பப் பொருளைத் தருவதோ ரிடைச்சொல்; எண்ணிடைச்சொல்லுமாம்.

௫. கட்டுரை - பொருள்பொதிந்த சொல்.

௬. பட்டவை - உண்டான துன்பங்கள். 'பட்டது துடைக்கும்' என்றும் பாடம். பயம் - பிரயோசனம்.

௫ - ௬. விரித்தும் பகர்ந்தும் துடைக்குமொழியினள்.

௮. கலங்கஞர் - கலங்குதற்குக் காரணமாகிய துன்பம். கடிதுசென்று விரைவாகச்சென்று.

௧ - ௮. வாசத்தலைபெறுமூதாட்டி, மொழியினள், தேவியது அஞரொழிய மன்னவனருளாற் கடிதுசென் றெய்தி யென்க.

௯. 'அழுதன ளடிவீழ்ந்து' என்றும் பாடம்.

௧௦. தொழுது - அஞ்சலிசெய்து.

௧௧. கொற்றங்கொண்டு - வெற்றிகொண்டு; "கொற்றங் கொண்டு கோலினி தோச்சென" என்பது பெருங்கதை, இலாவாணகாண்டம், மன்னுநீராட்டியது. குடிபுறங்காத்து - குடிகளைப் பிறர் நலியாமற் பாதுகாத்து; "குடிபுறங் காத்தோம்பி" என்பது திருக்குறள், ௫௪௯.

௧௨. செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழ்வது. தெவ்வர் - பகைவர். 'செற்ற தெவ்வர்' என்றும் பாடம்.

௧௩. தருப்பையிற்கிடத்தி - பரப்பிய தருப்பைப்புல்லிற் கிடத்தி. போழ்ந்து - பிளந்து.

செருப்புகன் மன்னர் செல்வுழிச் செல்கென
௧௫ மூத்து விளிதலிக் குடிப்பிறந் தோர்க்கு
நாப்புடை பெயராது நாணுத்தக வுடைத்தே
தன்மண் காத்தன்று பிறர்மண் கொண்டன்
றென்னெனப் படுமோ நின்மகன் மடிந்தது
மன்பதை காக்கு மன்னவன் றனமுன்
௨௦ றுன்பங் கொள்ளே லென்றவள் போயபின்
கையாற் றுள்ளங் கரந்தகத் தடக்கிப்
பொய்யாற் றொழுக்கங் கொண்டுபுற மறைத்து
வஞ்சஞ் செய்குவன் மணிமே கலையையென்
றஞ்சி லோதி யரசனுக் கொருநாட்
௨௫ பிறர்பின் செல்லாப் பிக்குணிக் கோலத்

---

*௧௪. செருப்புகல் மன்னர் - போரின் கண்ணேபுக்குப் போர்செய்து வீழ்தலையுடைய அரசர், செல்வுழிச் செல்க என - செல்லுமுலகத்திலே செல்கவென்று அந்தணர் கூறும்வண்ணம்.

௧௫. மூத்துவிளிதல் - மூப்புற்று இறத்தல். இக்குடி - சோழபரமபரை.

௧௩ - ௧௫. போரிலிறவாமல் முதுமையுற்று நோயால் இறந்த அரசருடம்பை அந்தணர் தருப்பைப்புல்லிற்கிடத்தி, தமது ஆண்மையேபற்றுக்கோடாக யுத்தத்திலேயிறந்த அரசர்செல்லும் உலகத்திலே இவர்செல்கவென்று அவ்வுடம்பைவாளாற்பிளந்து அடக்குதல் மரபாதலின், இங்ஙனங்கூறினர்; இப்படியே, "ஓடன் மரீஇய பீடின் மன்னர், நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக், காதன் மறந்தவர் தீதுமருங் கறுமா, ரறம்புரி கொள்கை நான்மறை முதல்வர், திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி, மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த, நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென, வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர்" எனப் புறநானூற்றில், ௯௩-ம பாட்டில் வந்திருத்தல் காண்க.

௧௬. நாப் புடைபெயராது - இதனைக் கூறுதற்கு எனது நாப் புடைபெயரமாட்டாது நாணுத்தகவுடைத்து-நாணுந்தகுதியையுடைத்து; "மலைத்தனை யென்பது நாணுத்தகவுடைத்தே" என்பது புறநானூறு, ௬௬. 'நாணுத் தகவுடைத்தென' என்றும் பாடம்.

௧௫ - ௧௬. விளிதல் நாணுத்தகவுடைத்து.

௧௨ - ௧௬. சமதாக்கியும் மூத்துவிளிதல் இக்குடிப்பிறந்தோர்க்கு நாணுத்தகவுடைத்து.

௧௭ - ௧௮. நின்மகன் மடிந்தது தன்மண் காத்தமையாலன்று; பிறர்மண் கொண்டமையாலுமன்று; காமத்தால்; அவ்விறப்பு யாதென்று கூறப்படும்.

௧௯. மன்பதை - உயிர்ப்பன்மை.

௨௦ கொள்ளேல் கொள்ளாதே. அவள் போயபின் - வாசந்தவைபோனபின்பு

இராசமாதேவி, அரசனையடைந்து மணிமேகலையைச் சிறைமீட்டு உடன்கொண்டுசென்று தன் காவலில்வைத்து வஞ்சித்தல் இனிக்கூறப்படும்.

௨௧. கையாற்றுள்ளங்கரந்து - செயலறவினையுடைய உள்ளத்தைமறைத்து; என்றது புத்திரசோகத்தை வெளிப்படுத்தாமலென்றபடி.

௨௨. பொய்யாற்றொழுக்கங்கொண்டு - பொய்வழிக்கண் ஒழுகுதலைக்கொண்டு. புறமறைத்து - புறததே தோன்றாமல் மறைத்து; என்றது மணிமேகலையை வஞ்சித்தற்கெண்ணிய தனது தீயவெண்ணத்தை ஒருவாற்றானும் வெளிப்படுத்தாமலென்றபடி.

௨௩. மணிமேகலையை வஞ்சஞ்செய்குவனென்று கருதி.

௨௪. அஞ்சிலோதி - அழகிய சிலவான கூந்தலையுடைய இராசமாதேவி.

௨௫. கோலத்து - வேடத்தைக்கண்டு.

தறிவு திரிந்தோ னரசிய லுழிலன்
கரும்புடைத் தடக்கைக் காமன் கையற
வரும்பெற லிளமை பெரும்பிறி தாக்கு
மறிவு தலைப்பட்ட வாயிழை தனக்குச்
௧0 சிறைதக் கன்று செங்கோல் வேந்தெனச்
சிறப்பின் பாலார் மக்க ளல்லார்
மறப்பின் பாலார் மன்னர்க் கென்ப
தறிந்தனை யாயினிவ் வாயிழை தன்னைச்
செறிந்த சிறைநோய் தீர்க்கென் றிறைசொல
௧௫ வென்னோ டிருப்பினு மிருக்கவிவ் விளங்கொடி
தன்னோ டெடுப்பினுந் தகைக்குந ரில்லென்
றங்கவ டனைக்கூஉ யவடன் னோடு
கொங்கவிழ் குழலாள் கோயிலுட் புக்காங்
கறிவு திரித்திவ் வகனக ரெல்லா
௨0 மெறிதரு கோலம்யான் செய்குவ லென்றே

உக. அறிவுதிரிந்தோன் - அறிவு வேறுபட்ட உதயகுமரன். 'அறவிய றிரிந்தோன்' என்றும் பாடம்.

உஎ. கையற - செயலற.

உஅ. இளமை-இளமையை. பெரும்பிறிதாக்கும் பயன்படாது கெடச்செய்த.

உஎ - உஅ. கையறப் பெரும்பிறிதாக்குமென்க.

உக. தலைப்பட்ட-சேர்பட்ட; முதன்மைப்பட்டவென்றுமாம்.

௧0. தக்கன்று - தக்கதன்று; விகாரம். வேந்து - அண்மைவிளி. என - என்று இராசமாதேவி சொல்ல.

௨௪ - ௧0. அஞ்சிலோதி ஒருநாள் அரசனுக்குச் சிறைதக்கன்றெனவென்க.

௧௧ - ௧௨. சிறப்பின்பாலார் மக்கள் - கல்விமுதலியவிசேடமுடையவர்கள் புதல்வர். அல்லார் மறப்பின்பாலார் - அல்லாதவர்கள் மறத்தற்குரியவர். என்பது - என்ற பெரியோர்கூறுதலை; இவ்வடிகளின் கருத்து, "உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும், பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே, பிறப்போரன்ன வுடன்வயிற் றுள்ளுஞ், சிறப்பின் பாலாற் றாயு மனந்திரியு, மொருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளு, மூத்தோன்வருக வென்னா தவரு, ளறிவுடை யோனாறரசுஞ் செல்லும், வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங், கீழ்ப்பா லொருவன் கற்பின், மேற்பா லொருவனு மவன்கட் படுமே." என்னும் (புறநானூறு, ௧அ௩) பாட்டின் பொருளை ஒருவாறு தழுவிவர் திருத்தல்காண்க.

௧௩. ஆயிழை - மணிமேகலை.

௧௪. சிறைநோய் - சிறைத்துன்பம். தீர்க்கென்று - தீர்க்கவென்று. இறை - அரசன்.

௧௫. தன் ஓடு எடுப்பினும் - தனக்குரிய நாட்டையேர்கிப் பிச்சைக்குப் புகுவாளாயினும், தகைக்குநர் இல் - தடுப்பவர்களில்லை; "அணித்தகை யுடம்பு" என்பது சீவகசிந்தாமணி, பதுமையாரிலம்பகம், எ. என்று - என்றுகூறி.

௧எ. அவன்தனைக்கூஉய் - மணிமேகலையை யழைத்து.

௧அ. குழலாள் - இராசமாதேவி.

௧எ - ௧அ. குழலாள் அவளோடு கோயிலுட்புக்கு.

௧௯. அறிவுதிரித்து - அறிவைமருட்சால் வேறுபடச்செய்து; பித்தாக்கியென்றபடி.

௨0. எறிதருகோலம் - அடிக்கும்கோலத்தை. செய்குவலென்று - இவளுக்குச் செய்வேனென்றுகருதி.

மயற்பகை யூட்ட மறுபிறப் புணர்ந்தா
ளயர்ப்பது செய்யா வறிவின ளாகக்
கல்லா விளைஞ ஞெருவனைக் கூஉய்
வல்லாங்குச் செய்து மணிமே கலைத
னிணைவள ரிளமுலை யேந்தெழி லாகத்துப்

பான்மைக் கட்டுரை பலர்க்குரை யென்றே
காணம் பலவுங் கைந்நிறை கொடுப்ப
வாங்கவன் சென்றவ் வாயிழை யிருந்த
௫௦ பாங்கி லொருசிறைப் பாடுசென் றணைதலுந்
தேவி வஞ்ச மிதுவெனத் தெளிந்து
நாவியன் மந்திர நடுங்கா தோதி
யாண்மைக் கோலத் தாயிழை யிருப்பக்
காணம் பெற்றோன் கடுந்துய ரெய்தி
யரச ருரிமையி லாடவ ரணுகார்

௪௧. மயற்பகையூட்ட - பித்தேறுதற்குக் காரணமாகிய மருந்தையூட்ட; "வஞ்ச முண்டு மயற்பகை யுற்றோர்" என்பது சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்தகாதை, ௧௨௨. உணர்ந்தாள் - மணிமேகலை.

௪௨. அயர்ப்பது - மறப்பது.

௪௧-௪௨. "மயற்பகை யூட்டினை மறுபிறப் புணர்ந்தே, னயர்ப்பது செய்யா வறிவினே னாயினேன்" என்று இக்காதையிலேயே பின்பு வருதல்காண்க; ௧௨ - ௧௩. உணர்ந்தாள் அறிவினளாக.

௪௩. கூஉய் - அழைத்து.

௪௪. வல்லாங்குச்செய்து - வல்லபடி செய்து; "வடியா நாவின் வல்லாங்குப் பாடி" என்பது புறநானூறு, ௪௭.

௪௮. காணம் - பழங்காசு; இதனை, சீவகசிந்தாமணி, குணமாலையாரிலம்பகம், உ௬எ - ம் கவியுரையிற்காண்க. கைந்நிறைகொடுப்ப - கைந்நிறையக்கொடுப்ப; நிறைய - விகாரம்; "நிலநெளி பரந்த வன்றே" என்பதில் 'நெளி' பதுபோல; இது சீவகசிந்தாமணி, கோவிந்தையாரிலம்பகம், ௨௫.

௪௩ - ௪௮. ஒருவனைக்கூஉய் 'செய்து புணர்குறிசெய்து பொருந்தினை னென்னுங் கட்டுரையைப் பலர்க்கும் உரை' என்றுகூறிக் காணம்பலவும் கொடுப்ப வென்க.

௪௯. ஆயிழை - மணிமேகலை.

௫௦. பாங்கில் ஒருசிறைப்பாடு - அழகில்லாத ஒரு பக்கத்தினிடத்தே; பக்கத்துள்ள ஒரு காவலிடத்தென்றுமாம்.

௪௯ - ௫௦. அவன்சென்று பாடுசென் றணைதலுமென்க.

இது -
ன்வந்தது.

௫௨. நாவியல் மந்திரம் - நாப்புடை பெயருமளவிலே உச்சரிக்கப்படும் மந்திரம்; என்றது வேற்றுருவெய்துவிக்கு மந்திரத்தை; "ஆறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி, நாவியன் மருங்கி னவிலப் பாடி" என்பது திருமுருகாற்றுப் படை, ௧௮௬ - ௧௮௭.

௫௧ - ௫௩. ஆயிழை இது தேவிவஞ்சமெனத்தெளிந்து மந்திரத்தையோதிக் கோலத்துட னிருப்பவென்க.

௫௫. அரசருரிமையில் ஆடவரணுகார் - அரசருடைய தேவிமாரிருக்கும் அந்தப்புரத்தில் ஆண்மக்கள் குறுகார்; "ஆடவர் குறுகா வருங்கடி வரைப்பின்" என்பது நெடுநல்வாடை, ௧௦௭, அந்தப்

கிரயக் கொடுமக ளினைப்பறி யேனென்
றகநகர் கைவிட் டாங்கவன் போயபின்
மகனைநோய் செய்தானை வைப்ப தென்னென்
றுய்யா நோயி னூனொழிந் தனனெனப்
ஙO பொய்ந்நோய் காட்டிப் புழுக்கறை யடைப்ப
வூணொழி மந்திர முடைமையி னந்த
வாணுதன் மேனி வருந்தா திருப்ப
வையென விம்மி யாயிழை நடுங்கிச்
செய்தவத் தாட்டியைச் சிறுமை செய்தே
ஙரு னென்மகற் குற்ற விடுக்கண் பொறுத்து
பொன்னே ரனையாய் பொறுக்கென் றவடொழ
நீல பதிதன் வயிற்றிற் றோன்றிய
வேலங் கமழ்தா ரிராகுலன் றன்னை
யழற்க ணாக மாருயி ருண்ண

புரத்தை, 'குழைமுகப் புரிசை' என்பர் திருத்தக்கதேவர்; சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், உசக.

ஙசு. நரகத்தையடைதற்குரிய கொடுமையையுடைய இவளது தீயவெண்ணத்தை யானறிந்திலேனெனக்கருதி; இராசமாதேவி வியபிசரிக்குங்கருத்துடையாளென்ற அவ்விளைஞன் கருதினான்போலும். 'தினைப்பதறியேனென்ற' என்றும் பாடம்.

ஙஎ. அகநகர் - அந்தப்புரம்.

ஙச - ஙஎ. காணம்பெற்றோன், துயரெய்தி அறியேனென்று கைவிட்டுப் போயபினென்க.

சக - ஙஎ. உக-ம் காதை, கச - கரு.

ஙஅ. மகனைநோய்செய்தானை-உதயகுமரனுக்குக்காமநோயை உண்டாக்கிக்கொல்லுவித்த இவளை, வைப்பது என்னென்ற-உயிருடன்வைத்தல் நமதன்பிற்கு யாதுபயனென்ற இராசமாதேவி கருதி.

ஙக. உய்யாநோயின் - உயிர்த்தாங்கியிராமைக்குக் காரணமாகிய நோயினால்.

ஙO. புழுக்கறை - புழுங்கச்செய்யும் அறை; "புழுக்கறைப் பட்டோர் போன்ற" என்றார் முன்னும்; ங-ம் காதை, கரு.

ஙஅ-ஙO. (இராசமாதேவி) வைப்பதென்னென்ற காட்டி அடைப்பவென்க.

ஙஉ. வாணுதல் - மணிமேகலை.

ஙஅ - ஙஉ:—உக - ம் காதை, கக கஎ.

ஙங. ஐயெனவிம்மி - விரையப் பொருமி; "ஐயென விளப்ப" (கோவிந்தையாரிலம்பகம், சO) எனவும், "மோதிரந் தொட் டையென" (குணமாலையாரிலம்பகம், கஙO) எனவும் வருவன சீவகசிந்தாமணி. ஆயிழை - இராசமாதேவி.

ஙச. செய்தவத்தாட்டியை - மணிமேகலைக்கு; ஐ - உருபுமயக்கம். சிறுமை - குற்றம்; என்றது மயற்பகையூட்டியது முதலிய மூன்றினையும்.

ஙச - ஙரு. பொறுத்து செய்தேனென்க.

ஙசு. பொன்னேரனையாய்-திருமகளின்மறுதலைபோல்வாய்; திருமகளுக்குநேராகிய அத்தன்மையையுடையாயெனினுமமையும்; இப்படியே, "கோளரிக் குந்நிகரன்னார்" (திருச்சிற்றம்பலக்கோவையார், உஉரு) என்று வந்திருத்தல் காண்க.— உ -ம் காதை, கக. அவள் - இராசமாதேவி.

மேல்வருவன மணிமேகலைகூற்று.

ஙஎ - ஙஅ. தோன்றிய இராகுலன் றன்னை.

ஙக அழற்கணாகம் - திட்டிவிடமென்னும்பாம்பு. அழல்-விடம்; "ஐந்தலை யரவின் சீற்றத் தாழல் குனிக்க

எ0 விழித்த லாற்றே னென்னுயிர் கொண்டோன்
யாங்கிருந் தழுதனை யிளங்கோன் றனக்குப்
பூங்கொடி நல்லாய் பொருந்தா துசெய்தனை
யுடற்கழு தனையோ வுயிர்க்கழு தனையோ
யுடற்கழு தனையே லுன்மகன் றன்னை
எரு யெடுத்துப் புறங்காட் டிட்டனர் யாரே
யுயிர்க்கழு தனையே லுயிர்புகும் புக்கில்
செயப்பாட்டு வினையாற் றெரிந்துணர் வரிய
தவ்வுயிர்க் கன்பினை யாயி னாய்தொடி
யெவ்வுயிர்க் காயினு மிரங்கல் வேண்டு
அ0 மற்றுன் மகனை மாபெருந் தேவி
செற்ற கள்வன் செய்தது கேளாய்
மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனை
யுடற்றுணி செய்தாங் குருத்தெழும் வல்வினை
நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி
அரு விஞ்சையன் வாளால் வீட்டிய தன்றே

னுற்றார்" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், உருச; "அழல்வாய் நாகத் தாரெயிறழுந்தினர்" என்பது சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்தகாதை, கஉச. "நஞ்சுவிழி யரவு" என்று இப்பாம்பின்பெயர் இக்காதையிலேயே பின்னும் வருதல்காண்க; அச-ம் அடி.

எ0. விழித்தல்-உயிர்வாழ்தல்; நாகத்தின் தொழிலாக்கினுமமையும். 'இழித்தலாற்றேன்' என்றும் பாடம்.

எக. இளங்கோன்றனக்கு யாங்கிருந் தழுதனை; அழுதிலாயென்றபடி.

எரு. புறங்காடு - மயானம். 'ஈமப் புறங்காடு' என்றும் பாடம்.

எசு. புக்கில் - புகுமிடமாகிய வுடம்பு; "நோக்கார்கொ றெய்யதோர் புக்கிலே" (நாலடியார், தூய்தன்மை, க.) என்பதில் 'புக்கில்' என்பது உடம்பென்னும்பொருளில் வந்திருத்தல் கா

எஎ. வினையென்றது நல்வினை தீவினையென்னுமிரண்டையும். 'செயற்பாட்டு வினை' என்றும் பாடம்.

எசு - எஎ. வினையால் உயிர்புகும்புக்கில் தெரிந்துணர்வரியதென்க.

எஅ. அன்பினையாயின் - அன்பினையுடையாயாயின்; ஆய்தொடி - விளி.

எகூ. எவ்வுயிர்க்காயினும் - எவ்வுயிர்க்கும்.

அ0. மாபெருந்தேவி-இராசமாதேவி; விளி.

அக. செற்றகள்வன் - கோபித்த காஞ்சனன். செய்தது கேளாய் - கொலை செய்ததற்குக் காரணமான தீவினையைக் கேள்.

அஉ. மடைக்கலம் - சோற்றுப்பாத்திரம். மடையன் - சோறுசமைப்போன்.

அங. உடம்பைத் துண்டமாகவெட்டினமையால் தோன்றியெழுந்த வலிய தீவினை. 'உருத்தெழு மல்வினை' என்றும் 'உருத்தெழு மவ்வினை' என்றும், 'உருத்தெழு பாவம்' என்றும் பாடம்.

அச. அரவின் - அரவினால். நல்லுயிர் வாங்கியென்றது முற்பிறப்பின்செய்தியை.

அரு. வீட்டியது - கொன்றது; வீழ்த்தியதென்பதன்மரூஉவுமாம்.

அங-அரு. வினை முற்பிறப்பில் உயிரை அரவின்வாங்கி இப்பிறப்பில் விஞ்சையன்வாளால் வீட்டியது.

யாங்கறிந் தனையோ வீங்கிது நீயெனிற்
பூங்கொடி நல்லாய் புகுந்த திதுவென
மொய்ம்மலர்ப் பூம்பொழில் புக்கது முதலாத்
தெய்வக் கட்டுரை தெளிந்ததை யீறா
௯0 வுற்றதை யெல்லா மொழிவின் றுரைத்து
மற்று முரைசெயு மணிமே கலைதான்
மயற்பகை யூட்டினை மறுபிறப் புணர்ந்தே
னயர்ப்பது செய்யா வறிவினே னாயினேன்
கல்லாக் கயவன் காரிருட் டான்வர
௯௫ நல்லா யானுரு நான்கொண் டிருந்தே
னானொழி மந்திர முடைமையி னன்றே
மாணிழை செய்த வஞ்சம் பிழைத்த
தந்தாஞ் சேறலு மயலுருக் கோடலுஞ்
சிந்தையிற் கொண்டிலேன் சென்ற பிறவியிற்
௧00 காதலற் பயந்தோய் கடுந்துயர் களைந்து
தீதுறு வெவ்வினை தீர்ப்பது பொருட்டாற்
றையா லுன்றன் றமொற் றவலத்
தெய்யா மையறீர்க் கின்னுரை கேளா

௮௬. இது - இச்செய்தியை.

௮௭. புகுந்தது இதுவென - சம்பவித்தது இதுவென்று.

௮௮. பொழில் - உவவனம்.

௮௯. தெய்வக்கட்டுரை-கந்திற்பாவைத்தெய்வங் கூறிய பொருள் பொதிந்த சொல்.

௯0. ஒழிவின்று - தப்பாமல்.

௮௭ - ௯0. இதுவெனவுரைத்தென்க.

௯௧. மணிமேகலை பின்னும் சொல்லுவாள்.

௯௨. மயற்பகை - பித்தேறுதற்குக்காரணமாகிய மருந்து.

௯௩. அயர்ப்பது - மறப்பது.

௯௨ - ௯௩. "மயற்பகை யூட்ட மறுபிறப் புணர்ந்தா, ளயர்ப்பது செய்யா வறிவின ளாக" என்று இப்படியே இக்காதையில் முன்னும் வந்திருத்தல்காண்க; ௬௧ - ௬௨.

௯௪. கயவன் - கீழ்மகன்; கொடியவனுமாம். இருள் - இருளில்.

௯௫. நான் ஆணுருக்கொண்டிருந்தேன்.

௯௪ - ௯௫ :—௨[illegible]-ம் காதை, [illegible].

௯௬. 'உடைமையி னன்றே' என்றும் பாடம்.

௯௭. வஞ்சம் - ஊணொழிந்தனளென்று பொய்ந்நோய்காட்டிப் புழுக்கறையடைத்தது. பிழைத்தது - தப்பியது.

௯௬-௯௭. மந்திரமுடைமையினன்றே வஞ்சம்பிழைத்தது; [illegible]-ம் காதை, [illegible].

௯௮. அயலுருக்கோடல் - வேற்றுருவங்கொள்ளல்.

௯௯ - ௧00. போனபிறப்பில் எனக்குக் கணவனாயிருந்தோனை இப்பிறப்பிற் பெற்றோய்.

௯௮ - ௧0௧. உனது துயரைக்களைந்து வினையைத் தீர்த்தற்பொருட்டே சேறலும் கோடலும் சிந்தையிற் கொண்டிலேன்.

௧0௨. ஐயாய் - விளி.

௧0௨ - ௧0௩. தமொற்றவலத்தெய்யாமையல் - தமொறுதற்குக் காரணமாகிய வருத்தத்தைச்செய்யும் அறியாமையாகி

யாள்பவர் கலக்குற மயங்கிய நன்னாட்டிக்
கOரு காருக மடந்தை கணவனுங் கைவிட
வீன்ற குழவியொடு தான்வே றாகி
மான்றோர் திசைபோய் வரையாள் வாழ்வுழிப்
புதல்வன் றன்னையோர் புரிநூன் மார்பன்
பதியோ ரறியாப் பான்மையின் வளர்க்க
ககO வாங்கப் புதல்வ னவடிற மறியான்
றான்புணர்ந் தறிந்துபின் றன்னுயிர் நீத்தது
நீர்நசை வேட்கையி னெடுங்கட முழலுஞ்
சூன்முதிர் மடமான் வயிறுகிழித் தோடக்
கான வேட்டுவன் கடுங்கணை துரப்ப
ககரு மான்மறி விழுந்தது கண்டு மனமயங்கிப்
பயிர்க்குரல் கேட்டதன் பான்மைய னாகி
யுயிர்ப்பொடு செங்க ணுகுத்த நீர்கண்

யமயக்கம்; மையல் - செல்வச்செருக்கு மாம்; "மையன்மத யானைநிரை மன்னன்" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், கஎ.

மேல், காமம், கொலை, கள், பொய், களவு ஆகிய இவ்வைந்தும் நீக்கற்பாலன வென்று இராசமாதேவிக்கு மணிமேகலை உபதேசித்தல் முதலியன கூறப்படும்.

கO௪. ஆள்பவர்கலக்குற-அரசர் கொடுங்கோல் செலுத்துதலால். மயங்கிய நன்னாட்டு - யாவரும் தத்தம் நிலைதடுமாறிய நல்லநாட்டில்.

கOரு. காருகமடந்தை - இல்லறவொழுக்கினளாகியவொருத்தி; நெய்வோர் குலத்துப் பிறந்த ஒருத்தியென்றுமாம். கைவிட - துறக்க.

கOசு. குழவியும் தானும் வெவ்வேறிடத்துப் பிரிவுற்று.

கOஎ. மான்று - மயங்கி. வரையாள்-தன்னலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதாரென்னும் நியதியில்லாளாய்.

கO௪ - கOஎ. நாட்டிற் காருகமடந்தை கணவன்கைவிடுதலால் வேறாகி மான்று போய் வரையாளாய் வாழ்வுழியென்க. இல்லறவொழுக்கினளாகிய இவள் கற்பொழிந்து வரைவின்றி வாழ்தற்கு அரசன்கொடுங்கோன்மைகாரணமாதலின், 'ஆள்பவர் கலக்குற' என்பது கூறப்பட்டது; "மாதவர் நோன்பு மடவார் கற்பும், காவலன் காவ லின்றெனி னின்றால்" என்று இந்நூலிலேயே இக்கருத்து முன்பு வந்திருத்தல் காண்க; உஉ-ம காதை, உOஅ - உOக.

கOஅ - கOக. புரிநூன்மார்பன் புதல்வன்றன்னை வளர்க்க.

ககO. ஆங்கப்புதல்வன் - அங்ஙனம் வளர்க்கப்பட்டபுதல்வன்; அவள்திறம்-அவள் தன்னுடைய தாயென்னுந்தன்மையை.

ககக. பின்னறிந்தென்க.

ககஉ. நீர்நசைவேட்கையின் - நீரை நச்சிய விருப்பத்தால்; நசைவேட்கை - வினைத்தொகை; "நின்னசைவேட்கையி னிரவலர் வருவதை" என்பது புறநானூறு, ௩. கடம் - காடு.

கக௩. சூல் - கருப்பம்.

கக௪. வேட்டுவன்-வேடன். துரப்ப-செலுத்த.

ககரு. மான்மறி - பெண்மான்; மான்குட்டியுமாம்.

ககசு. பயிர்க்குரல் - பயிராகியகுரல்; பயிர் - மிருகங்களுள் ஒன்றை மற்றொன்று அழைக்கும் ஓசைக்குறிப்பு; "மடமா னாகு பிணைபயி ரழைப்பின்" என்பது புறநானூறு, கஅஎ. அதன் பான்மையனாகி - அதன் பக்கத்தோனாய்.

னோட்டி யெய்தோ னோருயிர் துறந்ததும்
கேட்டு மறிதியோ வாட்டடங் கண்ணி
௧௨0 கடாஅ யானைமுன் கட்கா முற்றோர்
விடாஅது சென்றதன் வெண்கோட்டு வீழ்வ
துண்ட கள்ளி னுறுசெருக் காவது
கண்டு மறிதியோ காரிகை நல்லாய்
பொய்யாற் றொழுக்கம் பொருளெனக் கொண்டோர்
௧௨௫ கையாற் றவலங் கடந்தது முண்டோ
களவேர் வாழ்க்கைய ருறூஉங் கடுந்துய
ரிளவேய்த் தோளாய்க் கிதுவென வேண்டா
மன்பே ருலகத்து வாழ்வோர்க் கிங்கிவை
துன்பந் தருவன துறக்கல் வேண்டுங்
௧௩0 கற்ற கல்வி யன்றாற் காரிகை
செற்றஞ் செறுத்தோர் முற்ற வுணர்ந்தோர்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோ ரென்போ
ரல்லன் மாக்கட் கில்லது நிரப்புநர்
திருந்தே ரெல்வளை செல்லுல கறிந்தோர்
௧௩௫ வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தோர்

௧௧௮. ஓட்டியெய்தோன் - வேட்டுவன்; சட்டு. ‘ஒட்டியெய்தோன்’ என்றும் பாடம்.

௧௧௮-௧௧௯. நீத்ததும் துறந்ததும் கேட்டுமறிதியோ; இதனால், காமத்தையும் கொலையையும் நீத்தல்வேண்டுமென்பது கூறப்பட்டது.

௧௨0. கடாஅயானை - மதயானை; "கடாஅக் களிற்றின்மேல்" என்பது திருக்குறள், ௧0௮௭. கட்காமுற்றோர் - கள்ளை விரும்பியுண்டுகளித்தோர்.

௧௨௧. கோடு - கொம்பு.

௧௨0-௧௨௨. கட்காமுற்றோர் இங்ஙனமாதலை, "புதுக்கோள் யானை முன் போற்றாது சென்று, மதுக்களி மயக்கத்து வீழா மாய்ந்தனஉய்" (௧௨ - ம் காதை, ௪௫-௪௬.) என்றதனாலுமுணர்க.

௧௨௪. பொய்யாற்றொழுக்கம்-பொய்வழிக்கணொழுகுதல், பொருளெனக்கொண்டோர் - காரியமாகக்கொண்டோர்.

௧௨௫. கையாற்றவலம் - செயலறவாகிய துன்பம்.

௧௨௬. களவேர்வாழ்க்கையர் - களவே உழவுபோலும் இல்வாழ்க்கைப்பொருளாகவுடையோர்; "கைப்பொருள் வெளவுங் களவேர் வாழ்க்கைக், கொடியோர்" என்பது பெரும்பாணாற்றுப்படை, ௪0-௪௧. கடுந்துயர் - மிக்கதுயர்.

௧௨௮. இவை - காமமுதலிய இவ்வைந்தும்.

௧௩0. கல்வி காரிகை அன்று - கல்வி அழகுடைத்தன்று; காரிகை - அழகு; என்றது பின்பு கூறப்படும் நற்குணங்களில்லாதவழி கல்வி அழகுடையதன்றென்றவாறு. இவ்வடியைமுன்னுள்ள அடியோடு கூட்டித் துன்பந் தருவனவற்றைத் துறவாவழிக் கல்வி அழகுடைத்தன்றென்று பொருள்கூறினும் பொருந்தும்.

௧௩௧. செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழ்வது.

௧௩௩. அல்லன்மாக்கட்கு - வறுமைத் துன்பமுடையார்க்கு. ‘இல்லது நிரப்பினர்’ என்றும் பாடம்.

௧௩௨ - ௧௩௩. நிரப்புநரே வாழ்வோரென்போர்.

௧௩௪. எல்வளை-விளி

௧௩௪ - ௧௩௫. அரும்பசி களைந்தோரே செல்லுலகறிந்தோர்.

துன்ப மறுக்குந் துணிபொரு ளுணர்ந்தோர்
மன்பதைக் கெல்லா மன்பொழி யாரென
ஞான நன்னீர் நன்கனந் தெளித்துத்
தேவி ரோதி செவிமுதல் வார்த்து
௧௭௦ மகன்றுயர் நெருப்பா மனம்விற காக
வகஞ்சுடு வெந்தீ யாயிழை யவிப்பத்
தேறுபடு சின்னீர் போலத் தெளிந்து
மாறுகொண் டோரா மனத்தின ளாகி
யாங்கவ டொழுதலு மாயிழை பொறாஅ
௧௭௫ டான்றொழு தேத்தித் தகுதி செய்திலை
காதலற் பயந்தோ யன்றியுங் காவலன்
மாபெருந் தேவியென் றெதிர்வணங் கினளென.

## சிறைவிடுகாதை முற்றிற்று.

௧௬௬. துணிபொருள்-பரமார்த்த தத்துவஞானம்.

௧௬௭. மன்பதைக்கெல்லாம் - உயிர்ப்பன்மைகளுக்கெல்லாம்.

௧௬௬ - ௧௬௭. அன்பொழியாரே துணிபொருளுணர்ந்தோர்.

௧௬௮. ஞானநன்னீர் - ஞானமாகிய நல்லநீரை. நன்கனம் - நன்றாக.

௧௬௯. தேவிரோதி - இராசமாதேவி. செவிமுதல் - செவியிடம்.

௧௭௦. மகன்றுயர் - புதல்வனிறந்தது யரம் — புத்திரசோகம்.

௧௭௧. அகம் - உள்ளிடம். ஆயிழை - மணிமேகலை.

௧௬௮ - ௧௭௧. ஞானநீரைத் தெளித்து வார்த்து வெந்தீயை அவிப்பவென்க.

௧௭௨. தேறு - தேற்றாங்கொட்டை.

௧௭௩. மாறுகொண்டு - பகைமைகொண்டு.

௧௭௪. ஆங்கவள் - இராசமாதேவி. ஆயிழை - மணிமேகலை.

௧௭௬. காதலற்பயந்தோயன்றியும் - எனது பூர்வஜன்ம நாயகனைப் பெற்றதல்லாமலும்.

௧௭௬ - ௧௭௭. காவலன் மாபெருந்தேவியென்று - அரசனது பட்டமகிஷியாகவுமுள்ளாயென்று.

௧ - ௧௭௭. வாசந்தவையென்னுமூதாட்டி, மொழியினள், அவள் மன்னவனருளாற் சென்றெய்தித் தொழுது முன்னின்று வாழ்த்தி, 'மன்னவன்றன் முன் துன்பங்கொள்ளேல்' என்று போயபின், அஞ்சிலோதி கரந்து அடக்கிக் கொண்டு மறைத்து 'மணிமேகலையை வஞ்சஞ்செய்குவல்' என்று ஒரு நாள் அரசனுக்கு, 'சிறைதக்கன்று' என, 'நீர்க்க' என்ற இறைசொல, குழலாள் அவளைக்கூஉய்ப் புக்கு 'செய்குவல்' என்று ஊட்ட, அறிவினளாக, கொடுப்ப, அணைதலும், இருப்ப, போயபின், அடைப்ப, இருப்ப, அவள்தொழ, மணிமேகலை ஒழிவின்றுரைத்து மற்றுமுரைசெய்யும்; அங்ஙனமுரைசெய்பவள் அவிப்ப, அவள் தொழுதலும், ஆயிழை பொறாஅளாய் 'மாபெருந்தேவி' என்று எதிர்வணங்கினளென வினைமுடிவுசெய்க.

இருபத்துநான்காவது

# ஆபுத்திரனாடடைந்தகாதை.

[இருபத்து நான்காவது மணிமேகலை மாநகரொழிந்து ஆபுத்திரனாடடைந்தபாட்டு.]

மன்ன குமரனை வஞ்சம் புணர்த்த
தொன்முது கணிகைதன் சூழ்ச்சியிற் போயவன்
விஞ்சையன் வாளின் விளிந்தோ னென்பது
நெஞ்சு நடுக்குறக் கேட்டுமெய் வருந்தி
ரு மாதவி மகடனை வான்சிறை நீக்கக்
காவலன் றேவி காற்கீழ் வீழ்ந்தாங்
கரவே ரல்கு லருந்தவ மடவா
ருரவோற் களித்த வொருபத் தொருவரு
மாயிரங் கண்ணோ னவிரயம் வழூஉக்கொள
க0 மாயிரு ஞாலத்துத் தோன்றிய வைவரு
மாங்கவன் புதல்வனோ டருந்தவன் முனிந்த
வோங்கிய சிறப்பி னொருநூற்று நால்வருந்
திருக்கிளர் மணிமுடித் தேவர்கோன் றன்மு
னுருப்பசி முனிந்த வென்குலத் தொருத்தியு
கரு மொன்று கடைநின்ற வறிரு பதின்மரித்
தொன்றுபடு மாநகர்த் தோன்றிய நாண்முதல்
யானுறு துன்ப மியாவரும் பட்டிலர்
மாபெருந் தேவி மாதர் யாரினும்

க. மன்னகுமரனை - உதயகுமரனை. புணர்த்த - சேர்த்திய.
உ. முதுகணிகை - சித்திராபதி; எழுவாய்; தொன்முது - ஒருபொருட்பன்மொழி. போயவன் - உதயகுமரன்.
ங. விளிந்தோன் - இறந்தான்.
ரு. மாதவிமகடனை - மணிமேகலையை. நீக்க - நீக்குதற்பொருட்டு.
சு. காவலன்றேவி - இராசமாதேவி.
ரு - சு. நீக்க வீழ்ந்து.
உ - சு கணிகை, விளிந்தோனென்பதைக் கேட்டு வருந்தி வீழ்ந்து.
எ. 'அரவோர்' என்பது முதலியன சித்திராபதிகூற்று.
கக. புதல்வன் - சயந்தன்.
அ - கஉ. (?)
கரு. நூற்றிருபத்தொருவர். 'ஒன்று கடையிட்ட' என்றும் பாடம்.
கசு. தொன்று - பழமை.
கஅ. மாபெருந்தேவி - விளி. மாதர் - நாடகக்கணிகைகள். 'மாதர் யாவரும்' என்றும் பாடம்.
கஎ-கஅ. மாதரெல்லாருள்ளும் யானுற துன்பம் யாவரும்பட்டிலரென இயைக்க.

பூவிலை யீத்தவன் பொன்றினை னென்று
௨0 மாதவி மாதவர் பள்ளியு ளடைந்ததும்
பரந்துபடு மனைதொறும் பாத்திர மேந்தி
யரங்கக் கூத்திசென் றையங் கொண்டது
நகுத லல்லது நாடகக் கணிகையர்
தகுதி யென்னார் தன்மை யன்மையின்
௨௫ மன்னவன் மகனே யன்றியு மாதரா
லிந்நக ருறூஉ மிடுக்கணு முண்டா
லும்பளந் தழீஇய வுயர்மண னெடுங்கோட்டுப்
பொங்குதிரை யுலாவும் புன்னையங் கானற்
கிளர்மணி நெடுமுடிக் கிள்ளி முன்னா
௩0 ளிளவேனி லிறுப்ப விறும்பூது சான்ற
பூநாறு சோலை யாருமி லொருசிறைத்
தானே தமிய ளொருத்தி தோன்ற
வின்ன ளார்கொ லீங்கிவ ளென்று
மன்னவ னறியான் மயக்க மெய்தாக்
௩௫ கண்ட கண்ணினுங் கேட்ட செவியினு
முண்ட வாயினு முயிர்த்த மூக்கினு
முற்றுண ருடம்பினும் வெற்றிச்சிலைக் காமன்

௧௧. பூவிலை - அற்றைப்பரிசம்; "பூவிலை மடந்தைய ரேவற் சிலதியர்" என்பது சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்தகாதை, ௫௧. ஈத்தவன் - கோவலன்.
௨0. மாதவர்பள்ளி - சங்கத்தாரான அறவணவடிகளுறைவுமிடம்.
௨௨. அரங்கக்கூத்தி - மணிமேகலை.
௨௧ - ௨௨. அரங்கக்கூத்தி பாத்திரமேந்திச் சென்று மனைதொறும் ஐயங்கொண்டதும்.
௨0 - ௨௪. அடைந்ததும் கொண்டதும் நகுதற்குக் காரணமாவனவேயன்றி நாடகக்கணிகையர்களுடைய இயல்பன்மையால் அவற்றை அவர்க்குத் தகுதியென்று கூறார்; இனி 'நாடகக்கணிகையர்' என்பதை எழுவாயாகக் கொண்டு அவர் தகுதியென்னாரெனினுமமையும்.
௨௫. மன்னவன் மகனேயன்றியும் - உதயகுமாரனுக்கு உண்டான இடுக்கணல்லாமலும், மாதரால்-மணிமேகலையால்.
௨௬. இடுக்கண் - துன்பம்.
௨௭. உம்பளம் - உப்பளம்; விகாரம். கோடு - கரை.
௨௮. கானல் - கடற்கரைச்சோலை.
௨௯. நெடுமுடிக்கிள்ளி - அரசன்பெயர். முன்னா - முன்னாள்.
௩0. இறுப்ப - தங்குதலால். இறும்பூது - அதிசயம். இறுப்பச்சான்ற.
௩௧. சோலை - சோலையில். ஒருசிறை - ஒருபக்கத்தில்.
௩௨. தானே தமியள் - தான்தனித்தவளாய்; தமி - தனிமை; க௮ - ம் கா தை, க௨௯.
௩௧-௩௨. முன்னாத் தோன்றவென்க.
௩௩. ஈங்குளளாகிய இத்தன்மையையுடையாள் யாவளோவென்று.
௩௪. அறியான் - அறியானாய். மன்னவன் மயக்கமெய்தி; 'மயக்கமெய்தா' என்பது இடக்கர்.
௩௬. வாயென்றது நாவினை. உயிர்த்த - மோந்த.
௩௭. உற்றுணருடம்பு - தீண்டியுணருமுடம்பு.

மயிலையுஞ் செயலையு மாவுங் குவளையும்
பயிலிதழ்க் கமலமும் பருவத் தலர்ந்த
௪௦ மலர்வா யம்பின் வாசங் கமழப்
பலர்புறங் கண்டோன் பணிந்துதொழில் கேட்ப
வொருமதி யெல்லை கழிப்பினு முரையாள்
பொருவரு பூங்கொடி போயின வந்நாள்
யாங்கொளித் தனளவ் விளங்கொடி யென்றே
௪௫ வேந்தரை யட்டோன் மெல்லியற் றேர்வுழி
நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச்
சலத்திற் றிரியுமோர் சாரணன் றோன்ற
மன்னவ னவனை வணங்கி முன்னின்
றென்னுயி ரனைய ளீங்கொளித் தாளுள
௫௦ ளென்னு ளொருத்தியைக் கண்டிரோ வடிகள்
சொல்லுமி னென்று தொழவவ னுரைப்பான்
கண்டிலே னாயினுங் காரிகை தன்னைப்
பண்டறி வுடையேன் பார்த்திப கேளாய்

௩௮. மயிலை - மல்லிகைவிசேடம். செயலை - அசோகு.

௩௯. பயிலிதழ் - செறிந்தஇதழ்.

௪௦. கமழ - கமழ்தலால்.

௩௮ - ௪௦. மயிலை முதலியனவாகிய அம்பென்க.

௩௫ - ௪௦. கண்ணினும் செவியினும் வாயினும் மூக்கினும் உடம்பினும் காமனுடைய மலரம்பின் வாசங்கமழ்தலால். ஈண்டுக்கூறிய 'கண்டகண்' முதலியன அரசனுடைய பொறிகள்; என்றது - வேறுவேறுகாலங்களில் வேறுவேறுபொருள்களானனுபவிக்கப்படுவன ஒருகாலத்து அவள்கண்ணே யனுபவிக்கப்பட்டனவென்பதாம்.

௪௧. பலர்புறங்கண்டோன் - அரசன்.

௪௨. மதி - மாதம். கழிப்பினும் - கழித்தாளாயினும். உரையாள் - சொல்லாளாய்.

௪௩. அந்நாள் - அந்நாளில்.

௪௫. தேர்வுழி - தேடும்பொழுது.

௪௬. நிலத்திற்குளித்து-நீரிற்புகுவது போல் நிலத்திற் புகுந்து. நெடு விசும்பேறி - சந்திரசூரியர்களை யெட்டிப்பிடித்தற்குச்செல்வதுபோல் நீண்ட ஆகாயத்திற்சென்று.

௪௭. சலத்தில் திரியும் - பூமிமேல்நடப்பதுபோல் நீர்மேலேநடந்து திரியும்.

௪௬ - ௪௭. குளித்து ஏறித் திரியும் ஓர்சாரணன்தோன்றவென்க. நிலத்திற் குளித்தல் முதலியன அற்புதசத்தியாகிய இருத்தியெனப்படும். தனது தந்தையாகிய சுத்தோதனனுக்கு ஞானமுண்டாக்குதற்பொருட்டு நிலத்திற்குளித்தன் முதலிய பலவற்புதங்களைப் புத்தன் காட்டினனென்று அசுவகோஷபோதிசத்துவரென்பவராற் செய்யப்பட்டுள்ள புத்தசரிதத்தின், ௧௯-ம் வர்க்கத்தாற் றெரிகின்றது; "நீரினிற் பூவில வானினிவைத்துழி யொதுங்கு கின்ற, சாரணரெண்ம ரவர் சமணரி ருத்தி பெற்றோர்" என்றார் சூடாமணிநிகண்டுடையாரும்; மக்கட்பெயர்த்தொகுதி ௪. "வானூடிழிந்தோன்" (௧௦-ம்காதை, ௧௧.) என்று இந்நூலில் முன்வந்திருத்தல்காண்க.

௪௮. அவனை - அச்சாரணனை.

௫௦. அன்னுள் - அத்தன்மையாள்.

௪௮ - ௫௧. அவனை வணங்கி நின்று சொல்லுமினென்று மன்னவன் றொழ வென்க.

௫௩. அறிவுடையேன் - அறிதலுடையேன்.

நாக நாடு நடுக்கின் றாள்பவன்
ருரு வாகை வேலோன் வளைவணன் றேவி
வாசமயிலை வயிற்றுட் டோன்றிய
பீலிவளை யென்போள் பிறந்த வந்நா
ளிரவிகுலத் தொருவ னிணைமுலை தோயக்
கருவொடு வருமெனக் கணியெடுத் துரைத்தன
சு0 னாங்கப் புதல்வன் வரூஉ மல்லது
பூங்கொடி வாராள் புலம்ப லிதுகே
ளுவகச் சாந்தி செய்யா நாளுன்
காவன் மாநகர் கடல்வயிறு புகூஉ
மணிமேகலைதன் வாய்மொழி யாலது
சுரு தணியா திந்திர சாபமுண் டாகலி
னாங்குப்பதி யழிதலு மீங்குப்பதி கெடுதலும்
வேந்தரை யட்டோய் மெய்யெனக் கொண்டிக்
காசின் மாநகர் கடல்வயிறு புகாமல்
வாசவன் விழாக்கோண் மறவே லென்று
எ0 மாதவன் போயின வந்நாட் டொட்டிக்
காவன் மாநகர் கலக்கொழி யாதாற்
றன்பெயர் மடந்தை துயருறு மாயின்
மன்பெருந் தெய்வம் வருதலு முண்டென
வஞ்சினே னரசன் றேவியென் றேத்தி
எரு நன்மனம் பிறந்த நாடகக் கணிகையை
யென்மனைத் தருகென விராசமா தேவி

---

ருரு. வாகை - வெற்றி.

ருரு - ருசு. தேவியாகிய வாசமயிலை.

ருஎ. அந்நாள் - அந்நாளில்.

ருகூ. கரு-கருப்பம். வரும் - வருவான். கணி - நூல்வல்ல நிமித்திகன்.

ருஎ - ருகூ. அந்நாளிற் கணியெடுத்து ரைத்தனன்.

சு0. வரூஉமல்லது -வருவானேயன்றி.

சுக. பூங்கொடி-பீலிவளை. புலம்பல் - வருந்தாதே.

சுஉ. தீவகச்சாந்தி - இந்திரவிழவு.

சுங. நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

சுச. மணிமேகலை - மணிமேகலாதெய்வம். அது-நகர் கடல்வயிறு புகுதல்.

சுஉ - சுச. செய்யாநாளில் வாய்மொழியால் நகர் கடல்வயிறு புகூஉமென்க.

சுச - சுரு. இந்திரசாபமுமுண்டாதலின், அது தணியாது.

சுசு. ஆங்கு - அக்காலத்தே. பதியிரண்டில் முன்னது நகரம், பின்னது அரசன். 'ஆங்குப் பதியழிதலு மூங்குப் பதி புகுதலும்' என்றும் பாடம்.

சுஅ. காசு - குற்றம்.

சுகூ. மறவேல் - மறவாதே.

எ0. மாதவன் - சாரணன்.

எக. கலக்கு - கலங்குதல்.

எஉ. மடந்தை - மணிமேகலை.

எங. தெய்வம்-மணிமேகலாதெய்வம்.

எரு. நாடகக்கணிகை - மணிமேகலை. 'நஞ்சனையிறந்த நாடகக் கணிகை' என்றும் பாடம்.

எசு. தருகென - தருவாயென்று சித்திராபதி கேட்ப.

கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையு
முள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை
தலைமையாக் கொண்டநின் றலைமையில் வாழ்க்கை
அ0 புலைமையென் றஞ்சிப் போந்த பூங்கொடி
நின்னொடு போந்து நின்மனைப் புகுதா
ளென்னோ டிருக்குமென் றீங்கிவை சொல்வுழி
மணிமே கலைதிற மாதவி கேட்டுத்
துணிகயந் துகள்படத் துளங்கிய வதுபோற்
அ௫ றெளியாச் சிந்தைய ளறமதிக் குரைத்து
வளியெறி கொம்பின் வருந்திமெய்ந் நடுங்கி
யறவண ரடிவீழ்ந் தாங்கவர் தம்முடன்
மறவேன் மன்னவன் றேவிதன் பால்வரத்
தேவியு மாயமுஞ் சித்திரா பதியு
௯0 மாதவி மகளு மாதவர்க் காண்டலு
மெழுந்தெதிர் சென்றாங் கிணைவளைக் கையாற்
றொழுந்தகை மாதவன் றுணையடி வணங்க
வறிவுண் டாகவென் றாங்கவன் கூறலு
மிணைவளை நல்லா ளிராசமா தேவி
௯௫ யருந்தவர்க் கமைந்த வாசனங் காட்டித்
திருந்தடி விளக்கிச் சிறப்புச் செய்தபின்

எஎ. 'கள்ளும்பொய்யும்' என்பது முதலியன இராசமாதேவிகூற்று.

எஅ. உரவோர் - அறிவுடையோர். துறந்தவை - நீக்கியவை.

எஎ-எஅ. உஉ-ம் காதை, கஎ0-கஎஉ.

எகூ. தலைமையில் வாழ்க்கை - கடையான பரத்தைமைத்தொழில்; "மேலோ ராயினு நூலோ ராயினும், பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும், பிணியெனக் கொண்டு பிறக்கிட் டொழியுங், கணிகையர் வாழ்க்கை கடையே" என்றார் சிலப்பதிகாரத்தும்; காடுகாண்காதை, கஅ0 - கஅகூ. 'தன்மையில் வாழ்க்கை' என்றும் பாடம்.

எஎ - எக:— உ - ம் காதை, ௯எ.

அ0. புலைமை-அசுத்தமுடையது. பூங்கொடி - மணிமேகலை.

அஉ. இருக்கும் - இருப்பாள். ஈங்கிவைசொல்வுழி-இவற்றை இராசமாதேவி சொல்லும்பொழுது.

இனி மணிமேகலையின் செய்திகேட்டமாதவி அறவணவடிகளுடன் இராசமாதேவிபால்வருதல் கூறப்படும்.

அகூ. திறம்-காவலிலிருத்தல். திறத்தைக்கேட்டு.

அச. துணிகயம் - தெளிந்த நீர்நிலை. துளங்குதல் - கலங்குதல்.

அ௫. சிந்தையள் - சிந்தையளாய்.

அசு. வளியெறிகொம்பின் - காற்றலலைக்கப்பட்ட பூங்கொம்புபோல.

அஉ - அஅ. ஈங்கிவை சொல்வுழி மாதவி கேட்டுத் தெளியாச்சிந்தையளாய் உரைத்து வருந்தி நடுங்கி வீழ்ந்து அவருடன் இராசமாதேவிபால் வரவென்க.

அக:—உச-ம் காதை, கசக. ஆயம் - சேடியர்கூட்டம்.

௯ச - ௯௬. நல்லாளாகியதேவி ஆசனங்காட்டி விளக்கிச் சிறப்புச் செய்தபினென்க.

யாண்டுபல புக்கநும் மிணையடி வருந்தவென்
காண்டகு நல்வினை நும்மையீங் கழைத்தது
நாத்தொலை வில்லா யாயினுந் தளர்ந்து
க00 மூத்தவிவ் யாக்கை வாழ்கபல் லாண்டெனத்
தேவி கேளாய் செய்தவ யாக்கையின்
மேவினை ஞாயினும் வீழ்கதிர் போன்றேன்
பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்றோ
ரிறந்தா ரென்கை யியல்பே யிதுகேள்
க0ரு பேதைமை செய்கை யுணர்வே யருவுரு
வாயி லூறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பய
னிற்றெனை வகுத்த வியல்பீ ராறும்
பிறந்தோ ரறியிற் பெரும்பே றறிகுவ
கக0 ரறியா ராயி னாழ்நர கறிகுவர்
பேதைமை யென்ப தியாதென வினவி
னோதிய விவற்றை யுணராது மயங்கி
யியற்படு பொருளாற் கண்டது மறந்து
முயற்கோ டுண்டெனக்
ககரு னுலக மூன்றினு முயிரா முலக
மலகில பல்லுயி ரறுவகைத் தாகு

---

கஎ. 'யாண்டு பலபுக்க' என்பது முதலியன இராசமாதேவிகூற்று. யாண்டு - வருடம்.

கஎ - கஅ. வருந்த நும்மை ஈங்கழைத்தது.

கக. நாத்தொலைவில்லாயாயினும் - நாமெலிதலில்லாயாயினும்; சொல்வன்மை குறைந்திலா யென்றபடி. 'நாத்தொலை வில்லை யாயினுங் கிளர்ந்து' என்றும் பாடம்.

க00. இவ்யாக்கையென்றது - அறவணவடிகளுடம்பை. 'மூத்ததிவ் யாக்கை' என்றும் பாடம். என - என்று இராசமாதேவிசொல்ல.

கக - க00. "நரைமுதிர் யாக்கை நடுங்கா நாவி, னுரைமூ தாளன்" என்று முன்னும் வந்திருத்தல் காண்க; கஉ-ம் காதை, க - ச.

க0க. 'தேவிகேளாய்' என்பது முதலியன அறவணவடிகள் கூற்று. தவயாக்கை - தவவுடம்பு.

க0உ. வீழ்கதிர் - அஸ்தமிக்குஞ்சூரியன். மரணத்திற்குச் சூரியன் அஸ்தமித்தலை உவமைகூறுதல் பௌத்தநூன்மரபு. "சாக்கா டென்ப தருவுருத் தன்மை, யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்" (ந0-ம் காதை, க0உ க0ந) என இந்நூலிற் பின்பு வருதல் காண்க.

க0ந - க0ச. பிறப்புப்பிணிமூப்பிறப்புக்கள் உடலுக்கியற்கையென்றபடி.

க0ரு. க0அ. பேதைமை முதலிய பன்னிரண்டும் துவாதசநிதானமெனப்படும்; இவற்றினியல்பை, இந்நூல், ந0-ம் காதையால் விளங்கவுணர்க.

ககக. பேதைமை - அவிச்சை.

ககஉ. இவற்றை-துவாதசநிதானத்தை.

ககச. கோடு - கொம்பு.

ககக - ககச. பேதைமையென்பது மயங்கிக் கண்டதுமறந்து கேட்டது தெளிதலென்

ககரு. 'உலகமூன்றினும்' என்பது முதற் செய்கை கூறப்படும்.

ககரு - ககசு. உயிராமுலகம் அலகில உயிராகிய உலகம் அளவில்லாதன. செய்கை கூறுதற்கு அங்கமாக ஈண்டு அறுவகையுயிர்களும் கூறப்பட்டன.

ககசு - ககஅ. பேயுமென்றே அறுவகைத்தாகுமென்க.

மக்களுந் தேவரும் பிரமரு நரகருந்
தொக்க விலங்கும் பேயு மென்றே
நல்வினை தீவினை யென்றிரு வகையாற்
௧௨0 சொல்லப் பட்ட கருவினுட் டோற்றி
வினைப்பயன் விளையுங் காலை யுயிர்கட்கு
மனப்பே ரின்பமுங் கவலையுங் காட்டுந்
தீவினை யென்ப தியாதென வினவி
னாய்தொடி நல்லா யாங்கது கேளாய்
௧௨௫ கொலையே களவே காமத் தீவிழை
வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
௧௩0 றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றுமெனப்
பத்து வகையாற் பயன்றெரி புலவ
ரித்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
௧௩௫ நல்வினை யென்ப தியாதென வினவிற்
சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச்
சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரு மக்களும் பிரமரு மாகி

---

௧௨0. சொல்லப்பட்ட கரு - மேற்கூறிய மக்கட் கருமுதலிய ஆறும்; "தெய்வக்கருவுந் திசைமுகக் கருவும் (பதிகம், ௨அ.) என்று முன்புவந்திருத்தல் காண்க.

௧௧௭ - ௧௨௨. (செய்கை) யால் தோற்றிக் காட்டு மென்க.

௧௨௫. காமத்தீவிழைவு - காமமாகிய கொடிய விழைவு.

௧௨௫ - ௧௨௬. கொலையும் களவும் காமமுமென உடம்பிற்றோன்றுவன மூன்றும்.

௧௨௭. குறளை - கோள். பயனில் சொல் - அறம்பொருளின்பங்களுள் ஒன்றும் பயவாத சொல்.

௧௨௯. வெஃகல் - விரும்பல். வெகுளல் - கோபித்தல்; வெஃகல் முதலிய மூன்றும் முறையே காமம் வெகுளி மயக்கமெனப்படும்.

௧௩0. உருப்பன - தோன்றுவன.

௧௨௩-௧௩௧. தீவினையென்பது, மூன்றும் நான்கும் மூன்றுமெனப் பத்துவகைப்படும்.

௧௩௨. இத்திறம்-கொலைமுதலிய தீயவழிகளில். படரார் - செல்லார்.

௧௩௨ - ௧௩௪. இக்கருத்து "விலங்கு நரகரும பேய்களு மாக்குங், கலங்கஞர்த் தீவினை கடிமின்" எனப்பின்னும் வருதல் காண்க; ௨௫-ம் காதை, ௭௧-௭௨.

௧௩௬. சொல்லியபத்து-கொலை, களவு, காமம், பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல், வெஃகல், வெகுளல், பொல்லாக்காட்சியென்பன.

௧௩௭. சீலம் - பஞ்சசீலமுதலியன.

யாண்டுபல புக்கநும் மிணையடி வருந்தவென்
காண்டகு நல்வினை நும்மையீங் கழைத்தது
நாத்தொலை வில்லா யாயினுந் தளர்ந்து
க00 மூத்தவிவ் யாக்கை வாழ்கபல் லாண்டெனத்
தேவி கேளாய் செய்தவ யாக்கையின்
மேவினை ஞயினும் வீழ்கதிர் போன்றேன்
பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்றோ
ரிறந்தா ரென்கை யியல்பே யிதுகேள்
க0ரு பேதைமை செய்கை யுணர்வே யருவுரு
வாயி லூறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பய
னிற்றென வகுத்த வியல்பீ ராறும்
பிறந்தோ ரறியிற் பெரும்பே றறிகுவ
கக0 ரறியா ராயி னாழ்நர கறிகுவர்
பேதைமை யென்ப தியாதென வினவி
னோதிய விவற்றை யுணராது மயங்கி
யியற்படு பொருளாற் கண்டது மறந்து
முயற்கோ டுண்டெனக் கேட்டது தெளித
ககரு லுலக மூன்றினு முயிரா முலக
மலகில பல்லுயி ரறுவகைத் தாகு

கஎ. 'யாண்டு பலபுக்க' என்பது முதலியன இராசமாதேவிகூற்று. யாண்டு - வருடம்.

கஎ - கஅ. எனது நல்வினை இணையடி வருந்த நும்மை ஈங்கழைத்தது.

கக. நாத்தொலைவில்லாயாயினும் - நாமெலிதலில்லாயாயினும்; சொல்வன்மை குறைந்திலா யென்றபடி. 'நாத்தொலை வில்லை யாயினுங் கிளர்ந்து' என்றும் பாடம்.

க00. இவ்யாக்கையென்றது - அறவணவடிகளுடம்பை. 'மூத்ததிவ் யாக்கை' என்றும் பாடம். என - என்று இராசமாதேவிசொல்ல.

கக - க00. "நரைமுதிர் யாக்கை நடுங்கா நாவி, னுரைமூ தாளன்" என்று முன்னும் வந்திருத்தல் காண்க; கஉ-ம் காதை, ௩ - ௪.

க0க. 'தேவிகேளாய்' என்பது முதலியன அறவணவடிகள் கூற்று. தவயாக்கை - தவவுடம்பு.

க0உ. வீழ்கதிர் - அஸ்தமிக்குஞ்சூரியன். மரணத்திற்குச் சூரியன் அஸ்தமித்தலை உவமைகூறுதல் பௌத்தநூன்மரபு. "சாக்கா டென்ப தருவுருத் தன்மை, யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்" (௩0 - ம் காதை, க0உ க0௩) என இந்நூலிற் பின்பு வருதல் காண்க.

க0௩ - க0௪. பிறப்புப்பிணிமூப்பிறப்புக்கள் உடலுக்கியற்கையென்றபடி.

க0ரு. க0அ. பேதைமை முதலிய பன்னிரண்டும் துவாதசநிதானமெனப்படும்; இவற்றினியல்பை, இந்நூல், ௩0 - ம் காதையால் விளங்கவுணர்க.

கககக. பேதைமை - அவிச்சை.

ககஉ. இவற்றை-துவாதசநிதானத்தை.

கக௪. கோடு - கொம்பு.

ககக - கக௪. பேதைமையென்பது மயங்கிக் கண்டதுமறந்து கேட்டது தெளிதலென்க.

ககரு. 'உலகமூன்றினும்' என்பது முதற் செய்கை கூறப்படும்.

ககரு - ககசு. உயிராமுலகம் அலகில - உயிராகிய உலகம் அளவில்லாதன. செய்கை கூறுதற்கு அங்கமாக ஈண்டு அறுவகையுயிர்களும் கூறப்பட்டன.

ககசு - ககஅ. பேயுமென்றே அறுவகைத்தாகுமென்க.

மக்களுந் தேவரும் பிரமரு நரகருந்
தொக்க விலங்கும் பேயு மென்றே
நல்வினை தீவினை யென்றிரு வகையாற்
௧௨0 சொல்லப் பட்ட கருவினுட் டோற்றி
வினைப்பயன் விளையுங் காலை யுயிர்கட்கு
மனப்பே ரின்பமுங் கவலையுங் காட்டுந்
தீவினை யென்ப தியாதென வினவி
னாய்தொடி நல்லா யாங்கது கேளாய்
௧௨ கொலையே களவே காமத் தீவிழை
வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
௧௩0 றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றுமெனப்
பத்து வகையாற் பயன்றெரி புலவ
ரித்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக்
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
௧௩௫ நல்வினை யென்ப தியாதென வினவிற்
சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச்
சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரு மக்களும் பிரமரு மாகி

௧௨0. சொல்லப்பட்ட கரு - மேற்கூறிய மக்கட் கருமுதலிய ஆறும்; "தெய்வக்கருவுந் திசைமுகக் கருவும் (பதிகம், ௨௮.) என்று முன்புவந்திருத்தல் காண்க.

௧௧௭ - ௧௨௨. (செய்கை) இருவகையால் தோற்றிக் காட்டுமென்க.

௧௨௫. காமத்தீவிழைவு - காமமாகிய கொடிய விழைவு.

௧௨௫ - ௧௨௬. கொலையும் களவும் காமமுமென உடம்பிற்றோன்றுவன மூன்றும்.

௧௨௭. குறளை - கோள். பயனில் சொல் - அறம்பொருளின்பங்களுள் ஒன்றும் பயவாத சொல்.

௧௨௯. வெஃகல் - விரும்பல். வெகுளல் - கோபித்தல்; வெஃகல் முதலிய மூன்றும் முறையே காமம் வெகுளி மயக்கமெனப்படும்.

௧௩0. உருப்பன - தோன்றுவன.

௧௨௯ - ௧௩௧. தீவினையென்பது, மூன்றும் நான்கும் மூன்றுமெனப் பத்துவகைப்படும்.

௧௩௨. இத்திறம்-கொலைமுதலிய தீய வழிகளில். படரார் - செல்லார்.

௧௩௩ - ௧௩௪. இக்கருத்து "விலங்கு நரகரும் பேய்களு மாக்குங், கலங்கஞர்த் தீவினை கடிமின்" எனப்பின்னும் வருதல் காண்க; ௨௫-ம் காதை, ௬௧-௬௨.

௧௩௬. சொல்லியபத்து-கொலை, களவு, காமம், பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல், வெஃகல், வெகுளல், பொல்லாக்காட்சியென்பன.

௧௩௭. சீலம் - பஞ்சசீலமுதலியன.

கசு0 மேவிய மகிழ்ச்சி வினைப்பய னுண்குவ
ராசன் றேவியொ டாயிழை நல்லீர்
புரைதீர் நல்லறம் போற்றிக் கேண்மின்
மறுபிறப் புணர்ந்த மணிமே கலைநீ
பிறவறங் கேட்ட பின்னாள் வந்துனக்
கசுரு கித்திறம் பலவு மிவற்றின் பகுதியு
முத்தேர் நகையாய் முன்னுறக் கூறுவ
லென்றவ னெழுதலு மிளங்கொடி யெழுந்து
நன்றறி மாதவ னல்லடி வணங்கித்
தேவியு மாயமுஞ் சித்திரா பதியு
கரு0 மாதவர் நன்மொழி மறவா தும்மி
னிந்நகர் மருங்கின்யா னுறைவே னாயின்
மன்னவன் மகற்கிவள் வருங்கூற் றென்குவ
ராபுத் திரனா டடைந்ததற் பின்னாண்
மாசின் மணிபல் லவந்தொழு தேத்தி
கருரு வஞ்சியுட் புக்கு மாபத் தினிதனக்
கெஞ்சா நல்லறம் யாங்கணுஞ் செய்குவ
லெனக்கிட ருண்டென் றிரங்கல் வேண்டா
மனக்கினி யீரென் றவரையும் வணங்கி
வெந்துறு பொன்போல் வீழ்கதிர் மறைந்த
கசு0 வந்தி மாலை யாயிழை போகி
யுலக வறவியு முதியாள் குடிகையு
மிலகொளிக் கந்தமு மேத்தி வலங்கொண்
டந்தர மாறுப் பறந்துசென் றாயிழை

கசு0. மகிழ்ச்சிவினை - நல்வினை.
கசுரு - கசு0 :— ரு0 - ம் காதை, சரு - அக.
கசுக. ஆயிழை நல்லீரென்றது, மாதவியையும் சுதமதியையும் ஆயத்தையும்.
கசுஉ. புரை - குற்றம். நல்லறம் - அருளறம்.
கசுச. பிறவறம் - மற்றைச் சமயதருமம்.
கசுசு. 'முத்தொகை யாக முன்னர்க் கூறுவன்' என்றும் பாடம்.
கசுரு - கசுசு. இத்திறம் பலவுமிவற்றையும் இவற்றின்பகுதிகளையுங் கூறுவேன்.
கசுஎ. இளங்கொடி - மணிமேகலை.
கசுக:—உச - ம் காதை, அக.

கருரு. மாபத்தினிதனக்கு வஞ்சியுட் புக்கு - கண்ணகியைத்தரிசித்தற்பொருட்டு வஞ்சிநகரத்திற் புகுந்து.
கருஅ. அவரையும், உம் - இறந்தது தழீஇயது.
கசு0 அந்தி மாலையில்.
கசுக. முதியாள் குடிகை - சம்பாபதி கோயில். 'முதியாள்கோட்டமும்' என்றும் பாடம்.
கசுஉ. கந்தம் - தூண். என்றது கந்திற்பாவையை; ஆகுபெயர். "கலிகெழு கடவுள் கந்தங் கைவிட" என்பது புறநானூறு, ருஉ.
கசுங. அந்தரம் ஆறு - ஆகாயமேவழியாக.

யிந்திரன் மருமா னிரும்பதிப் புறத்தோர்
கசுரு பூம்பொழி லகவையி னிழிந்து பொறையுயிர்த்
தாங்குவாழ் மாதவ னடியிணை வணங்கி
யிந்நகர்ப் பேர்யா திந்நக ராளு
மன்னவன் யாரென மாதவன் கூறு
நாக புரமிது நன்னக ராள்வோன்
கஎ0 பூமிசந் திரன்மகன் புண்ணிய ராச
னீங்கிவன் பிறந்த வந்நாட் டொட்டு
மோங்குயர் வானத்துப் பெயல்பிழைப் பறியாது
மண்ணு மரனும் வளம்பல தருஉ
முன்னின் றுருங்கு நோயுயிர்க் கில்லெனத்
கஎரு தகைமலர்த் தாரோன் றன்றிறங் கூறின
னகைமலர்ப் பூம்பொழி லருந்தவன் றானென.

ஆபுத்திரனுடைடைந்தகாதை முற்றிற்று.

கசுச. இந்திரன்மருமான் - புண்ணிய ராசன்; மருமான் - வழிததோன்றல். பதி - நாகபுரம்.

கசுரு. அகவையின் - உள்ளிடத்தே.

கசுசு. மாதவன் - தருமசாவகன்.

கசுஅ யாரென - யாரென்று மணிமேகலை கேட்ப. கூறும் - சொல்லுவான்.

கஎக. தொட்டு - தொடங்கி.

கஎஉ. பெயல் - மழை. பிழைப்பு அறியாது - தவறுதலைபறியாது.

கஎங. தருஉம் - கொடுக்கும்.

கஎச. உயிர்களுக்கு நோயிலலை.

கஎரு. தாரோன் - புண்ணியராசன்.

கஎசு. அருந்தவன் - தருமசாவகன்.

க-கஎசு. தொன்முதுகணிகை கேட்டு வருந்தி வீழ்ந்து எழுந்து, 'தருக' என, இராசமாதேவி சங்கிலை சொல்வுழி, மாதவி அறவணவடிகளுடன் வர, காணடலும், எதிர்சென்று அவனையடிவணங்க, அவன், 'அறிவுண்டாக' என்றுகூறலும், இராசமாதேவி காட்டி விளக்கிச் செய்த பின், 'வாழ்க' என, 'தேவி கேளாய்; நமனீர், கேண்மின்; மணிமேகலை முன் னுறக்கூறுயல்' என்று அவனெழுதலும், இளங்கொடி எழுந்து வணங்கி என்று வணங்கிப் போகி எத்தி வலங்கொண்டு சென்று இழிந்து பொறையுயிர்த்து வண ங்கி, 'யாது? யாவர்' என, மாதவன் கூறும்; அங்ஙனங்கூறுமருந்தவன் கூறி னனென வினைமுடிவுசெய்க.

இருபத்தைந்தாவது

# ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்தகாதை.

[இருபத்தைந்தாவது மணிமேகலை ஆபுத்திரனை மணிபல்லவத்திடை
யழைத்துப் புத்தபீடிகைகாட்டிப் பிறப்புணர்த்தி
வஞ்சிமாநகர்புக்கபாட்டு.]

அரச னுரிமையோ டப்பொழில் புகுந்து
தரும சாவகன் றன்னடி வணங்கி
யறனு மறனு மநித்தமு நித்தத்
திறனுந் துக்கமுஞ் செல்லுயிர்ப் புக்கிலுஞ்
௫ சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியு
மாரிய னமைதியு மமைவுறக் கேட்டுப்
பெண்ணிணை யில்லாப் பெருவனப் புற்றாள்
கண்ணிணை யியக்கமுங் காமனோ டியங்கா
வங்கையிற் பாத்திரங் கொண்டறங் கேட்கு
௧௦ மிங்கிணை யில்லா ளிவள்யா ரென்னக்
காவலற் றொழுது கஞ்சுக னுரைப்போ

௧. அரசன் - புண்ணியராசன்; உரிமை - மனைவி; "உரிமைமுன் போக்கி யல்லா லொளிமுடி மன்னர் போகார்" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௨௪௩

௨. தருமசாவக னென்பது - அப்பொழிலில் நோற்றுவதியும் ஒரு முனிவன் பெயர். இப்பெயர்க்குத் தருமங்கேட்பவ னென்பது பொருள்.

௩. மறன் - பாவம். அநித்தம் - அநித்தியப்பொருளின்வகை.

௩-௪. நித்தத்திறன் - நித்தியப்பொருளின்வகை. துக்கம் - பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு, விரும்பியனபெறாமை, வேண்டாதனபெறுதல் என்னுமாறும். புக்கில் - புகுமிடம்.

௫. சார்பிற்றோற்றம் - பேதைமை முதலிய பன்னிரண்டு நிதானத்தினது தோற்றம். உய்தி-பிழைத்தல்; "செய்தி கொன்றோர்க் குய்தியில்" (புறநானூறு, ௩௪.) எனவும், "உய்திக் கால முறாயி ரோ" (சிலப்பதிகாரம்) நாடுகாண்காதை, ௨௪௦) எனவும் வருதல்காண்க.

௬. ஆரியன் - ஆசிரியன்; என்றது புத்தனை. 'அறிவுறக் கேட்டு' என்றும் பாடம்.

௭. பெருவனப்பு - பேரழகு.

௮. இயக்கம் - இயங்குதல்; இவ்வடியோடு "உருவிலாளனொ டுருவம் பெயர்ப்ப" (௫-ம் காதை, ௬.) என்று முன்வந்தது ஒப்புநோக்கற்பாலது.

௯. அறங்கேட்கும் - தருமத்தைக்கேட்பாள்.

௧௦. யாரென்ன - யாரென்று அரசன் கேட்ப.

௧ - ௧௦. அரசன், புகுந்து வணங்கிக் கேட்டு 'இவள்யார்' என்னவென்க.

௧௧. கஞ்சுகன் - சட்டையிட்ட பிரதானி.

கஞ்சுகன் மணிமேகலையின் வரலாற்

னுலகத் தீவினு நங்கையை யொப்பார்
யாவரு மில்லை யிவடிற மெல்லாங்
கிள்ளி வளவனொடு கெழுதகை வேண்டிக்
கரு கள்ளவிழ் தாரோய் கலத்தொடும் போகிக்
காவிரிப் படப்பை நன்னகர் புக்கேன்
மாதவ னறவண னிவள்பிறப் புணர்ந்தாங்
கோதின னென்றியா னன்றே யுரைத்தே
னுங்கவ ளிவளவ் வகனகர் நீங்கி
உ௦ யீங்கு வந்தன ளென்றலு மிளங்கொடி
நின்கைப் பாத்திர மென்கைப் புகுந்தது
மன்பெருஞ் செல்வத்து மயங்கினை யறியா
யப்பிறப் பறிந்திலை யாயினு மாவயிற்
றிப்பிறப் பறிந்திலை யென்செய் தனையோ
உரு மணிப்பல் லவம்வலங் கொண்டா லல்லது
பிணிப்புறு பிறவியின் பெற்றியை யறியா
யாங்கு வருவா யரசநீ யென்றப்
பூங்கமழ் தாரோன் முன்னர்ப் புகன்று
மையறு விசும்பின் மடக்கொடி யெழுந்து
ரு௦ வெய்யவன் குடபால் வீழா முன்னர்
வானின் றிழிந்து மறிதிரை யுலாவும்
பூநா றடைகரை யெங்கணும் போகி
மணிப்பல் லவம்வலங் கொண்டு மடக்கொடி

றை அரசனுக்குக் கூறுதல் இனிக் கூறப்படும்.

கரு. இவள் திறமெல்லாம் - இவளுடைய வரலாறு முழுதும்.

கச. கிள்ளிவளவனென்றது உதயகுமரன் தந்தையை. கெழுதகைமை-உரிமை; என்றது - நட்பை.

கரு. காவிரிப்படப்பை நன்னகர் - காவிரியைத் தோட்டக் கூற்றிற்கு எல்லையாகவுடைய காவிரிப்பூம்பட்டினம்; படப்பை - பக்கமுமாம்; "காவிரிப் படப்பைப் பட்டினம்" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, கருக.

கஅ. அன்றே - யான்போய்வந்த அக்காலத்தே.

கரு - கஅ. இவடிறமெல்லாம் அன்றே யுரைத்தேன்.

உ௦. இளங்கொடி - மணிமேகலை.

கக - உ௦. உனைப்போனுகிய கஞ்சுகன் 'ஈங்குவந்தனள்' என்றலும்.

உக. 'நின்கைப்பாத்திரம்' என்பது முதலியன, புண்ணியராசனைநோக்கி மணிமேகலைகூறுங்கூற்று. பாத்திரம் - அமுதசுரபி.

உஉ. செல்வத்து - செல்வத்தால்.

உ௩. அப்பிறப்பு - போனபிறப்பு; என்றது சாலிவயிற்றிற்பிறந்த பிறப்பை.

உரு. பிணிப்பு - பற்று. பெற்றி - தன்மை.

உஎ. ஆங்கு - மணிபல்லவத்திற்கு. நீ ஆங்கு வருவாயென்று.

உஅ. தாரோன் - புண்ணியராசன்.

உ௦ - உஅ. இளங்கொடி புகன்று.

உகூ. மடக்கொடி - மணிமேகலை.

ரு௦. குடபால் - மேற்றிசை.

ருக இழிந்து - இறங்கி.

பிணிப்பறு மாதவன் பீடிகை காண்டலுங்
௩௫ வலங்கொள்ளவத் தாமணிப பீடிகைப
பழுதில் காட்சி தன்பிறப் புணர்த்தக்
காயங் கரையெனும் பேரியாற் றடைகரை
மாயமின் மாதவன் றன்னடி பணிந்து
தருமங் கேட்டுத் தாதொழு தேத்திப்
௪0 பெருமகன் றன்னொடும் பெயர்வோர்க் கெல்லாம்
விலங்கு நரகரும் பேய்களு மாக்குங்
கலங்கஞர்த் தீவினை கடிமின் கடிந்தாற்
றேவரு மக்களும் பிரமரு மாகுதி
ராகலி னல்வினை யயரா தோம்புமின்
௪௫ புலவன் முழுதும் பொய்யின் றுணர்ந்தோ
னுலகுயக் கோடற் கொருவன் றோன்று
மந்நா ளவனறங் கேட்டோ ரல்ல
தின்னாப் பிறவி யிழுக்குந ரில்லை
மாற்றருங் கூற்றம் வருவதன் முன்னம்
௫0 போற்றுமி னறமெனச் சாற்றிக் காட்டி

௩௪. மாதவன்பீடிகை - புத்தபீடிகை.
உ௯ - ௩௪. படக்கொடி எழுந்து இழிந்து போகி வலங்கொண்டு காண்டலு மென்க.
௩௬. பழுது - குற்றம்.
௩௫-௩௬. பீடிகைக்காட்சி உணர்த்த.
௩௭. அடைகரை - அடை‹

௩௮. மாதவன் - பிரமதருமன்.
௩௯. ‘தருமங்கேட்டு’ என்பது முதலியன, பிரமதருமனை முன்னிலையாக்கி, மணிமேகலை கூறுங்கூற்று.
௪0. பெருமகன் - அரசன்; என்றது அத்திபதியை. பெயர்வோர்க்கெல்லாம்- அவந்நகரத்திற்குச் செல்வோ ரெல்லோருக்கும்.
௪உ. கலங்கஞர்த்தீவினை - கலங்குதற்குக் காரணமாகிய துன்பத்தையுண்டாக்கும் கொலைமுதலிய பத்துவகையினதாகிய பாவத்தை.
௪௪. நல்வினை - கொல்லாமைமுதலிய பத்துவகையினதாகிய புண்ணியத்தை. அயராது ஓம்புமின் - மறவாது பாதுகாத்திடுமின்.
௪௫. புலவன் - ஞானி; புத்தனென்பது இப்பொருட்டு. முழுதும் பொய்யின் றுணர்ந்தோன் - ஸர்வஜ்ஞன்.
௪௬. உலகுயக்கோடற்கு - உலகைப் பிழைப்பித்தற்பொருட்டு; ஏகதேவனென்பது புத்தன்பெயர்களுள் ஒன்றாதலின், இங்கே ஒருவனென்றார்.
௪௫ - ௪௬. புலவனும் உணர்ந்தோனுமாகிய ஒருவன் உலகை உயக்கோடற்குத் தோன்றுமென்க.
௪௭. அவனறம் - அவனாற் கூறப்படும் அறம்.
௪௮. இன்னாமை - துன்பம். இழுக்குநரில்லை - தப்புவோரில்லை.
௪௯. மாற்றருங்கூற்றம் - பிறரால் தடுத்தற்கரிய கூற்றம்; "மாற்றருங் கூற்றம்" என்பது தொல்காப்பியம், புறத்திணையியல், உ௪; "மருந்தில் கூற்றம்" என்பர், இரும்பிடர்த்தலையார்; புறநானூறு, ௩.
௫0. அறம்போற்றுமினென்று, சாற்றிக்காட்டி - சொல்லிப் பொருளைவிளங்கச்செய்து; சாற்றி - நிறைத்தென்றுமாம்; "நிவந்துசெ னீத்தங் குளங்கொளச் சாற்றி" என்பது மதுரைக்காஞ்சி, உ௪௯.

நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்தீ
ரவ்வுரை கேட்டுநும் மடிதொழு தேத்த
வெவ்வுரை யெங்கட்கு விளம்பினி ராதலிற்
பெரியவன் றோன்று முன்னரிப் பீடிகை
கரியவ னிட்ட காரணந் தானு
மன்பெரும் பீடிகை மாய்ந்துயிர் நீங்கிய
வென்பிறப் புணர்ந்தது மென்னென் றியான்றொழ
முற்ற வுணர்ந்த முதல்வனை யல்லது
மற்றப் பீடிகை தன்மிசைப் பொறாஅது
௬0 பீடிகை பொறுத்த பின்னா ளல்லது
வானவன் வணங்கான் மற்றவ் வானவன்
பெருமகற் கமைத்துப் பிறந்தார் பிறவியைத்
தரும பீடிகை சாற்றுக வென்றே
யருளின னாதலி னாயிழை பிறவியு
௬௫ மிருளறக் காட்டு மெனவெடுத் துரைத்த
தன்றே போன்ற தருந்தவர் வாய்மொழி
யின்றெனக் கென்றே யேத்தி வலங்கொண்
டுங்கிவ ளின்னண மாக விறைவனு
மாங்கப் பொழில்விட் டகனகர் புக்குத்

௫௧. நாவே கடிப்பாக வாயாகியபறையை அறைந்தீர்; கடிப்பு - பறையடிக்குங் குறுந்தடி; "நாக்கடிப் பாக வாய்ப் பறை யறையினும்" என்பது சிலப்பதிகாரம், ஊர்காண்காதை, ௨௩.

௫0 - ௫௧. பெயர்வோர்க்கெல்லாம் சாற்றிக்காட்டி அறைந்தீரெனவியைக்க.

௫௩. வெவ்வுரை - பதினாறுநாளில் இராகுலன் திட்டிவிடமென்னும் பாம்பாலிறப்பானென்றும், நீ அவனோடு தீயில் மூழ்குவையென்றுஞ் சொன்ன சொற்கள். இதனை, இந்நூல் ௯ - ம் காதை, ௪௮-ம் அடிமுதலியவற்றாலுணர்க.

௫௪. பெரியவன் - புத்தன்; பீடிகை - பீடிகையை.

௫௫ கரியவன் - இந்திரன்; "தேவர்கோ னிட்ட மாமணிப் பீடிகை" என்று முன்பு வந்திருத்தல்காண்க; அ - ம் காதை, ௫௨.

௫௫ - ௫௭. காரணந்தானும் உணர்ந்தற்குக் காரணமும் என்னவென்று யான் தொழ.

௫௮. முற்றவுணர்ந்த முதல்வன் - எல்லாமறிந்தமுதல்வன்; ஸர்வஜ்ஞன்.

௫௯. பொறாஅது - சுமவாது; முற்று.

௬௧. வானவன் - இந்திரன்.

௬௨. பெருமகற்கமைத்து - புத்தனை அறிந்து கோடற்பொருட்டு இயற்றி. பிறந்தார்பிறவியை - பிறந்தோருடைய பழம்பிறப்பின் செய்தியை.

௬௩. சாற்றுக - உணர்த்துக.

௬௪. அருளினன்-ஆணைதந்தான். ஆயிழைபிறவியும் - உன்பிறவியையும்.

௬௧ - ௬௪. அவ்வானவன் அமைத்துச் சாற்றுகவென்று அருளினனென்க.

௬௫. இருளற - மயக்கமற.

௬௬. அருந்தவர்-முன்னிலைக்கண் வந்தது.

௬௫ - ௬௬. அன்று உரைத்ததாகிய வாய்மொழி.

௬௬ - ௬௭. எனக்கு வாய்மொழி இன்றைக்குரைத்தது போன்றதென்று.

௬௮ இவள் - மணிமேகலை; இன்னண

எ0 தந்தை முனியாத் தாய்பசு வாக
வந்த பிறவியு மாமுனி யருளாற்
குடர்த்தொடர் மாலை சூழா தாங்கோ
ரடர்ப்பொன் முட்டையு ளடங்கிய வண்ணமு
மாமுனி யருளான் மக்களை யில்லோன்
எரு பூமிசந் திரன்கொடு போந்த வண்ணமு
மாய்தொடி யரிவை யமரசுந் தரியெனுந்
தாய்வாய்க் கேட்டுத் தாழ்துய ரெய்தி
யிறந்த பிறவியின் யாய்செய் ததூஉம்
பிறந்த பிறவியின் பெற்றியு நினைந்து
அ0 செருவேன் மன்னர் செவ்விபார்த் துணங்க
வாசுவீற் றிருந்து புரையோர்ப் பேணி
நாடகங் கண்டு பாடற் பான்மையிற்
கேள்வி யின்னிசை கேட்டுத் தேவிய
ரூடற் செவ்வி பார்த்துநீ டாது
அரு பாடகத் தாமரைச் சீறடி பணிந்து
தேமரு கொங்கையிற் குங்கும மெழுதி
யங்கையிற் றுறுமலர் சுரிகுழற் சூட்டி
நறுமுகை யமிழ்துறாஉந் திருநகை யருந்தி

---

ணமாக - இப்படி இங்கேயிருக்க. இறைவன் - புண்ணியராசன்.

எ0. முனி-மண்முகமுனிவன்; கடு-ம் காதை, ௬.

எக. அடர் - தகடு.

௬உ - எக:—கடு - ம் காதை, கூ-கச.

௬௧ - எக. அருளால் அடங்கியவண்ணமும்.

௬டு. பூமிசந்திரன் - நாகபுரத்தரசன்.

௬௪ - ௬டு. இல்லோனாகிய பூமிசந்திரன்.

௬கூ. அமரசுந்தரி - பூமிசந்திரன்

௬அ - ௭௭. இறைவனும் விட்டுப் புக்குப் பிறவியும் அடங்கியவண்ணமும் போந்தவண்ணமும் கேட்டுத் துயரெய்தியென்க.

எஅ இறந்தபிறவி - போனபிறப்பு. யாய் - தாய்; என்றது சாலியை. இறந்த பிறப்பின் செய்தியை மணிமேகலையா துணர்ந்தாள்போலும்.

எகூ. -பேறு; என்றது பசு

அ0. செவ்வி - தம் குறைகூறுதற் கேற்ற மனமொழிமெய்கள் இனியனாங் காலம். உணங்க - வாட.

அக. வீற்றிருந்து - கவலையின்றி யிருந்து; செம்மாந்திருந்தென்றுமாம். புரையோர்ப்பேணி - பெரியோரை வழிபட்டு; அமைச்சர் புரோகிதர்களை விரும்பித் துணைக்கொண்டென்றுமாம்.

அச. ஊடல் - பிணங்கல்; 'வழக்காட்டு' என்பர், புறப்பொருள்வெண்பாமாலை உரையாசிரியர். நீடாது - தாழாது.

அரு. பாடகம் - ஒருவகைக்காலணி.

அகூ. குங்குமம் - குங்குமச்சாந்து.

அஎ. அங்கையின் -அகங்கையினாலே. துறுமலர் - நெருங்கிய மலர். அங்கையிற்சூட்டி.

அஅ. முகை - அரும்பு; நறுமுகைபோலுந் திருநகை. 'அமிழ்தூறு திருநகை' என்றும் பாடம்.

மதிமுகக் கருங்கட் செங்கடை கலக்கக்
௯௦ கருப்பு வில்லி யருப்புக்கணை தூவத்
தருக்கிய காமக் கள்ளாட் டிகழ்ந்து
தூவறத் துறந்த னன்றெனச் சாற்றித்
தெளிந்த நாதனென் செவிமுத லிட்டவித்
தேத மின்றா யின்று விளைந்தது
௯௫ மணிமே கலைதன் காரண மாகவென்
றணிமணி நீண்முடி யரசன் கூற
மனம்வே றாயினன் மன்னென மந்திரி
சனமித் திரனவன் றன்னொடு தேத்தி
யெங்கோ வாழி யென்சொற் கேண்மதி
௧௦௦ நுங்கோ னுன்னைப் பெறுவதன் முன்னாட்
பன்னீ ராண்டிப் பதிகெழு நன்னாடு
மன்னுயிர் மடிய மழைவளங் கரந்தீங்
கீன்றாள் குழவிக் கிரங்கா ளாகித்
தான்றனி தின்னுந் தகைமைய தாயது
௧௦௫ காய்வெங் கோடையிற் கார்தோன் றியதென
நீதோன் றினையே நிரைத்தா ரண்ணல்
றோன்றிய பின்னர்த் தோன்றிய வுயிர்கட்கு
வானம் பொய்யாது மண்வளம் பிழையா

௯௦. கருப்புவில்லி - மன்மதன். 'கருப்புவி லநங்கன்' என்றும் பாடம். அருப்புக்கணை - மொட்டாகுமலராகிய அம்பு. வில்லி கணையைத்தூவ.

௯௧. காமக்கள்ளாட்டு - காமமாகிய கள்ளையுண்டு விளையாடும் விளையாட்டு; "காமங் கள்ளாட் டடங்கினர் மயங்க" என்பது சிலப்பதிகாரம், அழற்படுகாதை, ௧௨௭.

௮௨ - ௯௧. 'நாடகங் கண்டு' என்பது முதலியன காமக்கள்ளாட்டிற்கு அடை.

௯௨. தூவறத்துறத்தல் - பற்றுக்கோடறத்துறத்தல்; 'துவரத்துறத்தல்' என்றும்பாடம்.

௯௩. நாதன் - தருமசாவகன். முதல் - இடம். வித்து - அவன்கூறிய உபதேசமொழி.

௯௪. ஏதமின்றாய் - குற்றமில்லாமல்.

௯௬. நீண்முடி - தொன்றுதொட்டுவந்தமுடி; குலத்தின்பெருமை கூறியவாறு; "நெடுமுடிக் குரிசில்" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், உகரு.
அரசன் - புண்ணியராசன்.

௯௫ - ௯௬. வித்து, மணிமேகலைதன் காரணமாக இன்று விளைந்ததென்று அரசன்கூற.

௯௭ - ௯௮. அரசன் துயரெய்தி நினைந்து இகழ்ந்து சாற்றிக் கூறவென்க.
மேல்வருவன, சனமித்திரனென்னு மந்திரிகூற்று.

௯௭. மன் - அரசன்.

௯௯. கேண்மதி - கேள்; மதி - முன்னிலையசை.

௧௦௦. நுங்கோன் - பூமிசந்திரன். 'நுங் கோனின்னை' என்றும பாடம்.

௧௦௧. இப்பதி கெழு நன்னாடு - இந்நகரத்தினையுடைய நல்ல சாவகநாடு.

௧௦௨. கரந்து - மறைந்து.

௧௦௩ - ௧௦௪:—௧௪-ம் காதை, ருரு-௬௪.

௧௦௩. ஈன்றாள் - தாய்.

௧௦௩ - ௧௦௪. நாடு தகைமையுதாயது.

௧௦௮. பிழையாது - தப்பாது.

தானுடை யுயிர்க ளுறுபசி யறியா
கக0 நீயொழி காலை நின்னா டெல்லாந்
தாயொழி குழவி போலக் கூஉந்
துயர்நிலை யுலகங் காத்த லின்றிநீ
யுயர்நிலை யுலகம் வேட்டனை யாயி

ககரு பெறுதி விரும்பினை யாகுவை யன்றே
தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு
மன்னுயிர் முதல்வ னறமுமி தன்றான்
மதிமா றோர்ந்தனை மன்னவ வென்றே
முதுமொழி கூற முதல்வன் கேட்டு
கஉ0 மணிபல் லவம்வலங் கொள்வதற் கெழுந்த
தணியா வேட்கை தணித்தற் கரிதா
லரசு முரிமையு மகநகர்ச் சுற்றமு
மொருமதி யெல்லை காத்தனின் கடனெனக்
கலஞ்செய் கம்மியர் வருகெனக் கூஉ
கஉரு யிலங்குநீர்ப் புணரி யெறிகரை யெய்தி
வங்க மேறினன் மணிபல் லவத்திடைத்

க0கூ. உயிர்கள் அறியா.

கக0. நீ ஒழிகாலை-நீ நீங்கியபொழுது.

ககக. கூஉம் - கூப்பிடும்; முற்று.

கக0 - ககக:—"தாயி றூவாக் குழவி போல, வோவாது கூஉம்" என்பது புறநானூறு, ச; "புன்கண் கொள்ளனீ போக்நதற் கிரங்கிநின், மன்பெரு நன்றூடு வாயெடுத் தழைக்கும்" என்று இக்காதையிலேயே பின்பு வருதல்காண்க; உகூச - உகூஎ.

ககௗ. உயர்நிலையுலகம் - நிருவாணம்; "வானென்னும் வைப்பு" (திருக்குறள், உச.) என்று வந்திருத்தல்காண்க. வேட்டனையாயின் - விரும்பினுயாயின்.

ககச. இறுதி - மரணம். உயிர்கள் இறுதியெய்தவும்.

ககரு. பெறுதி - இலாபம்.

ககௗ - ககரு. வேட்டனையாயின் விரும்பினையாகுவை.

ககசா. தன்னுயிர்க்கு - தன்னுயிர் வருந்துதற்கு. ஓம்பும் - பாதுகாக்கும். மன்னுயிர்முதல்வன் - புத்தன். அறம் - காருணியம். இது நீ துறந்து நிருவாணமடைதற்கெண்ணியது. இது முதல்வனறமுமன்று.

ககசா - ககஎ. புத்தனை, 'பரதுக்கதுக்கன்' (சிவஞானசித்தியார், பரபக்கம், சௌத்திராந்திகன்மதம்) என்று கூறியிருத்தல்காண்க.

ககஅ. மதி மாறோர்ந்தனையென்றான்; பிறவுயிர்களின் வருத்தத்தை நீக்கக்கருதாது தன்பயனைக்கருதித் துறத்தற்கு எண்ணினமையால்

கககூ. முதல்வன் - புண்ணியராசன்.

கூஅ - கககூ. சனமித்திரன், மன்மனம் வேறாயினனென்று தொழுதேத்தி முதுமொழிகூற.

கஉகூ. மதி - மாதம்.

கஉச. கலஞ்செய் கம்மியர்-கப்பலில் தொழில்செய்வோர்; "கலம்புணர் கம்மியர்" (எ-ம் காதை, எ0.) என்று முன்புவந்திருத்தல் காண்க.

கஉரு. புணரி - கடல்.

கககூ - கஉசா. முதல்வன் அம்மொழியைக்கேட்டுக் காத்தல் நின்கடனெனக் கூறிக் கூஉய் எய்தி ஏறினனென்க.

தங்கா தக்கலஞ் சென்றுசார்ந் திறுத்தலும்
புரைதீர் காட்சிப் பூங்கொடி பொருந்தி
யரசன் கலமென் றகமகிழ் வெய்திக்
௧௩0 காவலன் றன்னொடுங் கடற்றிரை யுலாவுந்
தேமலர்ச் சோலைத் தீவகம் வலஞ்செய்து
பெருமகன் காணாய் பிறப்புணர் விக்குந்
தரும பீடிகை யிதுவெனக் காட்ட
வலங்கொண் டேத்தினன் மன்னவன் மன்னவற்
௧௩௫ குலந்த பிறவியை யுயர்மணிப் பீடிகை
கையகத் தெடுத்துக் காண்போர் முகத்தை
மையறு மண்டிலம் போலக் காட்ட
வென்பிறப் பறிந்தே னென்னிடர் தீர்ந்தேன்
றென்றமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்
௧௪0 மாரி நடுநாள் வயிறுகாய் பசியா
லாரிரு ளஞ்சா தம்பல மணைந்தாங்
கிரந்தூண் வாழ்க்கை யென்பால் வந்தோர்க்
கருந்தூண் காணா தழுங்குவேன் கையி
னுடுவறங் கூரினு மிவ்வோடு வறங்கூரா
௧௪௫ தேடா வழிய வெழுந்தினிது கொள்கென
வமுத சுரபி யங்கையிற் றந்தென்
பவமறு வித்த வானோர் பாவாய்

௧௨௭. தங்காது-இடையே தங்காமல். இறுத்தலும் - தங்கலும்.

௧௨௮. புரை - குற்றம். காட்சி - அறிவு. பூங்கொடி - மணிமேகலை.

௧௩0-௧௩௧. காவலன் றன்னொடும் வலஞ்செய்து.

௧௩௨. பெருமகன் - அரசன்; அண்மைவிளி.

௧௨௮ - ௧௩௧. பூங்கொடி பொருந்தி மகிழ்வெய்தி வலஞ்செய்து காட்ட.

௧௩௫. உலந்தபிறவி-போனபிறப்பில் நிகழ்ந்த செய்தியை.

௧௩௭. மையறுமண்டிலம்-குற்றமற்ற கண்ணாடி; "வயக்குறு மண்டிலம்" என்பது கலித்தொகை, ௨௫.

௧௩௫ - ௧௩௭. மண்டிலம்போலப் பீடிகை உலந்தபிறவியைக் காட்ட.

மேல்வருவன, பழம்பிறப்புணர்ந்த புண்ணியராசன் கூற்று.

௧௩௯. கலை - வித்தை.

௧௪0. மாரிநடுநாள் - மழையையுடைய நடுஇரவில்.

௧௪௨. இரந்துண்ணுமுணவையே வாழ்க்கைப்பொருளாகவுடைய என்பால்வந்தோர் பொருட்டு.

௧௪௩. அழுங்குவேன்-வருந்துவேன்; பெயர்.

௧௪௫. 'தேடாபரியல்' என்றும்பாடம்.

௧௪௪ - ௧௪௫:—௧௪ - ம் காதை, ௧௨-௧௩.

௧௪௬. அங்கையின் - அழகிய கையினால்.

௧௪௭. பவம் - கருமக்கூட்டம்.

௧௩௩ - ௧௪௭. இவ்வடிகளிற்கூறப்பட்டுள்ள சரித்திரத்தை, இந்நூலில் ௧௪ - ம் காதை, ௩ - ம் அடி முதலியவற்றால் உணர்க.

யுணர்விற் றோன்றி யுரைப்பொரு ளுணர்த்து
மணிதிகழ் அவிரொளி மடந்தை
கடுO தேவ ராயினும் பிரம ராயினு
நாமாசு கழூஉ நலங்கிளர்
பிறந்த பிறவிகள் பேணுத லல்லது
மறந்து வாழேன் மடந்தையென் றேத்தி
மன்னவன் மணிமே கலையுட னெழுந்து
௧ தென்மேற் காகச் சென்று திரையுலாங்
கோமுகி யென்னும் பொய்கையின் கரையோர்
தூமலர்ப் புன்னைத் துறைநிழ லிருப்ப
வாபுத் திரனோ டாயிழை யிருந்தது
காவற் றெய்வதங் கண்டுவந் தெய்தி
கசுO யருந்துயிர் மருந்துமு னங்கையிற் கொண்டு
பெருந்துயர் தீர்த்தவப் பெரியோய் வந்தனை
யந்நா ளின்னை யயர்த்துப் போயினர்
பின்னாள் வந்துநின் பெற்றிமை நோக்கி
நின்குறி யிருந்து தம்முயிர் நீத்தோ
கசுரு ரொன்பது செட்டிக ளுடலென் பிவைகா
ரிடவுண் டவருடன் வந்தோ

கசஅ. உரைப்பொருள் - சொற்பொருள்.

கசகூ. மணி - பளிங்கு; "மணிமருடெண்ணீர்" என்பது மலைபடுகடாம், உ௫௦; முத்துமாம்.

க௫க. நாமாசு-நாக்குற்றம். கழூஉம்-போக்கும். 'நாமுறை புகழ்ந்த நலந்திகழ் திருந்தடி' என்றும் பாடம்.

க௫உ. பிறவிகள் - பிறவிகள்தோறும். பேணுதல் - உட்கொண்டு வழிபடுதல்.

க௫௫. மடந்தை - விளி.

கசகூ - க௫௫. நின்னடிகளைப் பிறவிகடோறும் பேணுதலல்லது மறவேன்.

க௫௬. உலாம் - உலாவும்.

க௫சு. கரை - கரையில்.

க௫௫ - க௫எ. மன்னவன் ஏத்தி எழுந்து சென்று கரையில் நிழலில் இருப்ப

க௫அ. 'ஆயிழை தன்னை' என்றும்பாடம்.

க௫கூ. தெய்வதம் - தீவதிலகை.

கசுO. 'அருந்துயிர் மருந்து' என்பது முதலியன, தீவதிலகை புண்ணியராசனை நோக்கிக்கூறும் கூற்று. உயிர்மருந்து-சோறு.

கசுக. பெருந்துயர் - பசித்துயர். வந் - வந்தாய்.

கசுஉ. அந்நாள்-போனபிறப்பில் மதுரையிலிருந்து கப்பல்வழியேவந்து இத்தீவத்தை அடைந்த அந்நாளில். அயர்த்து - மறந்து. போயினர் - வினையெச்சமுற்று.

கசுரு. பெற்றிமை-தன்மை. என்றது உண்ணோநோன்போ டுயிர்பதிப்பெயர்த்தமை; கச - ம் காதை, கூ௫.

கசுச. நின்குறியிருந்து - நீஇறந்தவிடத்து உண்ணா நோன்புடனிருந்து; குறி-இடம்.

கசுசு. ஆங்கவரிடவுண்டு-அவ்வொன்பது செட்டிகளும் உணவளிக்கவுண்டு. 'ஆங்கவர் மடவா ரவருடன் வந்தோர்' என்றும் பாடம்.

ரேங்கிமெய் வைத்தோ ரென்பு மிவைகா
ணூர்திரை தொகுத்த வுயர்மணல் புதைப்ப
வாய்மலர்ப் புன்னை யணிநிழற் கீழா
கஎ0 லன்புடை யாருயி ரரசற் கருளிய
வென்புடை யாக்கை யிருந்தது காணாய்
நின்னுயிர் கொன்றாய் நின்னுயிர்க் கிரங்கிப்
பின்னாள் வந்த பிறருயிர் கொன்றாய்
கொலைவ னல்லையோ கொற்றவ னாயினை
கஎரு பலர்தொழு பாத்திரங் கையி னேந்திய
மடவர லல்லாய் நின்றன் மாநகர்
கடல்வயிறு புக்கது காரணங் கேளாய்
நாக நன்னா டாள்வோன் றன்மகள்
பீலிவளை யென்பாள் பெண்டிரின் மிக்கோள்
கஅ0 பனிப்பகை வானவன் வழியிற் றோன்றிய
புனிற்றிளங் குழவியொடு பூங்கொடி பொருந்தியித்
தீவகம் வலஞ்செய்து தேவர்கோ னிட்ட
மாபெரும் பீடிகை வலங்கொண் டேத்துழிக்
கம்பளச் செட்டி கலம்வந் திறுப்ப

கசுஎ. மெய்வைத்தோர் - உயிர்நீங்கி [illegible].

கசுஅ. ஊர்திரை தொகுத்த - பரந்த அலைகள் திரட்டிய. 'ஊதை யீட்டிய வுயர்மணல்' என்றம்பாடம்.

கசுகூ. ஆய்மலர்-அழகியமலர். கீழால்-கீழிடத்தே ; உருபுமயக்கம்.

கஎ0. அன்பையுடைய அரியவுயிரை உனக்குக் கொடுத்த. ஆருயிரென்றது, ஈண்டு விஞ்ஞானஸ்கந்தத்தை.

கஎக. காணாய் - பாராய்.

கஎ0-கஎக. இவ்வடிகளோடு, "அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க், கென்போ டியைந்த தொடர்பு." என்னும் எரு - ம் திருக்குறள் ஒப்புநோக்கற்பாலது.

கசுஅ - கஎக. புதைப்பக் கீழால் யாக்கையிருந்தது காணாயென்க.

கஎச. கொலைவன் - கொல்லுதலைச் செய்பவன் ; "கொலைவன் யார்கொலோ கொலைவன் மற்றிவன்" என்பது புறநானூ, கருஉ.

கஎஉ - கஎச. 'நின்னுயிர் கொன்றாய்' என்பது முதலியன வஞ்சப்புகழ்ச்சி.

கஎரு. 'பலர்தொழுபாத்திரம்' என்பது முதலியன, தீவதிலகை மணிமேகலையைநோக்கிக் கூறுங்கூற்று.

கஎசு. நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

கஎசு - கஎஎ. நகர் கடலிலழுந்திற்று.

கஎஅ. நாக நன்னாடாள்வோன் - வளைவணன்.

கஅ0. பனிப்பகைவானவன்-சூரியன். வழி - பரம்பரை.

கஅக. பூங்கொடி - பீலிவளை.

கஅ0 - கஅக. பூங்கொடிபொருந்தியதனை, இந்நூல் உச - ம் காதையில் உகூ-ம் அடிமுதலியவற்றாலுணர்க.

கஅக - கஅஉ. இத்தீவகமென்றது - மணிபல்லவத்தை.

கஅங. பீடிகை - புத்தபீடிகை. ஏத்துழி - துதிக்குமிடத்து.

கஎஅ-கஅங. மகள் என்பாள் மிக்கோள் பூங்கொடி குழவியொடுபொருந்தி வலஞ்செய்து வலங்கொண்டு ஏத்துழியென்க.

கஅச. இறுப்ப - தங்க.

௧௮௫ வங்கவன் பாற்சென் றவன்றிற மறிந்து
கொற்றவன் மகனிவன் கொள்கெனக் கொடுத்தலும்
பெற்ற வுவகையன் பெருமகிழ் வெய்திப்
பழுதில் காட்சிப் பைந்தொடி புதல்வனைத்
தொழுதனன் வாங்கித் துறைபிறக் கொழியக்
௧௯0 கலங்கொண்டு பெயர்ந்த வன்றே காரிரு
ளிலங்குநீ ரடைகரை யக்கலங் கெட்டது
கெடுகல மாக்கள் புதல்வனைக் கெடுத்தது
வடிவேற் கிள்ளி மன்னனுக் குரைப்ப
மன்னவன் மகனுக் குற்றது பொறாஅ
௧௯௫ னன்மணி யிழந்த நாகம் போன்று
கானலுங் கடலுங் கரையுந் தேர்வுழி
வானவன் விழாக்கோண் மாநக ரொழிந்தது
மணிமே கலாதெய்வ மற்றது பொறாஅ
ளணிநகர் தன்னை யலைகடல் கொள்கென
௨00 விட்டனள் சாபம் பட்ட திதுவாற்
கடவுண் மாநகர் கடல்கொளப் பெயர்ந்த
வடிவேற் றடக்கை வானவன் போல
விரிதிரை வந்து வியனகர் விழுங்க
வொருதனி போயின னுலக மன்னவ
௨0௫ னருந்தவன் றன்னுட னாயிழை தாயரும்
வருந்தா தேகி வஞ்சியுட் புக்கனர்
பரப்புநீர்ப் பௌவம் பலர்தொழக் காப்போ
னுரைத்தன கேட்க வுறுகுவை யாயினின்

௧௮௫. அவன்றிறம் - அவன் காவிரிப் பூம்பட்டினத்திற்குச் செல்லுதலை.
௧௮௬. கொடுத்தலும் (பீலிவளை) கொடுத்தலும்.
௧௮௯. தொழுதனன்வாங்கி - தொழுது வாங்கி; க - ம் காதை, ௨0. பிறக கொழிய - பின்னொழிய.
௧௯0. இருள் - இருளில்.
௧௯௨. கெடுத்தது - இழந்தசெய்தியை.
௧௯௪. உற்றது பொறாஅன் - உண்டான துன்பத்தைப் பொறாமல்.
௧௯௫:—எ - ம் காதை, ௯௯.
௧௯௬. தேர்வுழி - தேருமிடத்து. 'கானலும் பொழிலும்' என்றும்பாடம்.
௧௯௭. வானவன் விழாக்கோள் - இந்திரவிழாவெடுத்தலை.

௧௯௯ - ௧௯௭. தேர்வுழி ஒழிந்தது.
௨00. பட்டது - உண்டானசெய்தி.
௨0௧ - ௨0௨. (?)
௨0௪. ஒருதனி - துணையின்றி. மன்னவன் -
௨0௫. அருந்தவன் - அறவணவடிகள். ஆயிழைதாயர் - உன் தாயர்; என்றது மாதவியையும் சுதமதியையும்.
௨0௭. பௌவம்-கடல். காப்போன்-மணிமேகலாதெய்வம். பலர்தொழப்பௌவத்தைக்காப்போனென்க.
௨0௮. உரைத்தன-சொல்லப்பட்டன; முற்று.
௨0௭ - ௨0௮. மேற்கூறிய செய்திகள், காப்போளால் எனக்கு உரைக்கப்பட்டனவென்க. இனி, 'உரைத்தன' என்ப

மன்னுயிர் முதல்வனை மணிமே கலைதெய்வ*
உக0 முன்னா ளெடுத்தது மக்கா லாங்கவ
னறவா சாண்டது மறவணன் றன்பான்
மறுபிறப் பாட்டி வஞ்சியுட் கேட்டபெயன்
றந்தாத் தீவகத் தருந்தெய்வம் போயபின்
மன்னவ னிரங்கி மணிமே கலையுடன்
உகரு றுன்னிய தூமண லகழத் தோன்றி
யூன்பிணி யவிழவு முடலென் பொடுங்கித்
தான்பிணி யவிழாத் தகைமைய தாகி
வெண்சுதை வேய்ந்தவ ணிருக்கையி னிருந்த
பண்புகொள் யாக்கையின் படிவ நோக்கி
உஉ0 மன்னவன் மயங்க மணிமே கலையெழுந்
தென்னுற் றனையோ விலங்கிதழ்த் தாரோய்
நின்னா டுடைந்தியா னின்னையீங் கழைத்தது
மன்னா நின்றன் மறுபிறப் புணர்த்தி
யந்தாத் தீவினு மகன்பெருந் தீவினு
உஉரு நின்பெயர் நிறுத்த நீணில மாளு
மாசர் தாமே யருளறம் பூண்டாற்
பொருளு முண்டோ பிறபுரை தீர்த்தற்

தைப்பெயராக்கி, 'கேட்கவுறுகுவைபா யின்' என்பதனோடு கூட்டிப் பொருளுரைப்பினும் பொருந்தும்.

உ0அ - உ0௯. நின்மன்னுயிர் முதல்வனென்றது - கோவலன்மரபில் முற்பட்டானொருவனைக்கனை.

உக0. முன்னாள் - மரக்கலமுடைந்த அக்காலத்தில்.

உகக. அறவாசாண்டது - புண்ணிய தானஞ் செய்தது. 'ஆங்கவன் றன்னை' என்றும் பாடம்.

உகங. தெய்வம் - தீவதிலகை.

இனிமுணலைத்தோண்டித் தன்பழைய உடம்பைக்கண்டு புண்ணியராசன் வருந்துதலும் மணிமேகலை அவனைத்தேற்றுதலும் கூறப்படும்.

உகரு. தூ - தூய்மை. அகழ - தோண்ட.

உகசு. ஊன்பிணியவிழவும்-தசையின் பிணிப்புநீங்கவும்.

உகஎ. தானென்றது - யாக்கையை. பிணியவிழா - கட்டவிழாத.

உகஅ. வெள்ளிய சுண்ணச்சாந்தால் வேயப்பட்டு அவ்விடத்து இருத்தல்போல இருந்த. 'வேய்ந்தவ ரிருக்கையின்' என்றும் பாடம்.

உக௯. படிவம் - வடிவம்.

உஉஉ. ஈங்கு - இத்தீவத்திற்கு.

உஉங. மறபிறப்பு - பழம்பிறப்பு.

உஉச. அந்தாத்தீவினும் - இரண்டாயிரம் சிறுதீவுகளினும், அகன்பெருந்தீவினும் - நான்கு பெருந்தீவுகளினும்.

உஉரு. பெயர் - புகழ்.

உ௨ - உஉரு. நின்னையீங்கழைத்தது உணர்த்தினிறுத்தற் பொருட்டேயென்க.

உஉஎ. உலகத்திற் குற்றந்தீர்த்தற்கு பொருளேயிராது; எல்லாவுயிர்களும் குற்றமற்றனவாமென்றபடி. பிற - இடைச்சொல். புரை - குற்றம்.

உஉசு - உஉஎ. இவ்வடிகளின் பொருள், "மன்னவ னெப்படி மன்னுயிரப்படி" என்னும் பழமொழியின் பொருளை விளக்கிற்று.

கறமெனப் படுவ தியாதெனக் கேட்பின்
மறவா திதுகேண் மன்னுயிர்க் கெல்லா
௨௩0 முண்டியு முடையு முறையுளு மல்லது
கண்ட தில்லெனக் காவல னுரைக்கு
மென்னாட் டாயினும் பிறர்நாட் டாயினு
நன்னுத லுரைத்த நல்லறஞ் செய்கே
னென்பிறப் புணர்த்தி யென்னைநீ படைத்தனை
௨௩௫ நின்றிற நீங்க லாற்றேன் யானெனப்
புன்கண் கொள்ளனீ போந்ததற் கிரங்கிநின்
மன்பெரு நன்னாடு வாயெடுத் தழைக்கும்
வங்கத் தேகுதி வஞ்சியுட் செல்வனென்
றந்தரத் தெழுந்தன ளணியிழை தானென.

ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்தகாதை முற்றிற்று.

௨௩0. உண்டிமுதலியவற்றையல்லாமல். உறையுள் - இருப்பிடம்; "பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர் - தொகுத்தவற்று ளெல்லாந் தலை" என்பது திருக்குறள், ௩௨௨.

௨௩௧. கண்டதில்லென - கண்டதில்லையென்று சொல்ல.

௨௨௮-௨௩௧. அறமெனப்படுவது எல்லாவுயிர்கட்கும் உண்டிமுதலியவற்றை யீதலையன்றி வேறுகண்டதில்லை யென்று மணிமேகலைசொல்ல; உண்டி முதலியவற்றை யீதலே யறமென்றபடி.

௨௩௨. ஆயினும்-எண்ணிடைச்சொல்.

௨௩௩. நன்னுதல் உரைத்த - நீசொல்லிய. செய்கேன் - செய்வேன்.

௨௩௪. என்பிறப்பு உணர்த்தி - என்பழம்பிறப்பை யறிவித்து. பழம்பிறப்புணர்ந்து நல்லறம் பூணுதற்குரிய விசேடவுணர்வினனாதற்குக் காரணமாயிருந்ததுபற்றி, 'என்னைநீ படைத்தனை' என்றான். இது, "நானவன்றன்மகள்" (சிலப்பதிகாரம், வாழ்த்துக்காதை, "தென்னவன்") என்றாற்போன்றது.

௨௩௫. நின்னிடத்தினின்றும் பிரியும் வன்மையில்லேனென்று அரசன் சொல்ல.

௨௩௬. புன்கண் கொள்ளல் நீ - நீ துன்பங்கொள்ளாதே. போந்ததற்கு இரங்கி - நீ இங்குவந்ததற்கு வருந்தி.

௨௩௭. நாடு உன்னையழைக்கும்.

௨௩௬ - ௨௩௭ :—௨௫ - ம் காதை, ௧௩0-௧௩௧.

௨௩௮. ஏகுதி - போவாய்.

௨௩௯. அந்தரத்து-ஆகாயத்தில். அணியிழை - மணிமேகலை.

௧ - ௨௩௯. அரசன், புகுந்து வணங்கிக் கேட்டு, 'இவள் யார்' என்ன, கஞ்சு

கன், 'ஈங்குவந்தனன்' என்றலும், இள
ங்கொடி, 'வருவாய்' என்று புகன்று
எழுந்து இழிந்து போகி வலங்கொண்டு
பீடிகையைக்காண்டலும், அதனைத்தொ
ழுது அவன் வலங்கொள்ள, அப்பீடிகை
உணர்த்த, பணிந்து, 'போன்றது' என்
று எத்தி வலங்கொண்டு இன்னணமாக,
இறைவனும் விட்டுப் புக்குக் கேட்டு
எய்தி நினைந்து கள்ளாட்டிகழ்ந்து சா
ற்றி, 'விளைந்தது' என்று கூற, மந்திர்
சனமித்திரன், தொழுதேத்தி 'மன்னவ
மதிமாறோர்ந்தனை' என்று முதுமொழி
கூற, முதல்வன் கேட்டு, 'காத்தல் நின்
கடன்' என்று கூறிக் கூஉய்க் கலையெ
ய்தி எறினன்; அக்கலம், சென்று சார்ந்
திறுத்தலும், பூங்கொடி, பொருந்தி
மகிழ்வெய்தி வலஞ்செய்து, 'பீடிகை
இது' எனக்காட்ட, மன்னவன் வல
ங்கொண்டேத்தினன்; அவனுக்குப் பீடி
கை பிறவியைக்காட்ட, மன்னவன், 'மற
ந்துவாழேன்' என்று எத்தி மணிமேகலை
யுடன் எழுந்து சென்று இருப்ப, தெய்
வதம் கண்டு வந்தேத்தி, 'பெரியோய்,
வந்தனை; உடலென்பு இவைகாண்; என்
புயிவைகாண்; காணாய்; கொன்றாய்;
கொன்றாய்; ஆயினை; மடவானல்லாய்,
நகர் கடல்வயிறு புக்கது; காரணங்கே
ளாய்; மணிமேகலாதெய்வம் சாபமிட்ட
னள்; இதுபட்டது; உலகமன்னவன்
போயினன்; தாயரும் புக்கனர்; கேட்
கவுறுகுவையாயின் வஞ்சியுட் கேட்பை'
என்று தெய்வம் போயபின், மன்னவன்
இரங்கிப் படிவ நோக்கி மயங்க, மணி
மேகலை எழுந்து, 'கண்டது இல்' என,
காவலன் உரைக்கும்; அங்ஙனம் உரைப்
பவன், 'நீங்கலாற்றேன் யான்' என, அ
ணியிழை, 'ஏகுதி; செல்வன்' என்று
எழுந்தனனென வினைமுடிவுசெய்க.

## இருபத்தாறாவது

# வஞ்சிமாநகர்புக்ககாதை.

[இருபத்தாறாவது மணிமேகலை கண்ணகிகோட்டமடைந்து வஞ்சிமாநகர் புக்கபாட்டு.]

அணியிழை யந்தர மாறா வெழுந்து
தணியாக் காதற் றாய்கண் ணகியையுங்
கொடைகெழு தாதை கோவலன் றன்னையுங்
கடவு ளெழுதிய படிமங் காணிய
௫ வேட்கை துரப்பக் கோட்டம் புகுந்து
வணங்கி நின்று குணம்பல வேத்தி
யற்புக்கட னில்லாது நற்றவம் படராது
கற்புக்கடன் பூண்டு நுங்கடன் முடித்த

---

௧. அணியிழை - மணிமேகலை.

௨. தணியா - குறையாத. தாய் கண்ணகி - தாயாகிய கண்ணகி.

௩. கொடைகெழுதாதைகோவலன் - ஈதல்பொருந்திய தாதையாகியகோவலன்; கோவலன் கொடையிற் சிறந்தவனென்பது, கீரிப்பிள்ளையை அறியாது கொன்ற கணவனால் நீப்புண்ட பார்ப்பனியின் கொலைப்பாவ நீங்குதற்குத் தருமாசனத்தோருரைத்த நூல்வழியே தானஞ்செய்து அப்பார்ப்பனியைக் கணவனொடுகூட்டிப் பாதுகாத்தானென்றற்றொடக்கத்துச் சரித்திரங்களால் நன்கு புலப்படும்; இதனை, சிலப்பதிகாரம், அடைக்கலக்காதையிற் காண்க.

௪. (இமயமலைச்சிலையால்) தெய்வமாகப்பண்ணிய வடிவத்தைத் தரிசித்தற்பொருட்டு; "கைவினை முற்றிய தெய்வப் படிமம்" (நடுகற்காதை, ௨௨௮.) என்று சிலப்பதிகாரத்து வந்திருத்தல் காண்க. 'படிவங்காணிய' என்றும் பாடம்.

௫. வேட்கை துரப்ப - ஆசை செலுத்துதலால். கோட்டம் - கோயில்; இது சேரன் செங்குட்டுவனாற் கட்டுவிக்கப்பட்டது.

௭. 'அற்புக்கடன்' என்பதுமுதலியன மணிமேகலைவார்த்தை. அற்புக்கடன்- காதலனிறப்ப உடனிறத்தலும் தீப்பாய்தலும். நற்றவம்படர்தல் - நல்லதவவழியிற்சேறல்; அஃதாவது கைம்மைநோன்பைநோற்று உடம்பை வருத்துதல்.

௮. கற்புக்கடன் பூண்டு - கற்பைக் கடனாக மேற்கொண்டு; "கற்புக்கடம் பூண்ட வித்தெய்வ மல்லது, பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்" (அடைக்கலக்காதை, ௧௪௩ - ௧௪௪) எனவும், "தற்பயந்தாட் கில்லைத் தன்னைப் புறங்காத்த, வெற்பயந் தாட்கு மெனக்குமோர் சொல்லில்லை, கற்புக் கடம்பூண்டு காதலன் பின்போந்த, பொற்றொடி நங்கைக்குத் தோழிநான் கண்டீர்" (வாழ்த்துக்காதை) எனவும் இவ்வண்ணம் கண்ணகியை முறையே கவுந்தியடிகளும் அடித்தோழியும் சிறப்பித்துப் பாராட்டி யிருத்தல் காண்க; சிலப்பதிகாரம். கண்ணகிகற்பை, மறக்கற்பென்றும், சீறியகற்பென்றுங் கூறுவர். நும் கடன்முடித்தது - உம்முடையகடனை நிறைவேற்றியது; என்றது, இங்ஙனே மதுரையை அழற்படுத்திச் சிதைத்துப் பதினான்காநாளிற் கோவலனைச் சென்று கூடியதை யுணர்த்திற்று.

௭ - ௮. இவ்வடிகளின்கருத்து இன்ன

தருளல் வேண்டுமென் றழுதுமுன் னிற்ப
௧௦ வொருபெரும் பத்தினிக் கடவுளாங் குரைப்போ
ளெம்மிறைக் குற்ற விடுக்கண் பொறாது
வெம்மையின் மதுரை வெவ்வழற் படுநாண்
மதுரா பதியெனு மாபெருந் தெய்வ
மிதுநீர் முன்செய் வினையின் பயனாற்
௧௫ காசில் பூம்பொழிற் கலிங்கநன் னாட்டுத்
தாய மன்னவர் வசுவுங் குமரனுஞ்
சிங்க புரமுஞ் செழுநீர்க் கபிலையு
மங்காள் இன்றோ ரடற்செரு வுறுநாண்
மூவிரு காவத முன்னுற ரின்றி
௨௦ யாவரும் வழங்கா விடத்திற் பொருள்வேட்டுப்
பல்கலன் கொண்டு பலரறி யாம
லெல்வளை யாளோ டரிபுர மெய்திப்
பண்டக் கலம்பகர் சங்கமன் றன்னைக்

தாதலை, "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி, யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா, தின்னுயி ரீவ ரீயா ராயி, னன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர், நளியெரி புகாஅ ராயி னன்பரோ, டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர், பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத், தத்திறத் தாளு மல்லளெம் மாயிழை, கணவற் குற்ற கடுந்துயர் பொறாஅள், மணமலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக், கண்ணீ ராடிய கதிரிள வனமுலை, திண்ணிதிற் றிருகித் தீயழற் பொத்திக், காவலன் பேரூர் கனையெரி யூட்டிய, மாபெரும் பத்தினி" (உ-ம் காதை, சஉ-௫௫) என்று இந்நூலில் முன்பு வந்திருத்தலாலுணர்க.

௯. 'அழுதன ணிற்ப' என்றும்பாடம்.

௭-௯. அணியிழை எழுந்து புகுந்து வணங்கிநின்று எத்தி அருளல்வேண்டுமென்று அழுது நிற்பவென்க.

௧௦. பத்தினிக்கடவுள் - கண்ணகி.

௧௧. 'எம்மிறைக்கு' என்பது முதலியன, பத்தினிக்கடவுளாகிய கண்ணகிவார்த்தை. இறை - கோவலன். இடுக்கண் - துன்பம்; ஈண்டுக் கொலை.

௧௨. வெம்மையின் - கோபத்தால். மதுரை - மதுரையை. படுநாள் - படுத்துநாள்; விகாரம்.

௧௩. மதுராபதியென்பது மதுரையம்பதியின் அதிதேவதையின் பெயர்; "மதுரா பதியென்னு மாது" என்றார் இளங்கோவடிகளும்.

௧௪. 'இதுநீர்' என்பதுமுதலியன, மதுராபதி தனக்குக் கூறியதைக் கொண்டு கூறும் பத்தினிக்கடவுள் வார்த்தை. வினை - தீவினை. பயன் - பிரயோசனம். இது பயன். ஆல் - அசை.

௧௫. காசு - குற்றம்.

௧௬. ஞாதியராகிய வசுவும் குமரனும்.

௧௭. கபிலை - கபிலபுரம். 'செழுநீர்க் கபிலை' என்றும் பாடம்.

௧௬-௧௭. சிங்கபுரம் வசுவுக்கும், கபிலை குமரனுக்கும் உரிய நகரங்கள்.

௧௮. ஆங்கின்றோர் - பெயர். நாள் - நாளில்.

௧௯. மூவிருகாவதம்-ஆறுகாதம். முன்னூர் - முற்படுவோர்.

௨௦. வழங்கா - செல்லாத. பொருள் வேட்டு - பொருளை விரும்பி.

௨௧. கலன் - ஆபரணம்.

௨௨. எல்வளை - ஒளிபொருந்தியவளையையுடையாள்; என்றது நீலியை. அரிபுரம் - சிங்கபுரம்.

௨௩. பண்டக்கலம் - பொன்னாலாகிய அணிகலம்; பண்டம் - பொன்; பண்டமும் கலமுமாம்; ஈண்டுப் பண்டம் -

